# நான் கண்ட காந்தி


ஆசிரியர் :

லூயி பிஷர்

தமிழாக்கம் :

டி. ஆர். அருணாசலம்






**நவயுகப் பிரசுராலயம்**

காரைக்குடி :: சென்னை

# பதிப்புரை

லூயி பிஷர் என்ற அமெரிக்க அறிஞர் காந்தியடிகளுடன் சேவாகிராமத்தில் தங்கி, அவரின் வாழ்க்கை முறையையும், விவாத நேர்மையையும் போற்றி ஆங்கிலத்தில் எழுதியுள்ள புத்தகத்தின் தமிழாக்கமே இது.

பிரபல பத்திரிகையாளர், அதுவும் அமெரிக்கர் ஒருவர், இந்தியாவின் தந்தையை - இந்தியாவையே படம் பிடித்துக் காட்டுவதைத் தமிழர்களும் காணவேண்டும் என்ற ஆர்வமும் ஆசையும் உந்த இதைத் தமிழாக்கத் துணிந்தேன். 1942 ஆகஸ்டில், அரசாங்கத்தின் அன்புக்குப் பாத்திரனாயிருந்த அந்நாளில், வேலையற்றிருந்த சூழ்நிலையில், இப்பணியைத் துவக்கினேன். உண்மையில் சூழ்நிலைதான் இம் முயற்சிக்கு அடிகோலியது. இத்தகைய சூழ்நிலையை உண்டாக்கித் தந்த பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு நன்றி செலுத்தாதிருக்க முடியாது.

நெடு நாட்களுக்குமுன் வெளிவந்திருக்கவேண்டிய இப்புத்தகம் தவிர்க்க முடியாத சில காரணங்களால் இப்பொழுதுதான் வெளிவருகிறது. வெளிநாட்டார் ஒருவரின் பட்சபாதமற்ற அபிப்ராயத்தைக் கொண்ட இப்புத்தகத்திற்கு மக்களிடை நல்ல வரவேற்பிருக்கும் என்று எண்ணுகிறேன்.

இயன்றளவு மூலத்தின் சுவை குன்ருது, எல்லோரும் புரிந்து கொள்ளவேண்டும் என்ற எண்ணத்தோடு, வழக்கத்திலும் பழக்கத்திலும் உள்ள சொற்களைக் கையாண்டிருக்கிறேன். இதைத் தமிழாக்கும் காலத்தில் எனக்குதவிய நண்பர்களான தொழிலாளர் தலைவர் திரு. குப்புசாமி M. L. A. அவர்களுக்கும் சோழவந்தான் திரு. டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கும் எனது நன்றி.

சென்னை
15—10—47

டி. ஆர். அருணசலம்

## ஆசிரியர் குறிப்பு

இச்சிறிய புத்தகம் பிரசுரமாவது என் குற்றத்தினால் அல்ல. நான் காந்திஜியுடன் கழித்த ஒரு வாரத்தில் நடந்தவைகளை ஜாக்கிரதையுடன் குறித்து வைத்திருந்தேன். அக் குறிப்புகள் தொலைந்தோ, அழிந்தோ போய் விடாமலிருப்பதற்காக நான் அமெரிக்கா திரும்பியதும் அவற்றைச் சுத்தமாக எழுதி வைத்தேன். பல நண்பர்கள் அக்கையெழுத்துப் பிரதியைப் பார்த்தனர்; அதைப் பிரசுரிக்க வேண்டுமென என்னை வற்புறுத்தினர். என்னுடைய இந்திய விஜயத்தின் விவரங்கள் அதில் பூர்த்தியாக இல்லை என்று வாதித்தேன். இந்தியாவில் இன்னும் பல முக்கியமான பேச்சுக்களை நான் நடத்தியதாகவும், ஆனால் அவை பதிவுசெய்யப்படாது போயின என்றும், காந்திஜியை மட்டுமே குறிக்கும் புத்தகம் இந்தியாவைப் பற்றிய முழு விவரத்தையும் தரும் புத்தகம் ஆகாது என்றும் நான் கூறினேன் "அது சரிதான், முன்னுரையில் அப்படிச் சொல்லுங்கள்" என்று என் நண்பர்கள் கூறினர். எனவே இப்பொழுது அதைக் கூறுகின்றேன்.

நான் காந்திஜியுடன் நடத்திய பேச்சுக்கள் பொருள் நிறைந்த, உற்சாக மூட்டக்கூடிய ஓர் அனுபவம். புது டில்லியில் வசிக்கும் வைஸ்ராய் லார்டு லின்லித்கோ என்னிடம் "இந்தியாவில் உள்ள மகோன்னதமான பொருள் காந்திஜீதான்" என்றார். அது உண்மை. காந்திஜீ ஓர் ஒப்பற்ற பிறவிதான். அவருடனும் அவர் மனத்துடனும் தொடர்பு கொள்வதால் உள்ளக் கிளர்ச்சி ஏற்படுகிறது. அவர் என்னிடம் கூறியவைகளில் அநேகமாக எல்லாவற்றையும் நான் சுருக்கெழுத்து மூலம் குறிப்பு எடுத்துக்கொண்டேன். பின்கண்ட பக்கங்களில் நான் அவைகளை அப்படியே தருகிறேன். காந்திஜீயைப் பற்றிய என் சொந்த விமர்சனம் கடைசியாகக் கொடுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

# நான் கண்ட காந்தி

ஜூன் 3, 1942

உஷ்ணம், தூசி மிகுந்த நிலையில் புது டில்லியிலிருந்து எக்ஸ்பிரஸ் ரயிலில் 27 மணி நேரம் பிரயாணம் செய்து இரவு 8-30 மணிக்கு மத்திய இந்தியாவில் ஒரு சிறு நகரமாகிய வார்தா வந்தடைந்தேன். காந்திஜீயைச் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்யுமாறு ஜவாஹர்லால் நேருவைப் பத்து நாட்களுக்கு முன் வேண்டியிருந்தேன். "காந்திஜீ உங்களைச் சந்திப்பார்" எனச் சின்னாட்களுக்குப் பிறகு வார்தாவிலிருந்து நேரு எழுதியிருந்தார். சந்திப்பு நேரத்தை நிச்சயித்துக்கொள்வதற்குக் காந்திஜீயின் காரியதரிசி மகாதேவதேசாயுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ளுமாறும் நேரு தெரிவித்திருந்தார். "எந்த நேரமானாலும் சரியே" என நான் தேசாய்க்குத் தெரிவித்தேன். "வரவேற்கிறேன்—மகாதேவதேசாய்" என அவர் தந்தி மூலம் பதிலளித்தார்.

வார்தாவில் ரயிலினின்று நான் இறங்கியதுமே தூய வெள்ளை உடை உடுத்த இளைஞரொருவர் "நீங்கள் தான் பிஷரா" என வினவினார். நான் "ஆம்" என்று சொன்னதும், என்னை அழைத்துச் செல்லவே அவரைக் காந்திஜீ அனுப்பியிருப்பதாகத் தெரிவித்தார். டாங்கா ஒன்று காத்திருந்தது. இரண்டு சக்கரங்கள் உள்ள ஒற்றைக் குதிரை வண்டியே டாங்கா எனப்படுவது. அதில் பிரயாணிகள் வந்த வழியைப் பார்த்து உட்கார்ந்திருப்பார்கள். அவ்விருட்டில் எங்கள் டாங்கா ஊருக்கு வெளியேயுள்ள வீடொன்றை அடைந்தது. கோடீஸ்வர

ரான தேசாபிமானி ஒருவரால் காங்கிரஸ் கட்சியின் உபயோகத்திற்கென நன்கொடையாக அளிக்கப்பட்டதே அவ்வீடு. அவ்வீட்டின் திறந்தவெளியுள்ள மாடியின் முன்வாரத்தில் நான் படுத்தேன். இரவெல்லாம் காங்கிரஸ் மூவர்ணக்கொடி யொன்று தலைதூக்கிப் பறந்துகொண் டிருந்தது. பறக்கும் அதன் ஒலி தந்தி யடிப்பதை நினைவூட்டிற்று.

ஜூன் 4, 1942

அதிகாலையில் எழுந்து காந்திஜீயின் பல் வைத்திய ருடன் டாங்கா ஒன்றில் சேவாகிராமத்திற்குப் புறப்பட் டேன். சிறைப்பட்டிராத காலத்தில் காந்திஜீ வசிப்பது இக்கிராமத்திலேதான். "ஆங்கிலேயர் இதமறிந்த எஜமானர்களாகவே இருந்திருக்கிருர்கள்" என்று பல் வைத்தியர் கூறினுர். காந்திஜீயைப் பற்றிய அவரின் எண்ணத்தை நான் அறிய முயற்சித்தேன். ஆனுல் அவரோ அரசியலைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்.

டாங்கா நின்றது. நான் கீழே இறங்கினேன். தூய வெள்ளை உடை உடுத்த உயரமான மாநிற உருவம்— காந்திஜீ நின்றுகொண்டிருந்தார். நான் துடி நடையில் அவரை அணுகினேன். இரு பெண்களின் உதவியுடன் அவர் வந்துகொண்டிருந்தார். முழங்கால் வரை உடை உடுத்துக்கொண்டும், பாதங்களில் செருப்பணிந்தும், தோளில் துண்டைப் போர்த்துக்கொண்டும், தலையின்மீது வெண்மையான கைக்குட்டை ஒன்றை மடித்து வைத்துக் கொண்டும் தோற்றமளித்தார். "மிஸ்டர் பிஷர்" என ஆங்கிலேயரைப் போன்று அழைத்துக் கைகுலுக்கினுர். பின்னர் பல் வைததியருக்கு வந்தனம் செலுத்தித் திரும்பினுர். நாங்கள் அவர்பின் நடந்து விசிப்பலகை ஒன்றின்மீது அமர்ந்தோம். "உங்களைப் பற்றியும்

உங்கள் புத்தகத்தைப் பற்றியும் ஜவாஹர்லால் என்னிடம் கூறியுள்ளார். உங்கள் வரவால் நாங்கள் மகிழ்ச்சியடைகிறோம். நீங்கள் இங்கு எவ்வளவு காலம் தங்குவீர்கள் ?" எனக் காந்திஜீ கேட்டார். சில நாட்கள் தங்க இயலும் எனக் கூறினேன்

"அப்படியானால் நாம் நன்கு பேசமுடியும்" எனக் குதூகலத்துடன் அவர் சொன்னார்.

இளைஞரொருவர் வந்து அவருடைய பாதங்களைத் தாழ்மையுடன் வணங்கினார். "பஸ், பஸ்" எனக் காந்திஜீ மெதுவாகக் கூறினார். அதன் அர்த்தம் "போதும்" என்பதாக இருக்கும் என யூகித்தேன். எனது யூகம் சரியெனப் பின்னர் தெரிந்து கொண்டேன். தொடர்ந்தாற்போல் மற்றும் இளைஞர் இருவர் அவ்வாறே செய்தனர். அவர்களையும் அவ்வாறே காந்திஜீ தடுத்தனுப்பினார்.

"வசிப்பதற்கு இக் கிராமத்தை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்" எனக் கேட்டேன். வேறொருவர் அவருக்காகத் தேர்ந்தெடுத்ததாகச் சொல்லி, அவர் பெயரையும் குறிப்பிட்டார். நான் அதைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லையாதலால் அதைப் பற்றிப் பேசாமல் விடுத்தேன். இந்தியப் பெயரை நான் புரிந்துகொள்ளவில்லை யென்பதை அறிந்து, மீராபென் என்பது அவருடன் நீண்ட காலமாக இருந்துவந்த மிஸ் ஸ்லேடு என்ற ஆங்கிலப் பெண்மணியின் பெயரென்று அவர் எனக்கு விளக்கினார். இந்தியாவின் மத்திய பாகத்திலுள்ள கிராமமொன்றில் அவர் வசிக்கவேண்டுமென்பது அவளுடைய நோக்கமாக யிருந்தது எனவும், அவளையே அத்தகைய கிராமம் ஒன்றைப் பொறுக்கும்படி கேட்டுக்கொண்டதாகவும் அவர் கூறினார். சுகாதாரக்கேடு மிகுந்ததாயும் அமைதியற்றதாயும் இருந்ததால் கிராமத்தின் உட்பகுதி

யில் வசிக்க அவர் விரும்பவில்லை. ஊருக்கு வெளியே இருப்பது மிக நல்லது என்பது அவர் எண்ணம் போலும். பொய்ப்பற்களைப் பற்றிப் பல் வைத்தியர் பேச ஆரம்பித்தார். தாம் அணிந்துள்ள பற்கள் நன்றாகக் கடிக்க வரவில்லை என்று காந்திஜீ குறை கூறினார். பெண்ணொருத்தி மூன்று செயற்கைப் பல் லமைப்புகளையும், பித்தளைக் கோப்பை ஒன்றில் தண்ணீரையும் கொண்டு வந்தாள். நான் வெளிச் செல்லத் தீர்மானித்தேன். "காலை மாலை இவ்விரு வேளைகளில் உலாவும் போதும் மற்ற சந்தர்ப்பங்களிலும் நாம் பேசலாம்" எனக் காந்திஜீ என்னிடம் கூறினார். அவரை வணங்கி விட்டு நான் அகன்றேன்.

சேவாகிராமத்தின் விருந்தினர் விடுதியில் வசிக்கும் உரிமை எனக்களிக்கப்பட்டது. அது ஒரே அறையை யுடைய மண்குடிசை: மண்தரை, மூங்கில் கூறை. அவ்வறையில் அநேக படுக்கைகள் உள்ளன. அருகில் சிறிய சமையலறையும், கல் பாவப்பட்ட ஸ்நான அறையும் இருந்தன. ஸ்நான அறையில் இரண்டு தகரத் தொட்டிகளும், அநேக தகர, பித்தளை வாளிகளும் வைக்கப்பட்டிருந்தன. தகரத் தொட்டிகளில் "பாய்"—வயதான வேலைக்காரி—கிராமக் கிணற்றிலிருந்து பானைகளில் தண்ணீரைத் தன் தலையில் சுமந்துவந்து நிரப்பிவைப்பாள். குர்ஷித்பென் என்னைக் கவனித்துக் கொள்வாளெனக் காந்திஜீ என்னிடம் கூறியிருந்தார். மிஸ். குர்ஷித் நௌரோஜீ ஏறக்குறைய நாற்பது வயதுள்ள பார்ஸிப் பெண்மணி. முரடான மஞ்சள் நிறக் கதர்ச் சேலையொன்றை அவள் உடுத்திருந்தாள்; ஆறு வருட காலம் பிரான்ஸிலும் இத்தாலியிலும் சங்கீதம் கற்றவள்; பதினைந்து வருடங்களுக்கு முன் தனது சங்கீதத் தொழிலைக் கைவிட்டு, அன்றுமுதல் காந்திஜீயின் நிரந்தர

சிஷ்யையாளுள். அவளுடைய குடும்பத்தார் கோடீசுவரர்கள். முதல் உலக மகா யுத்த சமயத்தில் அவளுடைய பாட்டனுர் 95-வது வயதில் காலமானுர். பிரிட்டனிலுள்ள பொதுமக்கள் சபையின் முதல் இந்திய அங்கத்தினர் அவர்தான். சக்லத்வாலா என்ற மற்ெருரு பார்ஸி—கம்யூனிஸ்ட்—பிரிட்டிஷ் பாராளும் மன்றத்தின் மூன்ருவது, கடைசி இந்திய அங்கத்தினர்.

குர்ஷித்பென் புத்திசாலி; வேலையில் சுறுசுறுப்புடையவள். இந்திய தேசீயம் இங்கு அளவுக்கு மிஞ்சி வற்புறுத்தப்படுகின்றது என்று நான் அவளுடன் வாதிப்பேன். சுதந்திர இந்தியாவில் பாஸிஸம் தோன்றிவிடும், அதனுல் பிரிட்டிஷ் ஆட்சியில் இருப்பதைவிடக் குறைவான சுதந்திரமே இருக்கும் என நான் தர்க்கிப்பேன். அவள் எனது காரணங்களை மறுப்பாள். முதலில் பிரிட்டிஷார் வெளியேற வேண்டுமென அவள் விரும்புகிருள். இந்தியர் தங்கள் பிரச்னையைத் தாங்களே தீர்த்துக்கொள்வார்கள் என்பது அவள் கருத்து.

"நெடு நாட்கள் தங்கிவிட்ட விருந்தினர்கள் வீட்டைவிட்டு வெளியேறும் நன்ளுளில் தான் அடையப்போகும் மகிழ்ச்சியைத் தவிர வேறொன்றையுமே நினைக்கமுடியாத வீட்டுக்காரியின் நிலையில் நாங்கள் இருக்கிறோம். நாங்கள் தனித்து வாழ விரும்புகிறோம்" என்று குர்ஷித் கூறினுள்.

குர்ஷித் என்னைக் காந்தி ஆசிரமவாசிகளிடம் அழைத்துச்சென்ருள். அவர்களில் சிலர் காங்கிரஸின் நிரந்தர ஊழியர்கள், சிலர் காந்திஜீயின் காரியதரிசிகள், சிலர் தலைவரின் பாதகமலங்களைப் பூஜித்துச் செல்ல வந்தவர்கள். அவர்கள் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருக்கிறவர்கள்; பல்வேறு பாஷைகளைப்

பேசுகிறார்கள். எனவே அவர்கள் தங்களுக்குள் ஆங்கிலத்திலேயே அளவளாவிக்கொள்ளவேண்டி யிருக்கிறது. குழந்தைகள் மிக அழகாக இருக்கின்றன. நான் மகாதேவ தேசாயின் குடிசையின் முன் நின்றேன். அவர் வழுக்கைத் தலையுடனும் தொப்பை வயிறுடனும், இடுப்புத் துணிமட்டுமே அணிந்தவராய்த் தரையின்மேல் பாயில் உட்கார்ந்து பழைமையான சர்க்கா ஒன்றில் நூல் நூற்றுக்கொண் டிருப்பதைக் கண்டேன். அவருடைய மனைவி மிகவும் சுறுங்கல் விழுந்த சேலை ஒன்றை உடுத்துக்கொண்டு அடுத்த அறையில் நூல் நூற்றுக் கொண்டிருந்தாள். தேசாய் தினசரி ஐநூறு கஜம் நூற்கிறார். சர்க்கா எந்த விவசாயியும் செய்யவோ அல்லது மலிவாக வாங்கவோ கூடிய மிகச் சிறிய இயந்திரம். தேசாய் அதிகமாகப் பிரயாணம் செய்கிறதாகவும் ரயிலில் நூற்கிறதாகவும் சொன்னார். ஆனால் வேறு யாரும் இதைப் போல் செய்வதில்லை என்பதை அவர் அறிவார். காந்திஜீயின் பிரசாரத்தாலும், தாமே செய்கையில் காண்பிக்கும் உதாரணத்தாலும் லட்சக்கணக்கான இந்திய விவசாயிகள் தம் வீட்டில் நூற்க ஆரம்பித்து, கிராமக் கைத்தொழில்களை விருத்தி செய்வதன்மூலம் பெரும்பாலும் நிர்வாணமாயிருக்க வேண்டிய கோடிக் கணக்கான மக்களுக்கு ஆடைகள் கொடுத்து வருகிறார்கள். "ஆனால், இப் பழக்கம் தேசம் பூராவிலும் பரவவில்லை; இந்தியாவின் தேசீய பொருளாதாரத் துறையில் நூற்றல் இன்னும் ஓர் அம்சமாகவில்லை" என்பதைத் தேசாய் ஒப்புக்கொண்டார்.

காலை 11-மணிக்கு, நான் மிகுந்த பசியோடிருந்த பொழுது குர்ஷித் என்னைக் காந்திஜீயின் விடுதிக்கு அழைத்துச் சென்றாள். அது விருந்தினர் விடுதியிலிருந்து ஏறக்குறைய 100 கஜ தூரத்தில் இருக்கிறது.

அது ஒரே தளத்தை உடையது (மாடியில்லை). அது பிரப்பம்பாய்களால் அடைக்கப்பட்டிருந்தது. கூரையில் சாதாரண நாட்டு ஓடுகள் வேயப்பட்டிருந்தன. நான் எனது படுக்கையறைச் செருப்பை வெளியில் உள்ள சிமிண்டுப் படியில் விட்டுவிட்டு உள்ளே சென்று வெளியேயுள்ள சிறிய அறை ஒன்றில் இருந்தேன். அங்கிருந்து அந்த வீட்டின் முக்கிய அறையை நான் பார்க்க முடிந்தது. மண் தரையில் விரிக்கப்பெற்ற விரிப்பில் காந்திஜீ படுத்துக்கொண் டிருந்தார். அவருடைய சிஷ்யர்களுள் ஒருவர் அந்தப் படுக்கையின் அருகில் தரையில் உட்கார்ந்து ஒரு கயிற்றை இழுத்துக்கொண் டிருந்தார்.* அதனால் கூறையிலிருந்து தொங்கிய கருநிறத் துணியையுடைய பலகையானது அசைந்துகொண் டிருந்தது. இது மின்சார விசிறிக்குப் பதிலாக உபயோகிக்கப்படுவதெனத் தெரிகிறது. அக் கிராமத்தில் மின்சாரம் இல்லை. காந்திஜீ எழுந்து, "இப்பொழுது உங்களுடைய செருப்பையும் தொப்பியையும் அணிந்து கொள்ளுங்கள். அவையிரண்டும் இங்கு மிக அவசியம். சூரிய வெப்பத்தால் தாக்கப்பெறாது கவனித்துக்கொள்ளுங்கள்" என்று என்னிடம் கூறினார்.

அவர் தமது தலையில் போட்டுக்கொள்வதற்காக, நனைத்து மடித்த வெண்மையான துணி ஒன்றைப் பெண்ணொருத்தி கொண்டு வந்தாள். பிறகு அவருக்கு ஓர் அடி முன் சென்ற குர்ஷித்தின் மேல் ஒரு கையை வைத்துக்கொண்டு என்னிடம் நேச பாவத்துடன் "வாருங்கள் போகலாம்" என்றார். நாங்கள் இரண்டு வீடுகளைத் தாண்டிப் பாய்களால் கட்டப்பட்ட பொதுச் சாப்பாட்டுக் கூடத்துக்கு வந்தோம். காந்திஜீ செய்த

*ஆசிரியர் பங்காவைப் பார்த்ததில்லை. ஆதலால் அதை இவ்வாறு வர்ணிக்கிறார்.

தைப்போல் நானும் எனது செருப்பை வெளியே விட்டு விட்டுக் குர்ஷித்திடம் தொப்பியைக் கொடுத்தேன். அதை அவள் சுவரில் தொங்கவிட்டாள். நான் காந்திஜீ குறிப் பிட்ட இடத்தில் தரையில் உட்கார்ந்தேன். அவர் இருந்த இடத்திலிருந்து, நான் உட்கார்ந்திருந்த இடம் இரண்டு அடி தள்ளியிருந்தது. எங்களுக்கு மத்தியில் ஆஸ்தமா நோயால் கஷ்டப்படும் நரேந்திர தேவ் இருந்தார். அவர் காங்கிரஸோடு இணைக்கப்பட்டுள்ள இந்திய சோஷிய லிஸ்டுக் கட்சியின் தலைவர்களில் ஒருவர். நான் சுமார் ஓர் அடி அகலமுள்ள தடுக்கொன்றின் மேல் உட்கார்ந் தேன். காந்திஜீ தலையணை ஒன்றின்மேல் உட்கார்ந்தார். அவருக்கு இடது பக்கத்தில் அவருடைய பொக்கை வாய் மனைவி கஸ்தூரிபா இருந்தாள். அவளுக்கு வயது 70; அவருக்கு வயது 73.

மூன்று பக்கம் சுவர்களால் சூழப்பட்டு வாயிற் பக்கம் திறவையாயுமிருந்தது சாப்பாட்டுக் கூடம். உள் நுழையும் வாயிலுக்கு அருகில் ஜாடிகளும் சாப்பாட்டுத் தட்டுகளும் நிரம்பப் பெற்ற மேஜை ஒன்று இருந்தது. பெண்கள் தனியே உட்காருகிறுர்கள். கூரிய பார்வை யுடனும், வசீகரமான முகத்துடனும் கூடிய சில குழந்தை களைக் கண்டேன். அவர்களின் வயது மூன்றிலிருந்து எட்டுவரை இருக்கும். அவர்களெல்லாம் ஆசிரமவாசிக ளின் குழந்தைகள். சீக்கிரமாக ஒவ்வொருவரும் தங்களுக்கு முன்ஞல் வெண்கலத் தட்டுகளை எடுத்து வைத்துக்கொண்டார்கள். பல ஏவலாட்கள் சந்தடி யின்றி இங்குமங்குமாகத் தட்டுகளில் சாப்பாட்டைப் பரிமாறினுர்கள். காந்திஜீக்கு முன்ஞல் பல பானைக ளும் தட்டுகளும் வைக்கப்பெற்றன. அவர் அவற்றைத் திறந்து அருகில் உள்ளோருக்குப் பதார்த்தங்களைப் பரி மாற ஆரம்பித்தார். தண்ணீர் நிறைந்த டம்ளர் ஒன்று

எனக்குக் கொடுக்கப்பட்டது. காந்திஜி என்னிடம் காய் கறி அவியல் நிரம்பிய வெண்கலக் கிண்ணம் ஒன்றைக் கொடுத்தார். அரிந்த பசலைக் கீரையும், பிசைந்த காய் கறித் துண்டுகளும் அதில் இருக்கக் கண்டேன். பிறகு அவர் பாத்திரமொன்றைத் திறந்து அதிலிருந்த மெல்லிய, உறுதியான கோதுமைச் சப்பாத்திகளி லொன்றை எனக்குக் கொடுத்தார். பெண்ணொருத்தி என்னுடைய தட்டில் கொஞ்சம் உப்பை வைத்தாள்; பிறகு கிண்ணம் நிறையச் சூடான பாலைக் கொடுத்தாள். மறுபடியும் தோலுரித்து வெந்த இரண்டு உருளைக் கிழங்குகளுடனும் மெல்லிய, மிருதுவான வறுத்த கோதுமை ரொட்டிகளுடனும் அவள் திரும்பி வந்தாள். காந்திஜீ என் பக்கம் திரும்பிப் புன்முறுவலுடன், " நான் உங்களுக்குப் பரிமாறுகிறேன்; ஆனால் பிரார்த்தனை முடியும்வரை நீங்கள் சாப்பிடக் கூடாது" என்றார். "குழந்தைகள் கூட அவர்களின் உணவைத் தொட வில்லை என்பதைக் கவனித்து விட்டேனாதலால் நானும் தொடக் கூடாதென்பதை உணர்ந்தேன்" என அவரிடம் கூறினேன். அந்த அறையிலுள்ள முப்பது பேர்களும் வெண்ணிற உடை உடுத்துத் தரையில் உட்கார்ந்திருந் தனர். அவர்களுக்கு உணவு பரிமாறப்பட்டதே ஒழிய அவர்கள் அதை உண்ணவில்லை. சாப்பிடுகிறவர்கள் ஒருவர்க்கொருவர் உணவைத் தங்கள் கைகளாலேயே பரி மாறிக்கொண்டார்கள். மணி அடிக்கப்பட்டது. உடனே சுத்தமான உடை உடுத்திய திடகாத்திரமுள்ள ஒருவர் தட்டுகளில் பரிமாறுவதை நிறுத்திவிட்டு, கண்ணின் வெண்மை மாத்திரம் வெளியில் தெரியுமாறு கண்களை மூடிக்கொண்டு—இந்நிலையில் அவர் பார்வைக்குக் குருடர் போல் தென்பட்டார்—உயர்ந்த தொனியில் கீதம் பாட ஆரம்பித்தார். காந்திஜீ உள்பட எல்லாரும் அதில் கலந்து

கொண்டனர். பிரார்த்தனை "சாந்தி, சாந்தி, சாந்தி" என முடிவுற்றது. சாந்தி என்பதற்கு அர்த்தம் அமைதி எனத் தேவ் என்னிடம் கூறினார். காய்கறிகளை அள்ளிச் சாப்பிட என்னிடம் சிறு தேக்கரண்டி ஒன்று கொடுக்கப் பட்டது; ஆனால் பெரும்பாலோர் அவர்களுடைய கோதுமை ரொட்டிகளை நான்காக மடித்து அதனால் அப் பதார்த்தங்களை எடுத்துப் புசித்தனர். பெண்பணியாள் ஒருத்தி என்னுடைய கோதுமை ரொட்டியின்மேல் சிறிது நெய்யை ஊற்றினாள். போதுமான அளவு உப்பை உபயோகித்ததால் உணவு அவ்வளவு ருசியற்றதா யில்லை. காய்ச்சின பாலின் மணத்தை மாற்றக் கொஞ்சம் சர்க்கரை கொடுத்தனர். காந்திஜீ ஆட்டுப்பால் உபயோ கிப்பதை இப்போது நிறுத்திவிட்டார்; இந்தியா பூராவி லும் பசுவின்பாலை உபயோகிப்பதையே பெரிதும் ஆத ரிக்கிறார். இவ்வாறு செய்வதன்மூலம் கோசம்ரக்ஷணை அதிகரிக்கும் என்பது அவரது நம்பிக்கை.

தேவ், குர்ஷித், கஸ்தூரிபா ஆகியோர்க்கும் எனக்கும் பரிமாறிக்கொண்டே காந்திஜீ தாமும் உண்டார். அவருடைய கைகளும் விரல்களும் பருத்து, சீராக அமைந் திருந்தன. முழங்கால்கள் திடமானதாகவும் பருமனாகவும் இருந்தன. எலும்புகள் அகன்று வலிமையுடையன வாய்த் திகழ்ந்தன. உடம்பு மிருதுவாயும் சுத்தமாயும் இருந் தது. பானைகளில் கையை விட்டுத் தோண்டும்போது கைகள் சற்றும் நடுங்குவதில்லை. அவர் மனைவி அவருக்கு ஓலை விசிறியால் அடிக்கடி விசிறிக்கொண் டிருந்தார்; அமைதியும் அடக்கமுமே உருவாக அவர் விளங்குகிறார்.

சாப்பாட்டுக்கு இடையில் "நீங்கள் பதினன்கு வருடம் ருஷ்யாவில் வசித்திருக்கிறீர்களே, ஸ்டாலினைப் பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?" என்று காந்திஜீ கேட்டார். அச்சமயம் அதிக உஷ்ணமாயிருந்ததால் என்

உடம்பு கொதிப்பது போலிருந்தது. கைகளெல்லாம் பிசுபிசுவெனப் பசை ஒட்டியது போலிருந்தன. எனவே "மிகத் தகுதியுடையவர்; மிக இரக்கமற்றவர்" என்று சுருக்கமாகப் பதிலளித்தேன். "ஹிட்லரைப்போல் அவ்வளவு இரக்கமற்றவரா?" எனக் காந்திஜீ கேட்டார். "ஓரளவு" என்றேன். சிறிது நேரத்திற்குப் பிறகு காந்திஜீ மீண்டும் என்பக்கம் திரும்பி 'நீங்கள் வைசிராயைப் பார்த்தீர்களா' என்ருர். "ஆம்" என்றேன். அத்துடன் காந்திஜீ விஷயத்தை நிறுத்தி விட்டார். என்னுடைய கணுக் கால்கள் மரத்துவிட்டன. காரணம் சப்பணம்கொட்டி உட்கார்ந்து பழக்கமில்லாததுதான். இவ்வாறு உட்காருவதில் இந்தியர்கள் அநுபவம் பெற்றிருக்கின்றனர். நான் அதைக் கற்றுக் கொள்ளவில்லை. பின்பு, ஒருபக்கமாகச் சாய்ந்து உட்கார்ந்தேன். கொஞ்சம் சௌகரியமாக இருந்தது. "நீங்கள் ஓய்ந்து போனீர்கள் போலத் தோன்றுகிறது" என்று காந்திஜீ கூறினுர். "இல்லை, உணவு நன்ருயிருக்கின்றதே" என நான் பதிலளித்தேன்.

"நீங்கள் வேண்டிய அளவு தண்ணீர் பருகலாம். நாங்கள் அதை மிக ஜாக்கிரதையுடன் சுடவைப்பது வழக்கம். சரி, இப்பொழுது நீங்கள் மாம்பழத்தைச் சாப்பிடுங்கள்" என்ருர்.

மற்றவர்கள் மாம்பழத்தைச் சாப்பிடுவதை கவனித்த நான் என் வாழ்க்கையில் முதன் முதலாக இப்பொழுதுதான் மாம்பழம் சாப்பிடப் போகிறேன் எனக் கூறினேன். அதை முடித்ததும் நான் குளிக்க வேண்டியிருக்குமெனக் குர்ஷித் தெரிவித்தாள். மாம்பழத்தின் தோலை உரிக்க ஆரம்பித்தேன். காந்திஜீயும் மற்றவர்களும் சிரித்தனர். பொதுவாக, அவர்கள் அதைத் தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டு அது மிருதுவாகும் வரை கசக்கி,

பிறகு அதனுள்ளிருக்கும் சாற்றை உறிஞ்சுவார்கள் என வும், ஆனால், பழம் நயமானதா என்பதை யறிய அதன் தோலை உரித்தது சரிதான் எனவும் காந்திஜீ விளக்கினார். "நாங்கள் சாப்பிடுவதுபோல் நீங்களும் சாப்பிடத் துணிந் தது போற்றற் குரியது" என்றார் காந்திஜீ. நான் உணவை முடித்துக் கொண்டேன். காந்திஜீ எழுவதற்கு முன்பு நான் போகலாம் எனக் குர்ஷித் தலையினால் சமிக்ஞை செய்தாள். நான் அவரை வணங்கி எனது செருப்பையும் தொப்பியையும் எடுத்துக்கொண்டு வெளிச் சென்றேன். காந்திஜீ என்னை மூன்று மணிக்குப் பார்ப்பார் எனக் குர்ஷித் கூறினாள்.

பொதுவாக, இந்தியர்கள் கை குலுக்கிக் கொள் வதில்லை. அவர்கள் சந்திக்கும் பொழுதும் பிரியும் பொழுதும் தமது கைகளைக் கூப்பி இனிய புன்சிரிப்புடன் வணங்குகிறார்கள். இப்படிச் செய்யும்பொழுது அன்பு நிறைந்து மாசற்றவர்களாய்க் காணப்படுகின்றனர். நான் காந்திஜீயை வணங்கியபொழுது அவர் அவ்வாறே செய்து எனக்கு விடை கொடுத்தார்.

நான் வீடு திரும்பி 12-முதல் 1-மணிவரை தூங் கினேன். எழுந்தபொழுது உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியிருந்தது. ஸ்நான அறைக்குச் சென்று மூன்றாம் தடவையாகக் குளித்தேன். நின்றுகொண்டு வெண்கலப் பாத்திரத்தினால் தண்ணீரை என்மீது ஊற்றிக் கொண்டேன்.

மூன்று மணியாவதற்குச் சில நிமிடங்கள் இருக் கையில் காந்திஜீ வீட்டிற்கும் என் வீட்டிற்கு மிடையே யிருந்த மணலும் கல்லும் நிறைந்த பாதையில், சூடு காலைத் தாக்கக் காந்திஜீ வீட்டை நோக்கி நடந்தேன். வெயில் என் தலையின் உள் பாகம் பூராவையுமே வரட்சி யுறச்செய்து விட்டது. வெயிலின் அளவு 110 டிக்ரி.காந்திஜீ

அறைக்குச் சென்றபொழுது வெண்மையான உடை யணிந்த அறுவர் தரையில் அமர்ந்திருந்தனர். கருப்புப் புடவை தரித்த பெண் ஒருத்தி விசிறிக்கயிற்றை இழுத்துக் கொண்டிருந்தாள். அலங்காரமான சாமான் ஒன்றே ஒன்றுதான் அவ்வறையில் இருந்தது. கருமையும் வெண் மையும் கலந்த ஏசுநாதரின் உருவப்படமே அது. "அவர் நம்முடைய சாந்தி" (அமைதி) என்று குறிக்கப் பெற் றிருந்த அது கண்ணாடி போடப்பட் டிருந்தது. காந்திஜீ நார்ப்படுக்கை ஒன்றின் மீதமர்ந்திருந்தார். அவர் படுப்பதும் அதில்தான். அவருக்குப் பின்புறத்தில் பலகை ஒன்றிருந்தது. அதில் தலையணையை வைத்து அதன் மீது சாய்ந்திருந்தார். தங்க விளிம்புக் கண்ணாடி ஒன்றை அணிந்துகொண்டு பவுண்டன் பேனாவினால் கடிதம் எழுதிக்கொண் டிருந்தார். சப்பணம் கொட்டி உட்கார்ந்து முழங்காலில் சிறு பலகை ஒன்றை அவர் வைத்திருந்தார். அப்பலகையின் மீது அவர் எழுதிக் கொண்டிருந்த அட்டையிருந்தது. வேறு மூன்று பவுண் டன் பேனாக்கள் கையால் செய்யப்பட்ட மரத்தண்டில் உள்ள துவாரங்களில் பொருத்தப் பெற்றிருந்தன. அவ ருடைய படுக்கையின் இடது பக்கத்தில் சில புத்தகங்கள் தரையின் மீது ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. "விசிறி இழுக்கும் பெண்மணியின் அருகே உள்ள இடம் தான் மிகக் குளிர்ச்சியான இடம். வந்து அங்கு அமருங் கள்" எனக் காந்திஜீ என்னைப் பார்த்துக் கூறினார். ஒரு மூலையில் சுவர்போன்ற தட்டியின் மீது சாய்ந்து உட்கார்ந் தேன். "நீங்கள் பொருட்படுத்த வில்லையானால் இவர்கள் இங்கு இருப்பார்கள், பேசமாட்டார்கள். நீங்கள் ஆட்சேபித்தால் இவர்கள் போய்விடுவார்கள்" என அங் கிருந்தவர்களைச் சுட்டிக் காட்டி என்னிடம் கூறினார். நரேந்திரதேவ், தேசாய், குர்ஷித் உட்பட்ட மற்றும் பல

ஆசிரமவாசிகள் அங்கு இருந்தனர். ஒரு கூட்டத்தின் நடுவில் அவரைப் பேட்டி காணுவது எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. இருப்பினும், "ஆட்சேபனையில்லை" என நான் கூறி சம்பாஷணைக்குத் தயார் ஆனேன்.

"சரி, இப்பொழுது நான் உங்களோடு பேசத் தயாராயிருக்கிறேன்" எனக் காந்திஜீ அறிவித்தார்.

"கிரிப்ஸ் தூது இந்திய சரித்திரத்திலேயே குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி என நான் உணருகிறேன். கிரிப்ஸ் தோல்வியின் உட்கருத்தை மக்கள் அநேகமாக கிரகிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். மக்களிடையே தோன்றும் இத் தெளிவினால் பெரிய சம்பவங்கள் நிகழலாம். எனவே, கிரிப்ஸ் ஏன் தோல்வியுற்றார் என்பது பற்றிய உங்கள் அபிப்பிராயத்தை அறிய விரும்புகிறேன்" என்றேன்.

"கிரிப்ஸ் வந்து சேர்ந்ததும் அவரைப் புது டில்லியில் வந்து சந்திக்குமாறு எனக்குத் தந்தி கொடுத்தார். நான் போக விரும்பவில்லை. எனினும், அதனால் சிறிதேனும் நன்மை யேற்படலாம் என எண்ணி நான் சென்றேன். அவர் இந்தியாவுக்குக் கொண்டு வந்த பிரிட்டிஷ் சர்க்கார் திட்டத்தில் அடங்கிய விஷயங்களைப் பற்றிய ஹேஷ்யங்களைத்தான் நான் கேள்விப்பட்டிருந்தேனே ஒழியத் திட்டத்தை நான் நேரடியாக அறிந்தேனில்லை. கிரிப்ஸ் அத் திட்டத்தை என்னிடம் தந்தார். அதைச் சுருக்கமாக ஆராய்ந்து 'இதுதான் நீங்கள் அளிக்கும் திட்டமாயின் ஏன் இங்கு வந்தீர்கள்? இந்தியாவுக்கு அளிக்கப் போகும் பூர்ணமான திட்டம் இதுதான் என்றால் அடுத்த விமானத்திலேயே ஊர் திரும்பும்படி உங்களுக்கு நான் யோசனை கூறுகிறேன்' என்றேன். 'நான் அதைப்பற்றி ஆலோசிக்கிறேன்' என்று கிரிப்ஸ் எனக்குப் பதிலளித்தார்" என்று காந்திஜீ பதிலளித்தார்.

"கிரிப்ஸ் திட்டம் பற்றிய உங்கள் விமர்சனம்

என்ன ? பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து விலகும் உரிமை யுடன் கூடிய குடியேற்ற நாட்டு அந்தஸ்தை அளிப்ப தாக அது வாக்களிக்க வில்லையா?" என்று நான் கேட்டேன்.

"குடியேற்ற நாட்டந்தஸ்து இந்தியாவுக்குச் சற்றும் ஒவ்வாதது என ஸி. எப். ஆண்ட்ரூஸ் (கிருஸ்துவின் உண்மையான தூதன் என்று இந்தியாவில் அறியப் படுபவர்.) கூறுவது வழக்கம். வெள்ளையர்களாகவும், பெரும்பாலும் பிரிட்டனிலிருந்து குடியேறியவர்களாக வும், அல்லது அவர்களுடைய சந்ததியார்களாகவும் இருக் கும் குடியேற்ற நாட்டு மக்களைப் போன்ற உறவு முறை பிரிட்டனுக்கும் எங்களுக்கும் இல்லை. எந்த விதமான அந் தஸ்தும் எங்கள் மீது சுமத்தப்படுவதை நாங்கள் விரும்ப வில்லை. ஏதாவது அந்தஸ்து எங்களுக்கு அளிக்கப் படுகிறதென்றால் நாங்கள் சுயேச்சையாயில்லை என்பதே அதன் அர்த்தம். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து பிரியும் உரிமையைப் பற்றிக் கூறின் அதிலும் பெரும குறைகள் உள. கிரிப்ஸ் திட்டத்திலுள்ள குறைகளில் மிக முக்கியமானது சுதேச மன்னர்களைப் பற்றிய ஷரத்தே. பிரிட்டனின் நன்மைக்காக மன்னர்கள் மீது சுமத்தப்பட்ட உடன்படிக்கைகளின்படி அம்மன்னர் களைக் காப்பாற்றும் பொறுப்பு தனதெனப் பிரிட்டன் சாதிக்கின்றது. பிரிட்டிஷார் வருவதற்கு முன் அரசாண்ட பிக்கானீர் மகாராஜாவோ அல்லது வேறு எந்த மகா ராஜாவோ இப்பொழுதிருப்பதைக் காட்டிலும் அதிக அதிகாரத்துடனேயே இருந்திருக்கிறார்.

"பாகிஸ்தானை அங்கீகரிப்பது இரண்டாவது குறை யாகும். இந்துக்கள் முஸ்லிம்களுக்கிடையே உள்ள வித் தியாசங்கள் பிரிட்டிஷ் ஆட்சியில் விரிவுபடுத்தப்பட்டன. இப்பொழுது கிரிப்ஸ் திட்டத்தின் மூலம் அவ் வித்தியா

சங்கள் மேலும் விரிவுபடுத்தப்படுகின்றன. 1909-ல் வைஸ்ராயாயிருந்த மின்டோ பிரபு இருவேறு மதத்தைச் சார்ந்த இவ்விரு சமூகங்களுக்கும் தனித் தொகுதிகளை ஏற்படுத்துவதின் மூலம் இவ் வேற்றுமையை ஆரம்பித்தார். அது முதல் பிரிட்டிஷ் சர்க்கார் எங்களுக்குள் மேன் மேலும் பிரிவினை செய்வதிலேயே முனைந்திருக்கிறது. கர்ஸான் பிரபு திறமை வாய்ந்த ஒரு நிர்வாகி. செம்ஸ் போர்டு, இர்வின், லின்லித்கோ போன்றவர்களைச் சந்தித்திருக்கிறேன். ஆனால் நான் அவரைச் சந்தித்ததில்லை. ஆனால் என்னிடம் ஒன்று பேசுவது, உம்மிடம் ஒன்று பேசுவது, இன்னொருவரிடம் இன்னொரு விதமாகப் பேசுவது என்ற வழக்கத்தையே அவர் கொண்டிருந்தார். சர். சாமுவேல் ஹோர் இடமோ வென்றால், நாம் யாரிடம் பேசுகின்றோம். அவர் மனப்போக்கு என்ன என்பதை அறியமுடியும். கர்ஸானிடம் அது சாத்தியமில்லை. கர்ஸானால் நிறைவேற்றப்பட்ட வங்காளப் பிரிவினையானது தேவையான ஒரு சீர்திருத்தமே. இன்னும் சொல்லப்போனால் அது சிறந்த செயலே. ஆனால், அதன் விளைவு மதம் பற்றி மாகாணத்தைப் பிரிப்பதாயிருந்தது. கிரிப்ஸும் இதே கொள்கையைத்தான் தமது திட்டத்திலும் புகுத்தியிருக்கிறார். இதுவே இரண்டாவது பெரிய குறையாகும். ஆதலினால், பிரிட்டிஷார் இங்கிருக்கும் வரை ஒற்றுமையேயிருக்க முடியாது" என்றார்.

"நல்லது! கிரிப்ஸ் திட்டத்திலுள்ள யுத்த பிற்கால அரசியல் நிர்ணய அம்சங்களை நீங்கள் விரும்பவில்லை. ஆனால், இடைக்காலத்திலோ, அல்லது உடனடியாகவோ நிறைவேறக் கூடியவை ஒன்றும் அதில் இல்லையா? யுத்த பிற்காலத் திட்டம் ஒருபுறம் இருக்கட்டும்; உடனடியான ஏற்பாடுகளிலும் சிறிது மதிப்பு வைக்கலாம். அதன் மூலம் உங்கள் மக்களுக்கு அரசாங்க

நிர்வாகத் திறமை யேற்பட்டு அதை யொட்டி யுத்த பிற் காலத்தில் பூர்ண சுதந்திரம் கோரும் உரிமையைப் பெறலாம் என்று நீங்கள் கருதவில்லையா?" என நான் கேட்டேன்.

"ஏறக்குறைய இதே உணர்ச்சியுடன் தான் அந்த விஷயத்தை நான் அணுகினேன். ஆனால், கிரிப்ஸ் திட்டத்தின் பூரா விவரத்தையும் நான் அறிந்தபொழுது ஒத்துழைப்புக்கு இடமில்லை யென்பதை ஐயமறத் தெரிந்து கொண்டேன். முக்கியப் பிரச்னை தேசப் பாதுகாப்பு. யுத்த காலத்தில் அரசாங்கத்தின் முக்கிய வேலை பாதுகாப்பாகும். யுத்தத்தை நடத்தும் விஷயத்தில் தலையிடுவதில் எனக்குச் சற்றும் விருப்பமில்லை அதற்கு நான் தகுதியற்றவன். ஆனால், ரூஸ்வெல்ட்டுக்கும் யுத்த தந்திரத்தில் விசேஷப் பயிற்சி கிடையாது. அப்படி யிருக்குமே யாகில் அது அரைகுறையாகவே யிருக்கும்" எனக் காந்திஜீ கூறிப் பின் சிறிது தயங்கி, "அல்லது சர்ச்சிலைத் தான் எடுத்துக் கொள்ளுவோமே" என்றார்.

"வேண்டாம், உதாரணமாக ரூஸ்வெல்ட்டை எடுத்துக் கொள்ளுவதில் தயக்கம் வேண்டாம். எனக்கு விஷயம் புரிகிறது" என்றேன்.

"ராணுவத்தினரைப் போல யுத்த தந்திரத்தில் அவ்வளவு தேர்ச்சி பிரஜைகளுக்கு இல்லாத போதிலும் யுத்த காலத்தில் ராணுவ விஷயங்களில் பிரஜா ஆதிக்கம் இருக்க வேண்டுமென்பது தான் குறிப்பிடத் தக்க விஷயம். பர்மாவிலுள்ள பொற்கோவில் ஜப்பானிய விமானங்களுக்கு ஒரு கலங்கரை விளக்கைப் போல் இருக்கிறது. எனவே அதை அழிக்க வேண்டுமென பிரிட்டிஷார் விரும்பினால், உடனே நான் 'அதை நீங்கள் அழிக்கக் கூடாது என்றும் அதை அழிப்பதனால் பர்மியர்களுடைய ஆத்மார்த்தமான ஒன்றை நீங்கள் அழிக்கின்

றீர்கள்' என்றும் கூறுவேன். பிரிட்டிஷார் விமானதளம் ஒன்று கட்டுவதற்காக இவ் விவசாயிகளை இங்கிருந்து அப்புறப்படுத்த வேண்டுமெனவும், இன்றே போக வேண்டுமெனவும் கூறினால், 'ஏன் நேற்றே இதுபற்றி நினைத்து, ஏழைமக்கள் போவதற்கு சாவகாசம் கொடுக்கக் கூடாது? அவர்கள் போவதற்கு நீங்களே ஏன் இடம் தேடிக் கொடுக்கக் கூடாது' எனக் கேட்பேன்'' என்றார்.

"இவ் விஷயங்கள் பற்றிய பொறுப்பு இந்தியர் களின் கீழ் இருக்க வேண்டுமென நீங்கள் விரும்பினால், யுத்தப் போக்கிலே தலையிடுவதாக ஜெனரல் வேவல் நிச்சய மாகக் கருதுவார்'' என நான் தெரிவித்தேன்.

"சாப்பாட்டுக் கடைகளை நடத்துதல், அச்சடித்தல் போன்ற மிக அற்பமான வேலைகளையே யுத்தகாலப் பணி களாகப் பிரிட்டிஷார் எங்களுக்குக் கொடுக்கச் சம்மதித் தனர். நான் யுத்த தந்திரியல்ல வென்றாலும் யுத்தத்திலே வெற்றியடைவதற்கு மிக அனுகூலமாக அநேக விஷயங் களை நாங்கள் செய்திருக்கலாம் என்றே எண்ணுகிறேன். கீழ் நாடுகளில் பிரிட்டிஷாரின் நிலைமையில் ஏற்பட்ட பல கோளாறுகளைக் கவனிப்பின் எங்கள் உதவியும் சற்று அவர்களுக்கு இருந்தால் நலமென எனக்குத் தோன்று கிறது'' என்று காந்திஜீ புன் முறுவலுடன் கூறினார்.

"ஆகவே, நீங்கள் பாதுகாப்புக்கு முக்கியஸ்தானம் கொடுத்தீர்களென்பது வெளிப்படை'' என்று நான் சுருக்கமாகக் கூறினேன்.

அவரும் ஒப்புக் கொண்டார்.

"நேருவும், மற்றக் காங்கிரஸ் தலைவர்களும் இதே அபிப்ராயமுடையவர்கள் தானா?'' என்றேன்.

"அப்படித்தான் நினைக்கிறேன். நேருவும், மௌலானா சாகிபும் (காங்கிரஸ் கட்சியின் முஸ்லிம் தலைவரான மௌலானா அபுல்கலாம் ஆஸாத்) இதே அபிப்ராய

முடையவர்களென நான் நினைக்கிறேன்" எனக் காந்திஜீ பதிலளித்தார்.

"வேறு விதமாகக் கூறின் கிரிப்ஸ் திட்டத்தில் நன்மையான தொன்றும் நீங்கள் காணவில்லை அல்லவா" என்றேன்.

"நீங்கள் இப்படி விளக்கமான, நேரான கேள்வியை என்னிடம் கேட்டதற்கு நான் மகிழ்வுறுகிறேன்" என ஆச்சரியத்துடன் கூறிவிட்டு, "இல்லை, எந்த விதமான நன்மையும் அதிலிருப்பதை நான் காணவில்லை" என்றார்.

"கிரிப்ஸிடம் நீங்கள் இதைச் சொன்னீர்களா?" எனக் கேட்டேன்.

"ஆமாம். 'நீங்கள் ரஷ்யாவில் ஓர் அற்புதம் செய்துவிட்டீர்கள்' என நான் கிரிப்ஸிடம் கூறினேன்" என்றார்.

"அப்படியேன் நீங்கள் சொன்னீர்கள்? ரஷ்யாவை இந்த யுத்தத்தில் கொண்டுவந்து சேர்த்தது சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ் அல்லவே; அடால்ப் ஹிட்லர் என்ற ஒருவரல்லவா?" என்று நான் சொன்னேன்.

காந்திஜீயும் அவருடைய நண்பர்களும் சிரித்தனர். "ஆனால், நானும் ஆயிரக்கணக்கான இந்தியர்களும், கிரிப்ஸ்தான் இந்த அற்புதத்தைச் செய்தார் என்று நம்பினோம்" என்று மறுத்துக் கூறினார்.

"நீங்கள் அதைச் சொல்லிய போது கிரிப்ஸ் மறுக்கவில்லையா" எனக் கேட்டேன்.

காந்திஜீ சிரித்துக் கொண்டே, "இல்லை, அந்த உபசார மொழியை அவர் ஏற்றுக் கொண்டார். ஜெர்மன் படையெடுப்புக்கு முன்னரே ஸ்டாலின் பிரிட்டிஷாரின் உதவியைக் கோரினார் என்பது எங்கள் நினைப்பு" என்றார்.

"இல்லை, அது சரியல்ல. படையெடுப்புக்குப் பிறகுதான் உதவி கிடைத்தது. இப்பொழுது அமெரிக்கா

விலிருந்தும், பிரிட்டனிலிருந்தும் மென்மேலும் உதவி கிடைத்துக்கொண் டிருக்கிறது. ஆனால், தாக்குதலுக்கு முன்பு, ஹிட்லரிடமிருந்த பயத்தினால் ஸ்டாலின் பிரிட்டனிடமோ, கிரிப்ஸினிடமோ நட்புக்காட்ட முடியவில்லை" என்றேன்.

"எப்படியாயினும், இங்கேயும் ஓர் அற்புதத்தை நிகழ்த்துமாறு கிரிப்ஸிடம் கேட்டேன். ஆனால், அது அவருடைய சக்திக்கு மீறியதாயிருந்தது" என்று காந்திஜீ தொடர்ந்து கூறினார்.

"இங்கிலாந்தில் பெரிய பொதுஜனக் கிளர்ச்சி ஒன்று நடந்துகொண் டிருக்கிறதென நான் நினைக்கிறேன். சென்ற கோடைகாலத்தில் நான் இங்கிலாந்துக்குப் பறந்து சென்று ஒன்பது வாரம் தங்கினேன். இந்த யுத்தத்துக்கு முன் ஆட்சி செலுத்தி யுத்தத்திற்கே ஏதுவாயிருந்த கூட்டத்தாரின் ஆட்சி இனிமேலும் நீடிக்கக் கூடாதென்று பெருவாரியான மக்கள் தீர்மானித்து விட்டார்கள். இப் பொது பொதுஜன எதிர்ப்பு கிரிப்ஸின் மூலம் வெளிப்படக்கூடும். எனவே, அவர் மேல் பதவிக்குப் போவது உற்சாகம் தரக்கூடிய சம்பவம்" என்றேன்.

"ஆம், சோர்வையுண்டாக்கும் சம்பவமும் ஆகும். ஏனெனில், கிரிப்ஸிடம் பெரியஅரசியல் அறிஞர்க்குரிய குணங்கள் இருக்கின்றனவாயென்று நான் ஐயமுறுகிறேன். ஜவாஹர்லாலின் நண்பர், இந்திய விஷயத்தில் பெரிதும் அக்கறையுடையவர் இத்தூது கொண்டுவருபவராக அமைந்தது, எங்களுக்கு அதிக மனத் தாங்கலையே உண்டாக்குகிறது" என்றார். இதற் கிடையில் காந்திஜீயின் மனதில் ஏதோ ஓர் எண்ணம் தோன்றியதாகத் தென்பட்டது. ஒருகால் பேட்டி முடியும் வேளை நெருங்கி விட்டது என்பதை நினைத்திருக்கலாம். ஏனெனில், தொடர்ந்து வந்த சம்பாஷணைக்குச் சற்றும் சம்பந்த

யில்லாமல், "சாங்கி பிரபு என்னை நான் பாதுகாத்துக் கொள்ளுமாறு ஒருமுறை கூறினர். அதற்கு நான், 'என்னை நானே பாதுகாத்துக் கொள்ளவில்லையானல், இத்தொண்டு கிழப் பருவத்தை நான் அடைந்திருப்பேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?' என்று அவரிடம் கூறினேன். என் தவறுகளில் இது ஒன்ருகும்" என்று காந்திஜீ கூறினர்.

நான் புன்முறுவலுடன், "நீங்கள், குறையற்றவர் என்றல்லவா நான் எண்ணினேன்" என்றேன்.

அவர் சிரித்துக் கொண்டே, "இல்லை, நான் மிகக் குறைபாடுள்ளவன். நீங்கள் போவதற்குள், என்னிடம் எண்ணற்ற தவறுகளைக் கண்டுபிடிப்பீர்கள். அப்படி யின்றேல், அவைகளை நீங்கள் காண உங்களுக்கு நான் உதவி செய்வேன்" என்ருர். இடுப்பிலிருந்து ஒரு சங்கி லியில் தொங்கிக்கொண்டிருந்த, பெரிய நிக்கல் கடிகாரம் ஒன்றைப் பார்த்து, "நான் உங்களுக்கு ஒருமணி சாவகாசம் கொடுத்தாய்விட்டது" என்று என்னிடம் கூறினர்.

நான் எழுந்து, வணங்கி விடை பெற்றேன். சம்பா ஷணை நேரத்தில், பொக்கை வாய் முஸ்லிம் மாதொருத்தி, அவர் மார்பிலிருந்த ஈரத்துணியை மாற்றுவதற்கு ஒரு முறை வந்தாள். அவரும் பன்முறை தம் தலையிலிருந்த கைக் குட்டையை எடுத்துச் சுற்றி டம்ளரிலிருந்த தண்ணீரில் நனைத்துப் பிழிந்து, மீண்டும் தலையில் போட்டுக் கொண்டார். அவர் துணியை எடுத்த ஒவ்வொரு முறையும், அவருடைய சிறிய முகத்தை நான் நன்கு காண முடிந்தது. பெரிய தலையின் குறுகிய கீழ்ப்பாகமே அவருடைய முகம் என்று கூறலாம். தலையில் இருபுறமும் அகன்று விரிந்த இரண்டு காதுகள். தடித்து வளைந்த அவர் மூக்கு, மேல் உதட்டைத் தொட்டுவிட்டதோ என்று தோன்றும்படி, மேலுதடு அவ்வளவு குறுகியதா

யிருந்தது. மேலுதட்டில் கிட்டத்தட்ட நரைத்துக் கட்டையாக அடர்ந்து வளர்ந்த மீசை காணப்பட்டது. கீழுதடு உறுதியையும், சிந்தனு சக்தியையும் நன்கு எடுத்துக் காட்டிற்று.

நான் விருந்தினர் விடுதிக்கு வந்த சில நிமிடங்களுக்குப்பிறகு, சோஷியலிஸ்டுத் தலைவரான தேவ், ஆசிரம வாசி ஒருவருடன், இந்தியா, ரஷ்யா, இந்த யுத்தம் ஆகியவை பற்றி விவாதிப்பதற்காக என்னிடம் வந்தார். அவர்கள் ஆத்திரம் மிகுந்த பிரிட்டிஷ் எதிர்ப்பாளர்கள். இம் மனப்பான்மைக்குத் தாம் வருந்துவதாகத் தேவ் கூறினார். "இங்கிலாந்தினுல், இந்தியா பெரும் துன்பங்களுக்கு உள்ளாக்கப்பட்டு விட்டது. நாட்டினது இன்னல்களின் விளைவாக எழுந்த மனக் கொதிப்பே நாங்கள் இவ் அபிப்பிராயம் கொண்டதற்குக் காரணம்" என அவர் விளக்கினுர்.

காந்திஜீ என்னிடம் கூறியவைகளைப் பற்றிய முழு விவரங்களையும் குறித்துவைக்க விரும்பினேன். எனவே தேவும் அவருடைய நண்பரும் சென்ற பிறகு காந்திஜீயின் பேட்டியின்போது தரித்திருந்த நீலக் கோடுடைய பைஜாமா, மேலங்கியைக் கழற்றி விட்டு டைப் செய்யத் தொடங்கினேன். ஐந்து நிமிடங்களுக்குள் அலுத்து விட்டேன். வியர்வை ஆருய்ப்பெருகியது. ஸ்நான அறையில் போய் மீண்டும் குளித்தேன். நான் முன் வாரத்தில் உட்கார்ந்து டைப் செய்துகொண் டிருந்த பொழுது இந்திய யுவதி ஒருத்தி வீட்டுக்கு முன்பாக இங்குமங்கும் நடந்துகொண்டிருப்பதைக் கவனித்தேன். அவள் செருப்பின்றி நடந்துகொண்டிருந்தாள். மார்பையும், தோள்களையும் சுற்றி இறுக்கமான கதர் ரவிக்கை ஒன்றை அணிந்திருந்தாள். இடுப்புக்கும், ரவிக்கைக்கும் இடையே உள்ள பாகம் வெறுமனே யிருந்தது. இடுப்பி

லிருந்து பாதங்கள் வரை சேலை உடுத்திருந்தாள். அதன் ஒரு முந்தானையைக் கழுத்தையும், தலையையும் சுற்றிப் போட்டிருந்தாள். அவள் அணிந்திருந்தது, அகலமான சிவப்புக் கரை போட்ட மஞ்சள் சேலை. எனவே, அவள் என்னைத் தாண்டும் ஒவ்வொரு தடவையும் டைப் செய்வதில் கண்ணுடைய எனக்கு ஒரு தீப்பிழம்பு நகர்ந்து செல்வது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அவள் தன் தலையில் தண்ணீர்நிறைந்த பெரிய செந்நிற மண்பானையைச் சுமந்து சென்றாள். அதை ஒரு கையினால் தாங்கி யிருந்தாள். மணிக்கட்டில் பிரகாசமான உலோக வளையல்களைத் தவிர வேறு ஒன்றுமே அணியவில்லை. வீட்டின் எதிர்ப்புறமிருந்த ஒரு பீப்பாயில் தண்ணீரை ஊற்றிய பிறகு சில நிமிடங்களில் திரும்பினாள். அப்பொழுது அவள் தலையில் துணியால் சுற்றப்பட்ட சும்மாடு மீது பானையைப் பக்க வாட்டத்தில் வைத்திருந்தாள். சூரியன் சுடர் விட்டெரிந்துகொண் டிருக்கும் நேரத்திலே மணிக்கணக்கில் இக்கடினமான வேலையைச் செய்துகொண்டே யிருந்தாள். ஒரு சிறிய குழாய் இருந்திருந்தால் இச்சிரமம் அவளுக்கு இருந்திராது. உஷ்ணத்தினால் சோர்வடையும் வரை நான் எழுதினேன். பிறகு, குர்ஷித்திடம் சற்று உரையாடினேன். சாப்பாடு ஐந்து மணிக்கென மெல்லிய சேகண்டியின் மூலம் அறிவிக்கப்பட்டது. வழக்கம்போல் பிரார்த்தனையுடன் சாப்பாடு துவங்கியது. காந்திஜீ பக்கத்தில் வீற்றிருந்த ஆசிரமவாசி ஒருவர் அவருடன் ஹிந்துஸ்தானியில் பேசிக்கொண்டிருந்தவர், ஆங்கிலப் பதம் ஒன்றை உபயோகித்தார். நான் இந்தியாவுக்கு வந்து சேர்ந்த மறுதினம் புது டில்லியில், திறந்த வெளியில் கூடிய, காங்கிரஸ் பொதுக் கூட்டத்தை அது எனக்கு ஞாபகமூட்டுகின்றது என்றேன். அக் கூட்டத்தில் ஸ்ரீமதி. அஸப் அலி முக்கிய பேச்சாளரா

யிருந்தார். அவர் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் முஸ்லிம் அங்கத்தினரான டாக்டர் அஸப் அலியின் இந்து மனைவியாவார். அவரும் ஹிந்துஸ்தானியில் தான் பேசினார். ஆனால், அவர் உபயோகித்த ஆங்கிலப் பதங்களை நான் குறித்திருந்தேன். அவையாவன: "பாரின் பாலிஸி (அயல் நாட்டுக் கொள்கை), "எக்ஸ்பிளாய்டேஷன் (சுரண்டல்), சோஷல் பொஸிஷன் (சமூகநிலைமை), எபிஷியன்ஸி (திறமை), பிரிட்டிஷ்-இம்பீரியலிஸம் (பிரிட்டிஷ்-ஏகாதிபத்தியம்), நான் கோ-ஆபரேஷன் (ஒத்துழையாமை), இண்டியா ஆபீஸ் (இந்தியக் காரியாலயம்), ரெப்யூஜிஸ் (அகதிகள்)" காந்திஜீ இப் பட்டியலை மிகவும் ரசித்தார். அருகிலிருந்த ஒருவர், எல்லோருமறிந்த மற்றுமோர் ஆங்கில வார்த்தையிருக்கின்றதெனவும், அது தான் ஸ்டூடண்ட்-ஸ்பைஸ் (மாணவ உளவாளிகள்) என்ற வார்த்தை எனவும், சர்வ கலாசாலை மாணவர்களுக்குள்ளே வேவு பார்ப்பதற்காகச் சர்க்கார் உபயோகித்து வரும் சில மாணவர்களுக்கு இப் பெயரிடப்பட்டிருக்கிறது எனவும் கூறினார். "பிரிட்டிஷ் ஆட்சியின்மீது நான் சுமத்தும் குற்றச்சாட்டுகளில் இது ஒன்றாகும்" எனக் காந்திஜீ கூறினார்.

சோவியத் ருஷ்யாவில் நடக்கும் பயங்கர நிகழ்ச்சிகளைப் பற்றிக் காந்திஜீ என்னிடம் கேட்டார். ருஷ்யாவில் நான் பெற்ற அனுபவத்திலிருந்து அவருக்கு விவரங்களைக் கூறினேன். "அப்படியானால், இங்கிலாந்தும் ஐக்கிய அமெரிக்காவும் தான் இவ்வுலகத்திலேயே மிஞ்சியிருக்கும் ஜனநாயக தேசங்களாக்கும்" எனக் காந்திஜீ தாமாகவே கூறிக்கொண்டார்.

"இந்த யுத்த காலத்திலும் இங்கிலாந்து இவ்வளவு ஜனநாயகத்துடனிருப்பது பெரிதும் ஆச்சரியப்படக் கூடிய விஷயம்தான். ஸ்வீடனும் அவ்வாறே இருக்கிறது"

என நான் அவர் அபிப்ராயத்தை ஊர்ஜிதப்படுத்தினேன்.

"அப்படியா!" என்று நம்பாத தோரணையில் காந்திஜீ கேட்டார்.

"ஸ்விட்ஜர்லாந்தும், பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளும் கூட அப்படியேதான்" என்று நான் அடுக்கினேன்.

காந்திஜீ வியப்புடன், "ஜனநாயகம் வெள்ளையர்களுக்கு! எனக்குத் தெரியும், நான் தென் ஆப்பிரிக்காவில் வசித்தவன்" என்றார்.

அவர் மீண்டும் சாப்பாட்டைக் கவனிக்கலானார்.

நான் குளிப்பதற்காகக் குடிசைக்குத் திரும்பினேன். எனது பைஜாமாவையும், செருப்பையும் கழற்றி விட்டு நின்றுகொண்டு பாத்திரத்திலே நீரை எடுத்துத் தூக்கி ஊற்றிக்கொள்வதுதான் நான் குளிப்பதற்காகச் செய்யும் வேலை.* ஆயாசந்தீரக் குளித்த பிறகு மாலை 6¼ மணிக்கு மீண்டும் காந்திஜீயின் குடிசை நோக்கி நடக்கலானேன். காந்திஜீ வெளிவரும் வரை, ஒரு நிமிட நேரம், வாயிலில் காத்திருந்தேன். அவர் நீண்ட மூங்கில் கம்பைக் கையில் தாங்கி வந்தார். ஆசிரமத்தில் வசிக்கும் காந்திஜீயின் வைத்தியரான டாக்டர் தாஸ் எங்களுடன் வந்தார் பல யுவர்களும், யுவதிகளுங்கூட வந்தனர். இரண்டு பெண்களின் தோள்களின் மீது கைகளை வைத்துக் காந்திஜீ சாய்ந்து வந்தார். காந்திஜீ உலாவப்போகும் பொழுது, ஒரு க்ஷண நேர தரிசனத்துக்காக, அண்டை கிராமத்திலிருந்து அநேக வாலிபர்கள் வந்து காந்திஜீயின் விடுதிக்கு அருகிலே பயபக்தியுடன் நின்றுகொண்டிருந்

---

* ஒரு தொட்டியில் தண்ணீரை நிரப்பி அதில் முழுகுவது தான் மேனாட்டார் குளிக்கும் முறை. ஆகவே, இந்தியப் பழக்கத்தை ஆசிரியர் மேனாட்டு வாசகர்களுக்கு விளக்க வேண்டியிருக்கிறது.

தனர். காந்திஜீயைக் கண்டதும் அவர்கள் இருகைகளையும் கூப்பி முன்பக்கம் குனிந்து வணங்கினர். காந்திஜீ ஏதோ கூறினார். பின்னர் சிரித்தார். அவர்களும் சிரித் தனர். இரண்டாவதாக, வயோதிகர்களின் கூட்டம் வந்தது. அதில் தொந்திக்கிழவர் ஒருவர் காந்திஜீ தம்மைக் குசலம் விசாரிப்பாரென்று நம்பியவர் போல் ஆவலோடு பார்த்தார். ஆனால், ஏமாந்தார். வயல்களைச் சுற்றிப் போகும் தூசிபடர்ந்த பாதையில் நடந்து சென்றோம். "சரி, அப்புறம்" என்ற வார்த்தைகளால் காந்திஜீ என்னிடமிருந்து கேள்விகளை எதிர்பார்த்தார்.

"முதல் உலக யுத்தத்தில் பிரிட்டிஷ் சேனைக்கு நீங்கள் போர் வீரர்களைச் சேர்ப்பதில் உதவி செய்தீர்கள். இந்த யுத்தம் ஆரம்பித்ததும், பிரிட்டிஷ் சர்க்காரைத் திகைக்க வைக்கும்படியான எவ்வித காரியத்தையும் செய்ய விரும்பவில்லையெனக் கூறினீர்கள். ஆனால், இப்பொழுதோ உங்கள் போக்கு மாறிவிட்டதாகத் தோன்றுகிறது. இதற்கென்ன காரணம்?" என ஆரம் பித்தேன்.

"முதல் உலக யுத்த சமயத்தில்தான் நான் தென் ஆப்பிரிக்காவிலிருந்து திரும்பினேன். சரியான நிலை கொள்ளவில்லை. எங்கிருக்கின்றோம் என்றே எனக்குப் புரியவில்லை. அந்நிலையில் நான் யுத்தத்துக்கு உதவியது அஹிம்சையில் நம்பிக்கைக் குறைவு என்பதைக் காட்டி விடாது. ஏனெனில், அஹிம்சை சூழ்நிலையை யொட்டியே விருத்தியடைய வேண்டும். சூழ்நிலையையோ நான் போதுமான அளவு ஆராயவில்லை. இந்த இரண்டு யுத்தங்களுக்கு மிடையே பல அனுபவங்கள் ஏற்பட்டன. இருந்தாலும் கூட, 1939-செப்டம்பரில் வைஸ்ராயுடன் சம்பாஷித்த பிறகு,இந்த யுத்தத்தைக் காங்கிரஸ் இயக்கம் தடைப்படுத்தாது என அறிவித்தேன். காங்கிரஸ்

நானல்ல, உண்மையில் நான் காங்கிரஸிலும் இல்லை. அக்கட்சியின் அங்கத்தினருமல்ல. அதில் பதவியொன்றும் வகிக்கவில்லை. காங்கிரஸ், என்னைவிட அதிகமாக பிரிட்டிஷ் எதிர்ப்பு, யுத்த எதிர்ப்புக் கொள்கையை யுடையது. எனவே, யுத்த முயற்சியில் தலையிட வேண்டு மென்ற அதனுடைய ஆசையை நான் பெரிதும் தடைப் படுத்த வேண்டியிருந்தது. இப்பொழுது நான் சில முடிவு களுக்கு வந்திருக்கிறேன். பிரிட்டிஷாரைச் சிறுமைப் படுத்த நான் விரும்பவில்லை. ஆனால் பிரிட்டிஷார் போகத்தான் வேண்டும். ஜப்பானியர்களை விடப் பிரிட்டிஷார் மோசமானவர்களென்று நான் சொல்ல வில்லை" என்று அவர் விவரித்தார்.

"இல்லை, அதற்கு நேர் மாறாக..." என்று நான் குறுக் கிட்டேன்.

"அப்படியும் கூறிவிட முடியாது. ஓர் எஜமானன் போய் மற்றொருவன் வருவதைத் தான் நான் விரும்ப வில்லை. இங்கிலாந்து தானாகவே இங்கிருந்து ஒழுங்காக வாபஸாகுமாயின், ஆத்மார்த்தமான நற்பலன் அதற்குக் கிட்டும்" என்று அவர் தொடர்ந்து கூறினார்.

இன்னும் உஷ்ணம் தணியாமலிருந்தது. நாங்களும் வேகமாகவே நடந்து சென்றோம். காந்திஜீ ஒன்றையும் பொருட்படுத்தாமல், வங்காளத்திலும், இதர பகுதி களிலும் பிரிட்டிஷார் செய்த அக்கிரமங்கள் என்று தாம் கூறும் விஷயங்களைக் குறித்து நீண்ட நேரம் விவரமாக மூச்சு விடாமல் எடுத்துச் சொன்னார். விமான தளங்கள் கட்டுவதற்காக நஷ்ட ஈடு கொடுக்காமலும், போதுமான சாவகாசம் கொடுக்காமலும், எவ்வாறு கிராமத்தார் தங்கள் வீடுகளிலிருந்து விரட்டப்படுகின் றனர் என்பதைக் கூறும் கடிதங்களைத் தாம் இன்று பெற்றதாக அவர் கூறினார். "யுத்த முயற்சியிலே ஒரு

பகுதியாகத் தோன்றிய போதிலும், உண்மையில் இது யுத்த முயற்சியைத் தடுக்கின்றது. இந்தியாவை விட்டுச் சென்றுலொழியப் பிரிட்டன் இந்த யுத்தத்தில் ஜயிக்க முடியாது என்பதில் முன்னைவிட இப்பொழுது எனக்கு உறுதியான நம்பிக்கை" என்றார்.

நாங்கள் காந்திஜீயின் ஜாகைக்குத் திரும்பியபொழுது இருட்டிவிட்டது. முற்றத்திலிருந்த கயிற்றுக் கட்டில் ஒன்றில் படுத்துக் கொண்டு என்னையும் அருகிலிருந்த மற்றொன்றில் உட்காருமாறு காந்திஜீ கூறினார். முன்பு நாம் பார்த்த முஸ்லிம் மாது நெஞ்சை மூடிக்கொள்ள உலர்ந்த துணி ஒன்றை அவருக்குக் கொடுத்துவிட்டு அவருடைய பாதங்களைத் துடைக்க ஆரம்பித்தாள். "இங்கிலாந்து, இந்தியாவில் பல தவறுகளைச் செய்திருக்கலாம், பல தடவை அடக்குமுறைகளைக் கையாண்டிருக்கலாம். ஆனாலும், இத் தேசத்தை அந்நிய சர்வாதிகாரம் ஜயிக்குமாயின் நிலைமை இதை விடப் பன்மடங்கு கேவலமாகத்தானிருக்கும்" என நான் எனது அபிப்ராயத்தைக் கூறினேன். பதில் கூறும் முறையிலே, 1919-ல் நடைபெற்ற அமிர்தசரஸ் படுகொலையைப் பற்றியும், இந்தியாவில் பிரிட்டிஷார் செய்த பல்வேறு கொடுஞ் செயல்களைப் பற்றியும் ஆக்ரோஷத்துடன் காந்திஜீ நீண்ட நேரம் பேசினார். ஜனங்களைக் காட்டிலும் தாம் அதிக சாந்தமானவரென்றும் ஜப்பான் ஜயித்தாலும் பாதகமில்லை என்ற அளவுக்கு இந்தியரில் சிலர் அவ்வளவு பிரிட்டிஷ் விரோதிகளாக இருக்கின்றார்களென்றும் வற்புறுத்திக் கூறினார்.

அவர் எழுந்து போவதற்கு முயன்றார். நான் போவதற்கு நேரமாய்விட்டதென்றேன். "இல்லை, பிரார்த்தனைக்கு வாருங்கள்" என்றார்.

இதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. விடுதியி

லிருந்து ஐம்பது கஜ தூரத்திலிருந்த திறந்த வெளியான இடமொன்றிற்குக் காந்திஜீயுடன் சென்றேன். அங்கே ஆசிரமவாசிகள் எழுபது பேர், வெள்ளையுடை உடுத்து மூன்று சதுரப்பந்திகளாகச் சப்பணங்கொட்டி உட்கார்ந்திருந்தார்கள். சதுரத்தின் இடது பக்கத்தில் பெண்களும், மற்றைய இரு பக்கங்களில் ஆண்களுமிருந்தனர். "பிஷர்! நீங்கள் இம்மாதிரி உட்காரலாமா?" எனக் காந்திஜீ கேட்டார். சதுரத்தினது நாலாவது பந்தியின் மத்தியில் சபையோரைப் பார்த்துக்கொண்டு நான் அவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தேன். முஸ்லிம் மாது அவருக்குப் பின் உட்கார்ந்து ஓலை விசிறியால் அவருக்கு விசிறிக் கொண்டிருந்தாள். வழிபாடு செய்கின்றவர்களில் சிலர் மண்ணெண்ணெ விளக்குகளை வைத்திருந்தனர். விளக்கொளியினால் எதிர்ப் பக்கத்தில் உள்ளவர்களின் கண்கள் கூசாமல் இருக்கும் பொருட்டு, ஒவ்வொரு விளக்கிலும் சிறு காகிதத் துண்டொன்றை வைத்து மறைத்திருந்தனர். இதே போன்ற விளக்கொன்று காந்திஜீக் கருகிலும் இருந்தது. காந்திஜீ ஸ்லோகத்தை உச்சரிக்க, பிரார்த்தனை துவங்கியது. பாடுவதில் அனைவரும் கலந்து கொண்டனர். அவர்களோடு காந்திஜீயும் தொடர்ந்து பாடினார். மற்றெல்லோரைக் காட்டிலும் மேலோங்கி அவருடைய குரல் சுத்தமாகக் கேட்டது. பிறகு பாடகர் ஒருவர் பாட ஆரம்பித்தார். அவருக்கு அருகிலிருந்தவர் தாளம் போட்டார். மற்றெல்லோரும் கூடிச் சேர்ந்து பிரலாபிக்கின்ற முறையில் பாடினர். அப்பாட்டின் ஒரு பகுதி சீன தேசத்தின் பாடலைப் போலவும், மற்றொரு பகுதி அரபு தேசத்துப் பாடலைப் போலவும் தொனித்தது. பிறகு, காந்திஜீ கனமான இந்து வேதப் புத்தகத்திலிருந்து ஏதோ படித்தார். அமைதிக்குரிய பிரார்த்தனையுடன் வழிபாடு முடிவுற்றது.

ஜூன் 5, 1942

விண் மீன்களும், வெண்மதியும் சஞ்சரித்த வான வெளியினடியில் கயிற்றுக் கட்டிலில் படுத்து இரவை அமைதியாகக் கழித்தபிறகு, காலை 4-மணிக்கு எழுந்தேன். இரவு குளிர்ச்சியாக யிருந்தது. காலை $6\frac{1}{4}$-மணிக்கு என் ஜாகைக்கு அருகாமையில் வசித்த டாக்டர் தாஸ் வந்து, காந்திஜீ களைப்புற்றிருப்பதினால் இன்று காலை உலாவ வரமாட்டாரென்று கூறினார். பிஸ்கோத்து, வெண்ணெய், தேன், மாம்பழம், தேத்தண்ணீர் அடங்கிய காலை உணவைக் குர்ஷித் எனக்குக் கொண்டு வந்தாள். ஈக்களும், எறும்புகளும் என்னுடன் போட்டி போட நான் வேகமாகச் சாப்பிட்டு முடித்தேன். காலை உணவுக்குப் பிறகு நான் எனது குறிப்புகளை டைப் செய்தேன்; ஆனால், தேவும், அரிய நாயகமும் ருஷ்யாவைப் பற்றி என்னிடம் பேச வந்ததினால் வேலை தடைப்பட்டது. அரியநாயகம் இலங்கைக்காரர்; கருமை நிறம்; ஆஜானுபாகு; காங்கிரசின் முக்கியப் பிரசாரகர்களுள் ஒருவர். சுதந்திரம் மட்டும் போதாது, சுதந்திரத்துக்குப் பிறகுதான் இந்தியாவில் உண்மையான கஷ்டங்கள் ஆரம்பமாகும் என்ற அபிப்பிராயத்தை அவர்களிடம் நான் சொன்னேன். பாஸிஸ்டு ஆட்சியாக யிருந்தாலும் பரவாயில்லை, தான் விரும்புவது சுதந்திர இந்தியாவே எனக் குர்ஷித் நேற்றுக் கூறிய தனது அபிப்பிராயத்தைத் திரும்பச் சொன்னாள்; இந்திய சேனைக்குத் தலைமை தாங்கி போஸ் இந்தியாவுக்குள் நுழைந்தாரானால் அவர் இத் தேசம் பூராவையுமே ஒன்று திரட்டக்கூடும் என்றாள். (சுபாஸ் சந்திர போஸ் 1938-ல் காங்கிரஸ் தலைவர். யுத்த ஆரம்பத்தில் இந்தியாவிலிருந்து தப்பிச் சென்றார். ஜெர்மனியை வாசஸ்தலமாக்கிக்கொண்டு அங்கிருந்து பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமாக வானொலியில் பிரசாரம் செய்தார்.) ஜப்பானியர்கள் தாங்கள்

பிடித்த ஹாங்காங், மலாயா, சிங்கப்பூர், பர்மா முதலிய இடங்களிலுள்ள இந்திய வீரர்களையும் உத்தியோகஸ்தர்களையும் விடுதலை செய்து, அவர்களை விசேஷ பட்டாளங்களாக அணி வகுத்து, இந்தியாவுக்குள் படையெடுத்து வந்து பிரிட்டிஷாரைத் துரத்துவார்களென்று அச்சு நாட்டு வானொலி பகிரங்கமாகத் தெரிவித்திருக்கிறதெனவும் அவ்வம்மை கூறினாள். போஸ், நேருவை விடப் பிரசித்தமானவரென்றும், சில சமயங்களில் காந்திஜீயைக் காட்டிலுங்கூட மக்களுக்கு அவரிடம் கவர்ச்சி அதிகம் என்றும் குர்ஷித் கூறினாள்.

நேரு போன்ற முற்போக்குச் சிந்தனையாளர்களின் கட்டாயத்தின் பேரில், காங்கிரஸ் சமீபகாலத்தில் பொருளாதார, சமூக விஷயங்களில் அதிக கவனத்தைச் செலுத்தி வருகின்றதெனவும், சமூக சீர்திருத்தத் திட்டமொன்றை வகுத்திருக்கின்றதெனவும், அதை எனக்குக் கொண்டு வந்து கொடுப்பதாகவும் தேவ் கூறினார்.

11-மணிக்குப் பகல் போஜனம். போஜனத்துக்குச் செல்ல எனக்குச் சற்று கால தாமதம் ஆயிற்று. சாப்பாட்டுக் கூடத்தில் ஏற்கெனவே காந்திஜீ வந்து உட்கார்ந்து விட்டார். நான் சென்றதும் "வாருங்கள்" என்று கனிவுடன் என்னைப் பார்த்துக் கூறினார். அவர் உடல் நிலையைப் பற்றி நான் விசாரித்தேன். "சுகம் தான், ஆனால், களைப்பின் மிகுதியால் என்னால் நடக்க முடியாமல் போய்விட்டது. நீங்கள் தனிமையாகவோ சில நண்பர்களுடனோ நடக்கவேண்டும். உடற்பயிற்சி அவசியம்" என்று பதிலளித்தார். உங்களுடன் பேசும்படியான சந்தர்ப்பம் கிடைப்பது தான் இவ்வுஷ்ணத்தையும் பாராமல் என்னை நடக்கத் தூண்டுகின்றது என்றேன். அவர் சிரித்தார். பின்பு, பானையிலிருந்து வேகவைத்த

வெங்காயம் ஒன்றை எடுத்து எனக்குக் கொடுத்தார். அது வேண்டாமென்று சொல்லி வேகவைக்காத வெங்காயம் தருமாறு கேட்டேன். இதைக் கடித்துக் கொண்டதால், வழவழவென்று இருந்த சாப்பாட்டுக்கு ருசி ஏற்பட்டது. குர்ஷித் சிறு தேக்கரண்டி ஒன்றை எனக்குக் கொடுத்தாள். ஆனால், காந்திஜீ பெரிய தேக்கரண்டி ஒன்றை என் பக்கமாகத் தள்ளி "உங்கள் உருவத்துக் கேற்ற கரண்டி இதுதான்" என்றார். உணவு முடியும் சமயம் நான் மாம்பழத்தை எடுத்த பொழுது என் மடிமேல் விரித்துக் கொள்ளக் கதர்க் கைக்குட்டை ஒன்றைக் கொடுத்தார். "ஊருடன் ஒத்துவாழ்" என்ற பழமொழிக் கேற்ப நான் இந்தியாவில் இந்தியர்களைப் போலவே நடக்க விரும்புவதாகவும், அதற்கு விதி விலக்காக இருக்க விரும்பவில்லை யென்றும் கூறினேன்.

"அப்படித்தான் நீங்கள் நடந்து கொள்கிறீர்கள். நானும் கைக்குட்டை வைத்திருக்கிறேனே" என்று காந்திஜீ பதிலளித்தார்.

மாலை 3-மணிக்கு பேட்டிகாணக் காந்திஜீயின் விடுதிக்கு நடந்து சென்றேன். காந்திஜீக்கு வந்த கடிதங்களுக்குத் தேசாயும், மற்றொரு காரியதரிசியும் தரைமீது உட்கார்ந்து பதில் எழுதிக்கொண் டிருந்தனர். குர்ஷித் விசிறிக்கொண் டிருந்தாள். அவ்வறையில் பிறிதொரு அலங்காரத்தைக் கண்டேன். அதாவது, அறையின் மண் சுவரில் மத சம்பந்தமான ஊர்வல மொன்றைக் காட்டும் சித்திரம் ஒன்று மங்கிய வர்ணத்தில் தீட்டப் பெற்றிருந்தது. காந்திஜீக்குப் பின்னால் உள்ள சுவரில் பனைமரம் ஒன்று, அதன் அருகில் பனை ஓலை ஒன்று, அதன் மேல் இங்கிலீஷ் எண் மூன்று போன்ற பெரிய உருவம் ஒன்று. இது 'ஓம்' என்று சொல்லப்படும் மத சம்பந்தமான அடையாளமெனவும், கிரேக்கர்களின் 'லோகோஸ்'

என்ற வார்த்தையின் கருத்தைப் போன்ற தெனவும் தேசாய் விளக்கினார். காந்திஜீ வந்தார்; எனக்கு முகமன் கூறினார்; படுக்கையில் சாய்ந்துகொண்டார்; "இனி நீங்கள் கேள்விகளை அடுக்கலாம். படுத்துக் கொண்டே சமாளிக்கின்றேன்" என்றார்.

அவருடைய அடிவயிற்றின்மீது வைப்பதற்காக முஸ்லிம் மாது அவரிடம் ஈரக் களிமண் மூட்டை ஒன்றைக் கொடுத்தார். "இது என் எதிர்காலத்தை நினைக்கச் செய்கின்றது" என்றார். நான் பதில் ஒன்றும் கூறவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் மீண்டும் "என் கருத்தை நீங்கள் கிரகிக்கவில்லைப் போல் இருக்கின்றதே?" என்றார். "கிரகிக்காமலில்லை. ஆனால், மண்ணோடு மண்ணாகச் சேர்வதைப்பற்றி நினைக்கும் காலம் இன்னும் உங்களுக்கு வரவில்லை; இளமை உங்களை விட்டு அகலவில்லை என்று நான் எண்ணுகிறேன்" எனக் கூறினேன்.

"ஏன்? ஒருசிலர் 120 வயதுவரை இருக்கலாம். நீங்கள், நான், மற்றெல்லோருமே முன்னேயோ—பின்னேயோ அக்கதியைத் தானே அடையவேண்டும்" என்று கூறினார். சிறிது தாமதித்து, "சரி!" என என்னிடமிருந்து கேள்விகளை எதிர்பார்த்தார்.

"எதிர்கால ஏற்பாடுகளைப் பற்றிய யோசனையை நான் கேட்டால், அதை அப்படியே நடைமுறைக்குக் கொண்டுவந்தால் எப்படியிருக்குமென்று கற்பனை செய்து பார்க்க நான் முயற்சிப்பதுண்டு. அதேபோல் பிரிட்டிஷார் வாபஸாக வேண்டுமென்ற உங்கள் திட்டத்தையும் கூட இவ்வாறே நீங்கள் சிந்தித்திருப்பீர்களென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். எனவே, அந்த வாபஸை நீங்கள் எப்படி எதிர்பார்க்கிறீர்கள்? படிப்படியாகவா?" என்று நான் கேட்டேன்.

அவர் ஆலோசித்து, "முதலில் சுதேச மன்னர்கள் இருக்கின்றனர். அவர்களுக்குப் படை பலமும் இருக்கின்றது. அவர்கள் ஏதாவது கலகத்தையுண்டாக்கலாம். பிரிட்டிஷார் வெளியேறும் போது, இங்கே அமைதி நிலவுமென நான் நிச்சயமாகக் கூற முடியாது. குழப்பங்கள் ஏற்படலாம். நான் சொல்லுவதென்னவெனில் பிரிட்டிஷார் ஒழுங்கான முறையில் வெளியேறி இந்தியாவை ஆண்டவனிடம் ஒப்புவிக்கட்டும். இம்மாதிரி இயற்கைக்கு மாறுபாடான பாஷையை நீங்கள் விரும்பாதிருக்கலாம். அதை அராஜகம் என்றும் கூறுங்கள். அதைவிட மோசமான நிலைமை இந்தியாவுக்கு வேறொன்றும் ஏற்பட்டுவிடாது. ஆனால், அதையும் தடுக்க நாங்கள் முயற்சிப்போம். ஒருகால், அராஜகம் ஏற்படாமலும் போகலாம்" என்று அவர் பதிலளித்தார்.

"உடனடியாகவே இந்தியர்கள் சர்க்காரை அமைத்துக் கொள்ள முடியாதா?" எனக் கேட்டேன்.

"ஆம், இங்குள்ள அரசியல் நிலைமையில் மூன்று அம்சங்களிருக்கின்றன: மன்னர்கள், முஸல்மான்கள், காங்கிரஸ். இவர்கள் சேர்ந்து தாற்காலிக சர்க்கார் ஒன்றை அமைக்கலாம்" என்று பதிலளித்தார்.

"அதிகாரத்தையும் பதவிகளையும் எந்த விகிதாசாரத்தின்படி பிரிப்பது?" எனக் கேட்டேன்.

"அது எனக்குத் தெரியாது. காங்கிரஸ் மிகச் சக்திவாய்ந்த அம்சமாயிருப்பதால், பெரும் பங்குக்கு உரிமை கொண்டாடலாம். ஆனால், அதையெல்லாம் இணக்கமாக முடித்துக் கொள்ளலாம்" என்றார்.

"பிரிட்டிஷார் பரிபூர்ணமாக வாபஸாக மாட்டார்களென்றே எனக்குத் தோன்றுகிறது. இந்தியாவை ஜப்பானியர்களுக்கு வெகுமதியாகக் கொடுப்பதுதான் இதன் அர்த்தம். இதற்கு இங்கிலாந்தோ ஒருகாலும் சம்மதி

யாது ; அமெரிக்காவும் ஒப்புக் கொள்ளாது. ஆகவே, பிரிட்டிஷார் மூட்டை முடிச்சுகளுடன் போகவேண்டு மென நீங்கள் கோருவது நடைமுறையில் சாத்தியமற்றது. பச்சைமரத்திலே பட்டை உரிப்பது போலாகும். பிரிட்டிஷார் ராணுவத்துடன் வாபஸாக வேண்டுமென்று நீங் கள் விரும்புகின்றீர்கள் ? இல்லையல்லவா ?" என் றேன்.

இரண்டு நிமிடங்கள் வரை காந்திஜீ ஒன்றுமே பேச வில்லை. அறையில் பூர்ண நிசப்தம் நிலவியது. கடைசியில் அவர், " நீங்கள் சொல்லுவது சரி. இல்லை, பிரிட்டனும், அமெரிக்காவும் மற்றத் தேசங்களுங்கூட இங்கே சேனைகளை வைத்துக் கொண்டு ராணுவ நடவடிக்கை களுக்கு இத் தேசத்தைத் தளமாக உபயோகித்துக் கொள்ளலாம். யுத்தத்திலே ஜப்பான் வெற்றியடைவதை நான் விரும்பவில்லை. அச்சுநாட்டு வெற்றியை நான் விரும்பவில்லை. ஆனால், இந்திய மக்கள் சுதந்திரம் அடைந் தாலொழியப் பிரிட்டன் வெற்றி பெறுமென்றே நான் நிச் சயமாக நம்புகிறேன். இந்தியாவை ஆளும் வரையில் பிரிட்டன் அற நெறியினின்று தவறியதாகவும், பலஹீன மானதாகவுமே யிருக்கும். ஆனால், இங்கிலாந்தைச் சிறு மைப்படுத்த நான் விரும்பவில்லை " என்றார்.

"ஐக்கிய தேசங்கள் இந்தியாவை ராணுவ தளமாக உபயோகிக்குமாயின் அநேக சிக்கல்கள் ஏற்படலாம். வெற்றிடத்திலே சேனைகள் இருக்க முடியாது. உதாரண மாக, ஐக்கிய தேசங்கள் ரயில் போக்கு வரத்தில் நல்ல கட்டுப்பாட்டைப் புகுத்த நினைக்கலாம் " என்றேன்

" ஓ ! அவர்கள் ரயில் பாதைகளை உபயோகித்துக் கொள்ளலாம். தங்களுக்குத் தேவையான பொருள்களை இறக்குமதி செய்யும் துறைமுகங்களிலே ஒழுங்கு முறை யிருக்க வேண்டியதும் அவர்களுக்கு அவசியம். பம்பாயி

லும், கல்கத்தாவிலும் கலவரங்கள் ஏற்பட்டு விடாமல் பார்த்து கொள்ள வேண்டும். இவ்விஷயங்களுக்கு ஒத்துழைப்பும், பொது முயற்சியும் அவசியம்" எனக் கூறினார்.

"இவ் ஒத்துழைப்பு விதிகளை உடன்படிக்கையில் காணலாமா?" என நான் கேட்டேன்.

"ஆம், இங்கிலாந்துடன் எழுத்து மூலம் நாங்கள் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்" என்றார்.

"அல்லது, பிரிட்டன், அமெரிக்கா, இன்னும் மற்றத் தேசங்களுடன்......" என நான் விரித்துக் கூறினேன்.

அவர் ஒப்புக் கொள்ளும் பாவனையில் தலையை அசைத்தார்.

"இதை ஏன் நீங்கள் இதுவரை சொல்லவேயில்லை. நீங்கள் ஆரம்பிக்க உத்தேசித்த சட்டமறுப்பு இயக்கத்தைப்பற்றிக் கேள்விப்பட்டபொழுது, நான் வெறுப்புற்றேன் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். அது யுத்தப் போக்குக்கு இடையூறு செய்யுமென நான் நம்பினேன். இந்த யுத்தத்தில் போர் புரிந்து நாம்தான் வெற்றி பெறவேண்டு மென்பது என் நினைப்பு. அச்சுநாடுகள் வெற்றி பெற்றால் உலகெங்கும் பரிபூர்ண இருளே நிலவு மென்பது எனது நம்பிக்கை. நாம் வெற்றி பெற்றாலோ சிறந்த உலகொன்றை எதிர்பார்க்கலாமென எண்ணுகின்றேன்" என்றேன்.

"இதைத்தான் முற்றிலும் நான் ஒப்புக் கொள்ள இயலவில்லை. பிரிட்டன் எப்பொழுதுமே கபட வேஷம் தரித்துக் கொண்டு முதலில் வாக்களிப்பதும், பிறகு அதை நிறைவேற்றாமல் ஏமாற்றுவதுமான காரியத்தையே செய்து வருகின்றது. எனினும், ஜனநாயக நாடுகள் வெற்றி பெற்றால் சீரிய நன்மைகளுக்கு இடமிருக்கிறது

என்ற வாதத்தை நான் ஒப்புக் கொள்ளுகிறேன் " என்று வாதித்தார்.

"அது நாம் ஏற்படுத்தும் சமாதானத்தைப் பொறுத்த தாகவே யிருக்கும்" என்றேன்.

"அது யுத்த காலத்தில் நீங்கள் செய்வதைப் பொறுத்தே யிருக்கும்" என அவர் திருத்தினர்.

"இந்திய சுதந்திரத்தில் அமெரிக்காவிலுள்ள அரசியல் அறிஞர்கள் அதிக அனுதாபம் உள்ளவர்களென்பதை உங்களுக்கு நான் கூற விரும்புகிறேன். அட்லாண்டிக் சாஸனம் இந்தியாவுக்குப் பொருந்தாது என்று சர்ச்சில் பிரசங்கம் புரிவதினின்றும் அமெரிக்க சர்க்கார் அவரைத் தடுக்க முயற்சித்தது. பஸிபிக் சாஸனம் ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணத்துடன், வாஷிங்டனில் பல முக்கியஸ்தர்கள் வேலை செய்து கொண்டு வருகிறார்கள். ஆனல், அதில் அவர்கள் வெகுதூரம் முன்னேறவில்லை. 'ஏகாதிபத்தியத்தை ஒழிப்பதுதான் அச் சாஸனத்தின் அடிப்படையான கொள்கையாக விருக்கும். ஆனல், பிரிட்டன் இந்தியாவை வைத்துக்கொண்டிருக்கும் வரை, நாம் எவ்வாறு அச் சாஸனத்தைப் பிரகடனம் செய்வதென்று' அவர்கள் கூறுகின்றனர்" என நான் ஆரம்பித்தேன்.

"எதிர்கால வாக்குறுதிகளில் எனக்குச் சிரத்தையில்லை. யுத்தத்திற்குப் பிறகு சுதந்திரம் பெறுவதிலும் எனக்கு அக்கறையில்லை. இப்பொழுதே சுதந்திரத்தை விரும்புகிறேன். அது யுத்தத்தில் இங்கிலாந்து வெற்றி பெறுவதற்கு உதவிபுரியும்" என அவர் உறுதியோடு கூறினர்.

"வைஸ்ராய்க்கு ஏன் உங்கள் திட்டத்தைத் தெரியப்படுத்தவில்லை? நேசதேச ராணுவ நடவடிக்கைகளுக்கு இந்தியாவைத் தளமாக உபயோகிப்பதில் இப்பொழுது

உங்களுக்கு ஆட்சேபமில்லை என்பது அவருக்கு நிச்சயம் அறிவிக்கப்பட வேண்டும் " என்றேன்.

அதற்குக் காந்திஜீ, " ஒருவரும் என்னிடம் கேட்க வில்லை. பொது மக்களைத் தயாரிப்பதற்காக நான் உத்தே சித்துள்ள சட்டமறுப்பு இயக்கம் பற்றி எழுதியிருக்கின் றேன். இது சம்பந்தமான நேரிடையான கேள்விகளை எழுத்து மூலமாகத் தந்தால் ' ஹரிஜனி ' லே பதில ளிக்கிறேன். கேள்விகள் மட்டும் சுருக்கமாக யிருக்கட் டும் " என்ருர். (' ஹரிஜன் ' என்பது காந்திஜீயின் ஆங் கில வாரப் பத்திரிகை. ' ஹரிஜன் ' என்ருல் தீண்டாதார் என்று பொருள்.)

" நான் எழுதும் முறையை நீங்கள் அறிந்திருந்தால் நான் எப்பொழுதுமே சுருக்கமாகவும் நேரடியாகவும் எழுதுவதுடன் சாரத்தைப் பிழிந்து காட்டவும் வல்லவன் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும் " என நான் தெரி வித்தேன்.

" நீங்கள் வரும் முன்பே ஜவாஹர்லால் உங்களைப் பற்றி என்னிடம் கூறியுள்ளார். நீங்கள் யோக்கியமான வர், சுயநல மற்றவர், வேறு எந்த விதமான உத்தேசத் துடனும் இங்கு வரவில்லை, பல ஜோலிக்காரரில்லை, உறுதி யான மனிதர் என்றும் கூறினுர். உங்களைப் பார்த்ததி லிருந்தே எனக்கு அது விளங்குகிறது " என்று சொல்லிக் காந்திஜீ சிரித்தார்.

" ஆம் உறுதிதான், உடல் சம்பந்தப்பட்டமட்டிலா வது " என்றேன்.

" நான் உங்களுடன் தாராளமாகவும், வெளிப்படை யாகவும் பேசினேன். நீங்கள் ' சாகிப்-லோக் ' (கண்ணிய மானவர்) என்றே எண்ணுகிறேன் " என்ருர்.

அவர் சிரித்தார்; நான் ஒன்றும் புரியாமல் விழித்து அவர் உதவியை நாடினேன். " நீங்கள், சாகப்-ப்ளோக்

(Bloke-மடையன்) என்று கூறினீர்கள்? அது ப்ளோக் என்ற ஆங்கில வார்த்தைதானே?" என்றேன். அங்கிருந்தோர் அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

"இல்லை, நான் சொன்னது 'லோக்' என்ற வார்த்தை" என்று சொல்லிக் காந்திஜீ சிரித்தார். காரியதரிசிகளில் ஒருவர் அப்பதத்திற்கு "இரண்டு கனவான்கள்" என்று அர்த்தம் கூறினார். தலையில் கொஸேக்* குல்லாயையொப்ப கனமான களிமண் மூட்டையைப் பரிவட்டம்போல் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த மகாதேவ தேசாய், 'லோக்' என்பதற்கு அர்த்தம், அதிக மேன்மையானது என்றார்.

"மிஸ். கேத்ரையின் மேயோ ("இந்தியத்தாய்" ஆசிரியை) இங்கு வந்தாள். அவ்ளிடம் நான் அன்பாயிருந்தேன். கடைசியில் ஆபாசத்தைப்பற்றி மட்டுமே எழுதினாள். அவளை நான் எப்படி அழைத்தேன் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று சிரிப்பு அடங்கியதும் காந்திஜீ கேட்டார்.

"தெரியாதே!" என்றேன்.

"சாக்கடைப் பரிசோதகர்" எனக் காந்திஜீ கூறினார்.

"நான் மிக ஏழ்மையான குடும்பத்திலிருந்து வந்தவன். பசியின் கொடுமையை நன்கு உணர்ந்தவன். நான் எப்பொழுதும் நசுக்கப்பட்ட ஏழை மக்களிடம் அனுதாபம் காட்டியிருக்கிறேன். பல அமெரிக்கர்கள் இந்தியா

---

* கொஸேக்குகள் ரஷ்யாவிலிருக்கும் குதிரைப்படை வீரர்கள். ஜார்காலத்தில் இவர்களுக்கு ஏதேஷ்டமாக மான்யம் விடப்பட்டிருந்தது. சலுகைகள் பல பெற்ற பெரிய விவசாயிகள் இவர்கள். யுத்தகாலத்தில் தங்கள் சொந்தக் குதிரைகளுடனும் ஆயுதங்களுடனும் வந்த ஜாருக்கு உதவி செய்வதே, அவரிடம் பெற்ற சலுகைகளுக்கு இவர்கள் செய்யும் கைம்மாறு.

விடம் பெரிதும் நட்புக்கொண் டிருக்கின்றனர். நீங்கள் சமீபத்தில் அமெரிக்காவைப் பாதிக்கும்படி சில கடுஞ் சொற்களை உபயோகித்தது மிகவும் துரதிர்ஷ்ட வசமான தென்றே நான் கருதுகிறேன்'' என்றேன்.

"அமெரிக்கர்களுக்கு அதிர்ச்சி கொடுக்கும் முறையில், ஏதாவது சொல்ல வேண்டுவது அவசியமென்றே அவ் வாறு சொன்னேன். என்னைப் பொறுத்தமட்டில், பல அமெரிக்கர்கள் இளகிய நெஞ்சம் படைத்தவர்களென்றே நினைக்கின்றேன். ஆனால், அவர்கள் பணப்பேயை வழி படும் வரையில் சீரிய உலகத்தை உண்டாக்க முடியாது என்பதை அவர்களிடம் சொல்ல விரும்பினேன். ஜன நாயக நாடுகள் அச்சு நாடுகளைத் தோற்கடித்துப் பின்னர் ஜப்பான், ஜெர்மனி போன்ற அவ்வளவு மோசமான நிலை மைக்கு வந்து விடுமோ என்ற அபாயமிருக்கிறது'' எனக் காந்திஜீ திடமாகக் கூறினார்.

"அந்த அபாயம் உண்மைதான். ஆனால், யுத்தத் தில் ஈடுபட்டால் இங்கிலாந்தில் பாஸிஸ ஆட்சி தோன்று மென அநேகர் சொன்னார்கள். ஆயினும் யுத்தத்திற்கு முன்பு இருந்ததைவிட இங்கிலாந்தில் இப்பொழுது உண் மையில் அதிக ஜனநாயகம் இருக்கிறது'' என்று நான் குறுக்கிட்டேன்.

அவர் ஒப்புக் கொள்ளாத தோரணையில், "இல்லை, அப்படியில்லையென்பது இந்தியாவைப் பார்த்தாலே தெரி கின்றது'' என்றார்.

"இங்கிலாந்தில் மட்டுமாவது..." எனத் தெரிவித் தேன்.

"இங்கிலாந்தில் அது உண்மையாக யிருக்கமுடியாது. சாம்ராஜ்யத்திலும் இல்லை. நீங்கள் எதிர்காலத்தில் நன்மைகளைச் செய்வீர்களென்று நான் எதிர்பார்த்திருக்க முடியாது. இந்திய தேசீய சுதந்திரத்திற்காக அநேக

ஆண்டுகள் உழைத்து விட்டேன். இனிச் சிறிதும் தாம திக்க முடியாது. ஆனால், எங்கும் எங்களிடம் நல்லெண் ணமிருக்கிறதென நம்புகின்றேன்" என்று காந்திஜீ வற் புறுத்தினர்.

அவர் சிறிது தயங்கினர். நிம்மதியற்றுத் தோன்றிய தாக என் கண்ணுக்குப்பட்டது. "இந்தியா, வெடிக்காத ஒரு பெரும் சுரங்க வெடி; இங்கிலாந்து அதன்மீது உட் கார்ந்திருக்கிறது. என்ருவது ஒருநாள் அது திடீரென்று வெடிக்கப் போகின்றது. பிரிட்டனிடம் வெறுப்பும், கோபமும் இங்கு வலுத்திருக்கிறது. எனவே, யுத்த முயற்சிக்கு எவ்வித உதவியும் பெறமுடியாது. பசிப் பிணியினுல் இந்தியர்கள் பிரிட்டிஷ் சேனையில் சேருகிருர் களே யன்றி, இங்கிலாந்துக்கு உதவி செய்ய வேண்டு மென்ற உணர்ச்சி அவர்களுடைய நெஞ்சகத்திலே குடி கொண்டதனுலல்ல" என்று தீர்க்காலோசனையுடன் அவர் கூறினர்.

"இந்தியாவிலே ஒப்பந்தம் ஏற்படுவது பற்றி இன்று நீங்கள் கூறிய நிபந்தனைகளைச் சுருக்கிக் கூற எனக்கு அனுமதி தந்தால், நீங்கள் கிரிப்ஸ் திட்டத்தையே தலை கீழாக மாற்றி விட்டீர்களென்றுதான் நான் கூறுவேன். கிரிப்ஸ் உங்களுக்கு ஏதோ சிலவற்றைக் கொடுத்துப் பெரும்பாலானவற்றை இங்கிலாந்துக்கு ஒதுக்கி வைத் தார். நீங்களோ சிலவற்றை இங்கிலாந்துக்கு ஒதுக்கி விட்டுப் பெரும் பகுதியை உங்களிடமே வைத்திருக் கிறீர்கள்" என்றேன்.

"மிகச் சரி, கிரிப்ஸ் திட்டத்தையே தலைகீழாக மாற்றி விட்டேன்" என அவர் ஒப்புக்கொண்டார்.

அவருடைய கடிகாரத்தைப் பார்த்தேன். என் பேட்டி நேரம் முடியவிருப்பதைக் கண்டேன். தேவ் வைத்திருந்த 'மனிதர்களும்-அரசியலும் செய்' என்ற நான் எழுதிய

புத்தகத்தைக் காட்டி "அதை உங்களைப் படிக்கச் சொல்ல அவ்வளவு தைரியம் எனக்கில்லை; எனினும், அதன் பக்கங் களையாவது புரட்டுவீர்களென நம்புகிறேன்" எனக் காந்திஜீயிடம் நான் கூறினேன்.

"பக்கங்களைப் புரட்டுவது" என்பதன் அர்த்த மென்ன எனக் காரியதரிசிகளுள், ஒருவர் கேட்டார். அதற் குக் காந்திஜீ, "முதலில் கடைசிப்பக்கத்தையும் பிறகு முதல் பக்கத்தையும் பின்பு மத்தியிலுள்ள பக்கத்தையும் பார்ப்பதுதான் அதன் அர்த்தம்" என்றார்.

"கடைசியில் புத்தகத்தை எறிந்து விட்டு, அது அருமையாக இருக்கிறதென்று சொல்வது" என்று தமாஷாக நான் கூறிவிட்டு, "இப்பொழுது, ஒப் பந்தப்படி ஒரு மணி நேரத்தை நான் உபயோகித்துக் கொண்டு விட்டேன்" என்றேன்.

"ஆம், உபயோகித்துக் கொண்டீர்கள். தண்ணீர் தொட்டியில் போய் உட்காருங்கள்" என்று காந்திஜீ சொன்னார்.

தண்ணீர் தொட்டியில் போய் உட்காருங்கள் என் பதற்குக் காந்திஜீ ஆங்கிலத்தில் சொன்னது, 'ஸிட் யின் திடப்' ஒருகால் 'ஸிட் ஆன் ஏ டாக்' (ஸிட் ஆன் ஏ டாக் என்பதற்குப் பொருள், கஷ்டங்களை அனுபவி என் பது) என்று ஆங்கிலேயர்கூறுவதையே காந்திஜீ இப்படிக் கூறுகிறாரோ என்று வெளியில் போகும்போது எனக்குள் நினைத்துக் கொண்டேன். எப்படியும், அது ஒரு நல்ல யோசனையே என்றெண்ணி, அந்த யோசனையைச் செவ் வனே செய்து முடிக்க நினைத்தேன். நான் வீட்டை அடைந்ததும் உடைகளைக் களைந்து விட்டுத் தொட்டிகளி லொன்றில் தண்ணீர் நிரப்பி, சிறிய மரப் பெட்டி யொன்றை அதனுள் வைத்து, அப்பெட்டியின்மீது டர்க் கிஷ் துண்டை மடித்து வைத்தேன். பிறகு, சற்றுப் பெரிய

மரப்பெட்டி ஒன்றைத் தொட்டிக்கு வெளியே வைத்து அதன் மீது எனது டைப் யந்திரத்தை வைத்தேன். இந்த ஏற்பாடுகளைச் செய்து முடித்த பிறகு தொட்டியிலுள்ள பெட்டி மீது உட்கார்ந்து காந்திஜீயுடன் ஒரு மணி நேரம் பேசிய விஷயங்களை டைப் செய்ய ஆரம்பித்தேன். இடை யிடையே எனக்கு வியர்த்த பொழுது தொட்டியிலிருந்து பாத்திரமொன்றில் தண்ணீரை எடுத்து என் முதுகிலும் கால் கைகளிலும் ஊற்றிச் கொண்டேன். இவ்வுபாயத் தால் அதிகக் களைப்படையாமல் ஒரு மணி நேரம் டைப் செய்ய முடிந்தது.

5-மணிக்கு உணவு. காந்திஜீ வருவதற்கு முன்பே நான் வந்து விட்டேன். அவர் வந்த பொழுது என்னைப் பார்த்து, " இதுதான் சரி " என்றார். பகல் உணவுக்கு நான் நேரம் சென்று வந்ததைச் சுட்டிக் காட்டவே அவர் இவ்வாறு கூறினார்.

" நீங்கள் வருவதற்கு முன்னால் வருவது அதிக மரியா தையா, அல்லது வந்தபின் வருவதுதான் அதிக மரியா தையா யென்பது எனக்கு விளங்கவில்லை " என்றேன். "இத்தகைய போலி மரியாதைகளெல்லாம் இங்கே கவனிக் கப்படுவதில்லை. நீங்கள் விரும்பும்போது இங்கு வரலாம்" என்றார்.

வேக வைத்த வெங்காயத்தைச் சாப்பிடும்படி மீண் டும் என்னை அவர் வற்புறுத்தினார். நான் உறுதியுடன் மறுத்தேன். "நீங்கள் பட்டினி கிடக்க வேண்டியதுதான்" என்றார். இரு போஜனங்களுக்கும் இடையில் திருட்டுத் தனமாக மோரும் தேத்தண்ணீரும் அருந்தியதாகக் கூறி னேன். தண்ணீர் தொட்டியில் உட்காரும் அவருடைய யோசனையைச் செவ்வனே செய்து முடித்தேன் என்று சொல்லி, நான் டைப் செய்யக் கையாண்ட முறையை வர்ணித்தேன். அவர் உரக்கச் சிரித்தார். அவர் சோர்ந்

திருந்ததால் மாலையில் உலாவ வரமுடியாது குறித்து என்னிடம் மன்னிப்புக் கோரினார்.

நான் உணவு உண்டு முடித்ததைக் கண்டதும் "பிஷர்! நீங்கள் விரும்பும்போது போகலாம். வீண் சடங்குகளை அனுஷ்டிக்காதீர்கள். முன்பு நான் உங்களுக்குக் கூறியபடி நம்மிடையே போலி மரியாதை வேண்டாம்" என்றார். நான் எழுந்து தொப்பியையும் செருப்பையும் எடுத்துக்கொண்டேன். போஜன சாலைக்கு வெளியில் வந்தபொழுது அவர் என்னிடம், "ஜவாஹர்லால் ஞாயிற்றுக் கிழமை இங்கு வருகிறார் என்பதை யாராவது உங்களுக்குத் தெரிவித்தார்களா?" என்று கேட்டார்.

"இல்லை. இன்று என்ன கிழமை? நான் மறந்து விட்டேன்" என்றேன்.

"வெள்ளிக்கிழமை" எனக் கூறிச் சிரித்தார்.

"என்னுடன் ஒரு புகைப் படத்தில் நிற்க ஒப்புக் கொள்ளுகிறீர்களா?" என்று கேட்டேன்.

"படமெடுப்பவர் தற்செயலாக இங்கு வந்தாரானால் உங்களுடன் படத்தில் காணப்படுவதில் எனக்கு ஆட்சேபனையில்லை" எனக் காந்திஜீ பதிலளித்தார்.

"இது நீங்கள் எனக்கு அளிக்கும் பெரும் கௌரவம்" என்றேன்.

"நீங்கள் கௌரவங்களில் பிரியப்படுகிறீர்களா?" எனக் கேட்டார்.

"நாம் எல்லோருமே விரும்பவில்லையா?", என்றேன்.

"ஆம், ஆனால் சில சமயங்களில் நாம் அவைகளுக்கு அதிக விலை கொடுக்க வேண்டியிருக்கிறது" என ஒப்புக் கொண்டார்.

நான் விடுதிக்குச் சென்று மறுபடியும் தொட்டிக்குள் உட்கார்ந்து காந்திஜீ ஹரிஜனில் பதிலளிப்பதாக வாக்களித்த நான்கு கேள்விகளை டைப் செய்தேன்.

காந்திஜீயுடன் இன்று நான் கண்ட பேட்டி சரித்திர முக்கியத்துவம் பெற்ற சம்பவமென நான் உணர்ந்தேன். இந்தியாவின் கடினமான பிரச்னையில் அவர் தம் அபிப் ராயத்தை மாற்றிக் கொண்டு விட்டார். 'பிரிட்டிஷார் வெளியேற வேண்டும்' என அவர் முன் அறிவித்ததற்குப் பதிலாக என்னிடம் 'பிரிட்டிஷார் இந்தியாவிலேயே தங்கி யுத்தத்தை நடத்தலாம்' என்று சொல்லி விட்டார். அதாவது, யுத்த முயற்சிகளுக்கு இடமளிக்க அவர் தயா ராக யிருக்கிறார். சில சந்தர்ப்பங்களை யொட்டி ஆதரவு கொடுக்கவும் தயாராக யிருக்கிறார். இந்திய சுதந்திரத் தின் அதி முக்கிய பிரச்னைகளிலே சமரசம் செய்து கொள்ள சித்தமாயிருப்பதையே அவருடைய அறிக்கை கள் எனக்குத் தெளிவுபடுத்தின.

விருந்தினர் விடுதிக்கருகில் திறந்த வெளியில் போடப் பட்ட எனது படுக்கையில் நான் படுத்துப் புரண்டு கொண்டிருந்தேன். அருகே வாரத்தில் வைத்திருந்த விளக்கை எடுத்துக் கொள்ளாமல் இரவில் படுக்கையை விட்டு நகரக் கூடாதெனக் குர்ஷித் எச்சரித்தாள். வெளியே தேள் நடமாட்ட மிருப்பதாகக் கூறினாள்.

சிறிது தூரத்தில் நடந்த பிரார்த்தனைக் கூட்டத்தின் மெல்லிய ஓசை காற்றில் தவழ்ந்து வந்தது. ஒன்பது மணியளவில் உறங்கி விட்டேன். இரவு குளிர்ச்சியாக இருந்தது.

ஜூன் 6, 1942

காலை 5 மணிக்கு எழுந்தேன். க்ஷவரம் செய்து கொண்டு, நான் லண்டனில் வாங்கிய நீலக்கோடு உள்ள கால் சட்டையையும், அரியநாயகத்தினிடம் இரவல் வாங்கிய வெள்ளைக் கதர் ஜிப்பாவையும் தரித்துக் கொண் டேன். அது என் முழங்கால்வரை தொங்கியது. மாம் பழம், ரொட்டி, தேத்தண்ணீர் அடங்கிய காலையுணவை

உண்டேன். பிறகு, காந்திஜீயின் குடிசை நோக்கி நடக்கலானேன். அவர் வெளியே படுக்கையின்மீது உட்கார்ந்துகொண்டு ஆழமான கிண்ணமொன்றிலிருந்து மாம்பழ ரசத்தைக் கரண்டியால் எடுத்து உறிஞ்சிக்கொண்டிருந்தார். அவருடைய மனைவி அவருக்கு விசிறிக்கொண்டிருந்தார். அவர் முழத்துண்டுதான் உடுத்திருந்தார்.

"ஓகோ!" என்று என்னை வரவேற்று எனது கோலத்தை வர்ணித்தார். "கதரும், பிக்கேடிலி*யும் கலந்த இச்சேர்க்கை உங்களுக்குப் பிடிக்கிறதா?" என்றேன்.

மிக நேர்த்தியாய் இருப்பதாகக் கூறிவிட்டு, "ஏது! ஜிப்பா உங்களுக்கென்றே தைத்தாற் போல் இருக்கிறதே!" எனக் காந்திஜீ கேட்டார். அரியநாயகத்தினிடம் இரவல் வாங்கியதாக அவரிடம் கூறினேன். "அமெரிக்காவில் கொலம்பியா சர்வகலாசாலையில் படித்தவர் அவர் என்று உங்களுக்குத் தெரியுமா?" என்று அவர் என்னைக் கேட்டார். எனக்குத் தெரியும் என்றேன் சிறிது தாமதித்து, "என் கேள்விகளைப் பார்த்தீர்களா?" எனக் கேட்டேன். "ஆம், இன்று காலையில் தான் அவைகளைக் கவனிப்பேன்" எனப் பதிலளித்தார்.

சிறிது நேரத்தில் நாங்கள் உலாவப் புறப்பட்டோம். அவர் வாரத்துக்கொருமுறை மௌனமாயிருப்பதன் கருத்து என்ன என்பதைக் கேட்டேன். "கருத்து என்றால் என்ன பொருள்" எனக் கேட்டார்.

"காரணம்" எனப் பதிலளித்தேன்.

அவர் புன்சிரிப்புடன், "நான் அங்கு மிங்கும் இழுபட்டபொழுது இது ஏற்பட்டது" என ஆரம்பித்தார். "நான் மிகக் கடுமையாக வேலை செய்துகொண்டிருந்

* பிக்கேடிலி என்பது லண்டனில் ஓர் முக்கியப் பகுதி. உயர்தர வகுப்பினர் புழங்குமிடம்; நவநாகரிகத்தின் இருப்பிடம். ஆசிரியரின் கால்சட்டை அங்கு வாங்கப்பட்டது.

தேன்; தகிக்கும் உஷ்ணத்தில் இடைவிடாத ரயில் பிர யாணம்; பல கூட்டங்களில் பிரசங்கம்; பல்லாயிரக் கணக்கான மக்கள் ரயில்களிலும், இதர இடங்களிலும் என்னிடம் வந்து கேள்விகளைக் கேட்பதும், வழக்காடு வதும், என்னுடன் பிரார்த்தனை செய்ய விரும்புவதுமா யிருந்தனர். வாரத்தில் ஒருநாள் அமைதியாயிருக்க விரும் பினேன். எனவே, மௌனதினத்தை ஆரம்பித்தேன். பின்னர் நான் அதைப் புனிதப்படுத்தி அதற்கோர் ஆத் மார்த்தப் போர்வையையும் போர்த்தினேன். ஆனால் உண்மையில் அதன் நோக்கம் எனக்கு ஒரு நாள் விடு முறை கொடுப்பதைத் தவிர வேறொன்றுமில்லை" என்றார்.

நாங்கள் நடக்கலானோம். ஆசிரமச் சமையலறையில் வேலை பார்க்கும் இளம் பெண்ணொருத்தி மீது அவர் கைகளை வைத்து நடந்து வந்தார். "மௌனம் ஓய்வைக் கொடுக்கிறது. மௌனம் என்பது மாத்திரம் ஓய்வைக் கொடுத்துவிடாது. ஆனால், நாம் பேசக்கூடியவர்கள். பேசாமலிருப்பதென்றால், அது அதிக நிம்மதியைக் கொடுக்கிறது — சிந்தனைக்கும் அங்கு நேரமிருக்கிறது" எனச் சிந்தனையுடன் கூறினார்.

நான் காந்திஜீக்கு அடுத்து நடந்து போனேன். ஆனால், அந்தப் பெண் காந்திஜீ மீது வெயில் படாதபடி எங்களுக்கு மத்தியில் குறுக்கே பெரிய கருப்புக் குடை யைப் பிடித்து வந்தாள். அவர் தலையிலோ மார்பிலோ எவ்வித ஆடையையும் தரிக்கவில்லை. டாக்டர் தாஸ் மற் றொரு பக்கத்திலிருந்து காந்திஜீக்குக் குடை பிடித்து வந் தார். சில சமயங்களில் தாஸ் வேகமாக முன் சென்று ரஸ்தாவில் கிடந்த நீண்ட மூங்கில் குச்சிகளை நீக்கி, வயல் களில் எறிந்தார்.

ஏப்ரல் மாதத்தில், சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸின் பேச்சு வார்த்தைகளில் காங்கிரஸ் பிரதிநிதியாகக் கலந்து

கொண்ட ஸ்ரீ. சி. ராஜகோபாலாச்சாரியாரின் திட்டங்களைப் பற்றிக் காந்திஜீயின் அபிப்ராயத்தைக் கேட்டேன். ராஜாஜி (இந்தியர்கள் அவரை அப்படித்தான் அழைக்கிறார்கள்) இந்தியாவிலுள்ள சிறந்த அறிஞர்களில் ஒருவர். காந்திஜீயின் பழைய நண்பரும் கூட்டாளியுமாவார். காந்திஜீயின் கடைசிப் புதல்வரான தேவதாஸின் மனைவிக்குத் தந்தை. கிரிப்ஸ் திட்டம் தோல்வியுற்றதிலிருந்து ராஜாஜி பாகிஸ்தானை (தனி முஸ்லிம் நாடு) காங்கிரஸ் ஒப்புக் கொள்ளுவதின் மூலம், காங்கிரஸும், லீகும் ஒன்று சேர வேண்டுமென்று வற்புறுத்திப் பல பிரசங்கங்கள் செய்து வந்தார். ராஜாஜியின் திட்டத்தைப் பற்றி நான் காந்திஜீயைக் கேட்டபொழுது, அவர், "அவருடைய திட்டங்கள் எவை யென்பது எனக்குத் தெரியாது. நாங்கள் இருவரும் வாதப் பிரதி வாதத்தில் ஈடுபடுவது வியாகுலமளிக்கும் விஷயமென்று கருதி, நம்மைப் பொறுத்த வரையில் இச் சர்ச்சையை நிறுத்திக் கொள்ளுவோம் என்று நான் கூறிவிட்டேன். ஆனால், உண்மையில், ராஜாஜி என்ன சொல்கிறார் என்பது எனக்குத் தெரியாது" என்றார்.

"இந்துக்களும், முஸ்லிம்களும் ஒன்று சேர்ந்து பொது வேலைகளில் ஈடுபடுவதினால் சமாதானமான ஒத்துழைப்பை ஒரு வேளை பெறலாம் என்பதுதானே அவருடைய திட்டத்தின் முக்கிய அம்சம்" எனக் கேட்டேன்.

"ஆம். ஆனால் அது முடியாத காரியம். காங்கிரஸ் லீக், இவைகளைத் தவிர மூன்றாவது சக்தி—இங்கிலாந்து—இங்கிருக்கும் வரை எங்களுடைய மதவேறுபாடுகள் எங்களைப் பீடித்துக்கொண்டேயிருக்கும். வெகு காலத்துக்கு முன்பே, அப்போது வைஸ்ராயாயிருந்த மிண்டோ பிரபு இந்தியாவில் சுலபமாக ஆதிக்கம் செலுத்த வேண்டுமானால், பிரிட்டிஷார் இந்துக்களையும், முஸ்லிம்

களையும் வேறுபடுத்த வேண்டுமென்று கூறியிருக்கிறார்" எனக் காந்திஜீ விடையளித்தார்.

மிண்டோ பிரசங்கத்திலிருந்து அவர் குறித்த மேற்கோளை நானும் பார்த்திருக்கிறேன் என்று அவரிடம் கூறினேன். "அது முதல் இதுவே பிரிட்டிஷாரின் ஆட்சிக் கொள்கையாக இருந்து வருகிறது" எனக் காந்திஜீ அழுத்தமாகக் கூறினார்.

"மாகாணங்களிலே 1937, 38, 39-ம் வருடங்களில் காங்கிரஸ் மந்திரி சபை பதவியிலிருந்த பொழுது, அவை முஸ்லிம்களுக்கு விரோதமாகப் பாரபட்சம் காட்டின என எனக்குச் சொல்லப்பட்டது" என்றேன்.

காந்திஜீ அதை மறுத்து, "அம் மாகாணங்களிலிருந்த பிரிட்டிஷ் கவர்னர்களே அது அப்படியில்லையென்று உத்தியோகப் பூர்வமாக ருசுபித்திருக்கின்றனர்" என்றார்.

"ஐக்கிய மாகாணத்தில் தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெறுவது நிச்சயமில்லாதிருந்ததினால் காங்கிரஸும், முஸ்லிம் லீகும் தேர்தல் ஒப்பந்தம் செய்து கொண்டதாகவும், பிறகு, காங்கிரஸ் அமோகமான வெற்றியை அடைந்ததும், முஸ்லிம்களுடன் சேர்ந்து கூட்டு சர்க்கார் அமைக்க மறுத்ததாகவும் கூறப்படுவதில் உண்மையில்லையா?" என்று நான் வற்புறுத்திக் கேட்டேன்.

"இல்லை" எனக் காந்திஜீ மறுத்து விட்டார். "ஐக்கிய மாகாணத்தில் காங்கிரஸ் அமைத்த சர்க்காரில் நான்கு முஸ்லிம் மந்திரிகள் இருந்தனர். முஸ்லிம் லீகின் பிரதிநிதி ஒருவருமில்லை. ஆனால், முஸ்லிம்கள் இருந்தனர். முஸ்லிம்களுடன் சேர்ந்து ஒத்துழைக்க நாங்கள் எப்பொழுதுமே முயற்சித்தோம். காங்கிரஸ் தலைவரான அபுல்கலாம் ஆஸாத் எங்கள் கைப் பொம்மை என்று சொல்லப்படுகின்றார். ஆனால், உண்மையில் அவரே காங்கிரஸின் சர்வாதிகாரி. அவர் அதன் தலைவர். ஆனால்

கிரிப்ஸ் திட்டம் இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கு மிடையே இருந்த பிளவை அதிகப்படுத்தி விட்டது. இவ்விரு சமூகங்களுக்குமிடையே யிருந்த வித்தியாச மானது, பிரிட்டிஷ் சர்க்காரால் மிகைப்படுத்தப் பட்டு விட்டது" என்ருர்.

"காங்கிரஸ், முஸ்லிம் லீக் தலைவர்கள் கிரிப்ஸு டன் பேசப் புது டில்லிக்கு வந்தனர். கிரிப்ஸைக் கண்டு பேசினர். ஆனல், தங்களுக்குள் ஒருவர்க்கொருவர் பேசிக் கொள்ள வில்லை. இது மிக மிக வருந்தத் தக்க விஷயமே" என்று நான் கூறினேன்.

"வருந்தக்கூடிய விஷயம் மட்டுமல்ல, வெட்கக் கேடான விஷயமுமாகும். ஆனல், முஸ்லிம் லீகின் தவ றுதலே அதற்குக் காரணம். இந்த யுத்தம் ஆரம்பித்த வுடனே, புது டில்லியில் வைஸ்ராயைச் சந்திக்குமாறு எங்க ளுக்கு அழைப்பு அனுப்பப்பட்டது. காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினரான ராஜேந்திர பிரஸாதும் நானும் காங்கிரஸ் சார்பாகப் பேசுவதற்குச் சென்ருேம். ஜின்னு முஸ்லிம் லீகுக்காக வந்தார். நாம், நம்முள் முதலில் கலந்து பேசிப் பின் ஒருமுகப்பட்டுப் பிரிட்டிஷ் சர்க் காரைச் சந்திக்கலாம் என நான் ஜின்னுவைக் கேட்டுக் கொண்டேன். புது டில்லியில் சந்திப்பதாக நாங்கள் ஒப்புக் கொண்டோம். ஆனல், நாம் இருவரும் சேர்ந்து இந்திய சுதந்திரத்தைக் கோருவோமென நான் சொன்ன பொழுது, ஜின்னு, 'நான் சுதந்திரத்தை விரும்பவில்லை' எனக் கூறிவிட்டார். நாங்கள் அதை ஒப்புக் கொள்ளு வதற்கில்லை. வைஸ்ராயிடம் போகும் பொழுதாவது சேர்ந்து போவதின் மூலம் தோற்றத்திலாவது ஒற்று மையைக் காட்டுவோமென வற்புறுத்தினேன். அவர் என் காரில் வரட்டும், அல்லது நான் அவர் காரில் வருகி றேன் என்றும் கூறினேன். அவர் காரில் நான் வருவ

தற்கு அவர் ஒப்புக் கொண்டார். ஆனால், நாங்கள் வைஸ்ராயிடம் வெவ்வேறு தொனியில் பேசினோம். வெவ் வேறு அபிப்ராயங்களை வெளியிட்டோம்" எனக் காந்திஜீ கூறினார்.

இதற்குள் நாங்கள் காந்திஜீயின் வீட்டுக்குத் திரும்பி விட்டோம். அவர் வெளியில் நின்றார். நான் மூங்கில் காலொன்றில் சாய்ந்து நின்றேன். ஆனால், காந்திஜீ அதிகத் தெம்புடன் தொடர்ந்து பேசினார். "உண்மை யான வாழ்க்கையில், எங்களை இரு தேசீய இனங்களாகப் பிரிப்பது முடியாத காரியம். நாங்கள் இரு தேசீய இனங் களல்ல. ஒவ்வொரு முஸ்லிமும் தனது வம்ச பரம்ப ரையை ஆராய்ந்தால் தன் மூதாதைகளில் ஒருவர் இந்து வாயிருந்திருப்பதை அறிவான். ஒவ்வொரு முஸ்லிமும் இஸ்லாமைத் தழுவிய இந்துவேயாவான். மதமாற்றம் மட்டும் தேசீய இனத்தைச் சிருஷ்டித்து விடாது. உதா ரணமாக, நாங்கள் இரு தேசீய இனங்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். செல்வாக்குள்ள கிருஸ்தவ மத குரு ஒருவர் எங்கள் எல்லோரையுமே கிருஸ்தவ மதத் திற்கு மாற்றி விட்டாரானால் நாங்கள் ஒரே தேசீய இன மாக ஆய்விடுவோமா? மாட்டோம். இதே போன்று இந்தியாவில் உள்ள இரண்டு மதங்கள் இரண்டு தேசீய இனங்களை உண்டாக்க முடியாது. ஐரோப்பா கிருஸ்தவ மதத்தைத் தழுவி யிருக்கிறது. ஆனால், பாஷையிலும் பண்பாட்டிலும் ஒரே மாதிரியாயுள்ள ஜெர்மனியும் இங்கி லாந்தும் பயங்கரமாகத் தங்கள் குரல்வளைகளைப் பிடித்து நெறித்துக் கொள்ளுகின்றன. இந்தியாவிலுள்ள எங்க ளுக்கோ பொதுப் பண்பாடு இருக்கின்றது. வடக்கே இந்துக்களும், முஸ்லிம்களும் ஒருங்கே ஹிந்தி—உருது என்ற இரு பாஷைகளையும் அறிவார்கள். சென்னையில் இந்துக்களும் முஸ்லிம்களும் தமிழ் பேசுகிறார்கள்; வங்

காளத்தில் ஹிந்தியோ, உருதோ தெரியாது. இருவரும் வங்காளி பாஷையே பேசுகிருர்கள். பசு விஷயமாகவோ, அல்லது மத ஊர்வல விஷயமாகவோ ஏற்படும் சிறு சம்பவங்கள் தான் வகுப்புக் கலகங்களை மூட்டிவிடுகின்றன. எனவே, இதிலிருந்து ஒரு படிப்பினை நன்கு புலப்படுகின்றது. அதாவது, எங்கள் மூடநம்பிக்கைதான் இக்கஷ்டங்களை உண்டாக்குகின்றதே யொழிய வெவ்வேறு தேசிய இனங்களாயிருப்பது அன்று" எனப் பகன்ருர் காந்திஜீ.

"கிராமங்களிலே மதவேறுபாடுகள் கிடையாதென்று கேரோவும் (வைஸ்ராயின் அயல் நாட்டுக் காரியங்களைக் கவனிக்கும் காரியதரிசி, பஞ்சாபிலே பிரிட்டிஷ் உத்தியோகஸ்தராகப் பல வருடங்கள் இருந்தவர்.) ஜன்கின்ஸும் (சப்ளை-இலாகாவிலுள்ள பெரிய பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்) என்னிடம் கூறினர். மேலும், கிராமங்களிலே இந்துக்களும், முஸ்லிம்களும் சச்சரவின்றி அமைதியாகவே வாழ்கின்றனரென்று மற்றவர்கள் கூறியதையும் கேட்டிருக்கின்றேன். இது உண்மையாயின், இந்தியாவில் 90 சதவிகிதம் கிராமங்களாக யிருப்பதினுல் இவ்விஷயம் மிக முக்கியமானது" என்றேன்.

"அது அப்படித்தான். இதிலிருந்து விளங்கும் உண்மை யென்ன வென்ருல், ஜனங்கள் பிரிந்திருக்கவில்லை. அரசியல் வாதிகள்தான் எங்களைப் பிரிக்கின்றனர்" எனக் கூறினுர் காந்திஜீ.

புதுடில்லியில் நான் தங்கிய ஹோட்டலில் முஸ்லிம் பணியாள் ஒருவர் இருக்கிருர். அவர் முஸ்லிம் லீக் அங்கத்தினர்; பாகிஸ்தானைப் பிரசாரம் செய்கின்றவர். இருந்தாலும், அவர் என்னிடம், "முஸ்லிம்கள் சிறுபான்மையோராயிருக்கும் இடங்களில்தான் வகுப்புக் கலவரங்கள் எப்பொழுதுமே தோன்றுகின்றன. ஆனல், இந்துக்கள்

சிறுபான்மையோராயிருக்கும் இடங்களில் ஒருபொழுதும் அப்படியில்லை" என்று கூறியதை நான் காந்திஜீயிடம் சொன்னேன். அதற்குக் காந்திஜீ, "பிஷர்! நீங்கள் இங்கே வந்து சிறிது நாட்களேயாயின. இதற்குள் எல்லாவற்றையும் ஆராய்ந்துவிட முடியாது. ஆனால், நீங்கள் பரிசீலனை செய்து பார்த்து நாங்கள் தவறிவிட்டோம் அல்லது குற்றவாளிகளென்று கண்டீர்களேயாயின் தயவுசெய்து அதைப் பகிரங்கமாகக் கூறுங்கள்" என்றார்.

இவ்வாறு பேசிக்கொண்டே நீண்ட மூங்கில் கொட்டிலுக்கு என்னை அழைத்துச் சென்றார். "இவர்கள் என்னுடைய நோயாளிகள்" என்றார். பெண்ணொருத்தி உட்கார்ந்திருந்த படுக்கையருகில் சென்று நின்றார். அப்பெண் நோயுற்றிருப்பது போல் தென்பட்டாள். காந்திஜீ அவளுடன் பேசிக்கொண்டிருந்த ஐந்து நிமிட நேரமும், இருவரும் சிரித்த வண்ணமாயிருந்தனர். "என் நோயாளிகளிலே மிக அருமையானவர்களுள் இவள் ஒருத்தி" எனக் காந்திஜீ அறிவித்தார்.

டாக்டர் தாஸ் எங்களுடன் இருந்தார். "அவளை வைத்தியரிடம் ஒப்புவித்து விடுவது நல்லதல்லவா?" என நான் காந்திஜீயைக் குத்தலாகக் கேட்டேன்.

"இல்லை, இங்கே கொஞ்சம் அரைகுறை வைத்தியமுண்டு" எனக் காந்திஜீ பதிலளித்தார். பிறகு இன்னொரு அறைக்குள் நுழைந்தார். சிவப்பு மரத் தொட்டில் ஒன்றைத் தவிர அங்கு வேறொன்றும் இல்லை. காந்திஜீ அறையினுள் நுழைந்ததும் தாய் அக் குழந்தையைத் தொட்டிலினின்று தூக்கினாள். அவர், "அக் குழந்தையின் கன்னங்களில் தட்டி இவள் என்னுடைய நோயாளியல்ல, எனக்கு மனோ நிம்மதியைக் கொடுக்கக் கூடியவள்" என்றார். குழந்தையும் பதில்

கூறும் முறையில் முக மலர்ச்சியோடு காணப்பட்டது. அவர் மேலும் அக் குழந்தையைச் சந்தோஷத்துடன் தட்டிக் கிள்ளினர். "இந்தக் குழந்தையின் தகப்பனர் எல்லைப்புறத்தில் நிறுவப் பெற்றிருக்கும் பிரிட்டிஷ் சேனையில் சார்ஜன்டாக யிருந்தார். இந்தியர்களைச் சுட்டுத் தள்ளுமாறு அவருக்குக் கட்டளை பிறந்தது. அதை நிறைவேற்ற அவர் மறுக்கவே பதினறு வருட சிறைவாச தண்டனை பெற்றார். அவரை விடுதலை செய்யுமாறு பல மனுக்கள் சென்றன. அதன் விளைவாக, ஆறு வருடங்கள் சிறையில் கழித்த பிறகு, இரண்டு வருடங்களுக்கு முன் விடுதலை செய்யப்பட்டார். இப்பொழுது அவர் எங்களுடன் இங்கு வசித்து வருகிறார்" என்றார் காந்திஜீ. நாங்கள் காந்திஜீயின் வீட்டை யடைந்ததும், நான் விடைபெற்றுக்கொண்டேன். வீடு திரும்பும் வழியில் என் வீட்டிற்கு எதிரில் உள்ள காந்திஜீயின் காரியதரிசிகளில் ஒருவருடைய வீட்டிற்குள் நுழைந்தேன். காந்திஜீயை நான் பேட்டிகாணும் சமயங்களில், அவர் காந்திஜீக்கு அருகில் உட்கார்ந்திருப்பார். அவர் குள்ளமானவர். அறிவு மிகுதியைக் காட்டும் முகத்தை யுடையவர். அவர் காந்திஜீயுடன் 24 வருடங்கள் வேலை செய்திருக்கின்றார். பிரிட்டிஷார் இந்தியாவில் இருப்பதை ஒப்புக்கொள்ளும் தோரணையில் காந்திஜீ நேற்று என்னிடம் கூறியதைப் பற்றி அவர் அபிப்ராயத்தைக் கேட்டேன். அதற்கு அவர், "அது ரொம்ப ஸ்வாரஸ்யம் உள்ளது, புதுமையாகவும் இருக்கிறது, அதிர்ச்சி தரக் கூடியதுமாகும். யுத்தத்தினல் எவ்வித நன்மையும் வருமென நான் நம்பவில்லை. எவ்வித யுத்தத்துக்கும் சகாயம் செய்யக் கூடாது" என்றார். இவ்வார்த்தைகளை அவர் பன்முறை திரும்பத் திரும்பக் கூறினர். இது அவருடைய தெய்வீகத் தலைவரின் வார்த்தைகளைப் பற்றிய வெளிப்

படையான விமர்சனமாகும். காந்திஜீயின் கூட்டாளிகள் அவரால் அச்சுறுத்தப்படவில்லை யென்பதையே இவ் விமர்சனம் தெளிவாகக் காட்டுகின்றது. கடைசியாக, அவருடைய பெயரைக் கேட்டதில் கிஷோர்லால் கணேஷ் யாங்லால் மஷ்ருவாலா எனத் தெரிந்தது. மத்தியில் உள்ள பெயர் கடவுளைக் குறிப்பதாகும்.

மத்தியானச் சாப்பாடு வரையில் தண்ணீர் தொட்டியில் உட்கார்ந்து டைப் செய்தேன்.

போஜன வேளையில் காந்திஜீ என்னிடம், " பிஷர்! உங்களுடைய பாத்திரத்தைக் கொடுத்தால் கொஞ்சம் காய்கறிகள் வைப்பேன் " என்ருர்.

"இரண்டு நாட்களாகக் காய்கறி அவியலையும், பசலைக் கீரையையும் நான்கு தடவை சாப்பிட்டு விட்டேன். அதற்குமேல் அவைகளில் விருப்பமில்லை" யென்று கூறினேன்.

" உங்களுக்குக் காய்கறிகள் பிடிக்காதா என்ன ? " என்ருர்.

" இந்தக் காய்கறிகளின் ருசி பிடிக்கவில்லை " யெனப் பதிலளித்தேன்.

வியப்புடன், " அப்படியா ! " என்று சொல்லி விட்டு, " நீங்கள் உப்பும் எலுமிச்சம்பழமும் நிறைய சேர்த்துக் கொள்ள வேண்டும் " என்ருர்.

" இருக்கும் ருசியையும் கொல்லவா ? " எனக் கேட்டேன்.

" இல்லை " என்று சிரித்துக் கொண்டே, " ருசியை அருமையாக்குவதற்காக " என்ருர்.

" ஓகோ ! நீங்கள் அஹிம்சா வாதி, ருசியைக் கூடக் கொல்லமாட்டீர்களே ! " என்றேன்.

" மனிதர்கள் இது ஒன்றைத்தான் கொல்வார்கள்

என்றால், நான் பொருட்படுத்த மாட்டேனே!" எனப் பதிலளித்தார்.

எனக்கு வியர்த்ததால் முகத்தையும், கழுத்தையும் கைக் குட்டையால் துடைத்துக்கொண்டேன். காந்திஜீ பக்கம் திரும்பி, "அடுத்த முறை நான் இந்தியாவுக்கு வரும் பொழுது..." இச்சமயம் அவர் எதையோ மென்று கொண்டிருந்ததால் நான் சொன்னதைக் கவனித்ததாகத் தெரியவில்லை. ஆகவே நான் தொடர்ந்து பேசாமல் நிறுத்திக்கொண்டேன்.

ஆனால், என் பக்கம் திரும்பிப் பாராமலே காந்திஜீ, "உம், சொல்லுங்கள், அடுத்த முறை நீங்கள் இந்தியாவுக்கு வரும் பொழுது......? "நீங்கள் சேவாகிராமத்தில் குளிர்ச்சியளிக்கும் மின்சார இயந்திரம் அமைத்து விட வேண்டும், அல்லது வைஸ்ராயின் மாளிகையில் வசிக்க வேண்டும்" எனக் கூறி முடித்தேன்.

அதை அவர் செய்ய உறுதி கொண்டவர்போல, "ரொம்ப சரி" என்றார்.

சாப்பாட்டிற்குப் பிறகு தூங்கினேன். பின்பு, காலையில் காந்திஜீயுடன் பேசியவைகளைக் குறித்து வைத்தேன். 1930- மே மாதத்தில், பிரிட்டிஷ் பாராளும் மன்றத்துக்குச் சமர்ப்பிக்கப் பெற்ற சைமன் கமிஷனின் நீண்ட அறிக்கையைப் படித்தேன். அதில் 1-ம் பாகம், 59-ம் பக்கத்தில் கீழ்க்கண்டவாறு இருக்கின்றது:—

"சிந்துவிலுள்ள பிரிட்டிஷ் கமிஷனருக்குக் கொடுக்கப் பட்டிருக்கும் சுதந்திரம் மிகவும் அதிகம் என்ற அபிப்ராயம் அங்குள்ள சிறுபான்மையோராகிய இந்துக்களிடம் இருக்கின்றது. மற்றொருபுறம் பம்பாயிலிருந்து சிந்து மாகாணம் பிரிக்கப்பட வேண்டுமென்று முஸ்லிம்கள் கூக்குரலிடுகிறார்கள். பாமர மக்களிடையேயோ அல்லது சிந்துவிலுள்ள முகம்மதிய விவசாயிகளிடையே

யோ இக் கோரிக்கை பலம் பெற்றிருக்க வில்லை. ஆனால், இந்தியாவிலுள்ள முஸ்லிம் தலைவர்களே இதை வலியுறுத்துகின்றனர். ஏனெனில், பெருவாரியான முஸ்லிம்களடங்கிய பிராந்தியங்களாகிய பலுசிஸ்தானம், எல்லைப்புறம், பஞ்சாப் இவைகளை யொட்டிய சிந்துவையும் சேர்த்து ஒரு தனி முஸ்லிம் ராஜ்யமாக ஸ்தாபித்து விட்டால் இந்து ஆதிக்கத்தை எதிர்க்கும் கோட்டையாக அது விளங்கும் என்று இத்தலைவர்கள் கருதுகின்றனர்."

இவ்வாக்கியத்தைப் படித்துக் காந்திஜியுடன் இன்று மாலைப் பேட்டியை ஆரம்பித்தேன். "முஸ்லிம் தலைவர்களைக் காட்டிலும், மிக மிகக் குறைவாகவே முஸ்லிம் மக்களிடையே இப் பிரிவு மனப்பான்மை காணப்படுகின்றது என்று நீங்கள் இன்றுகாலையில் கூறியதையே இது உறுதிப்படுத்துகின்றது" என்றேன்.

"அது உண்மை" என ஒப்புக்கொண்டார்.

"முஸ்லிம் தலைவர்களின் பீதி எந்த அளவுக்கு உண்மையாயிருக்கக் கூடும்? ஒருகால், இந்துக்கள் ஆதிக்கம் செலுத்த விரும்புகிறார்களென்று முஸ்லிம் பாமர மக்களை விட அவர்களுக்கு நன்கு புரிந்திருக்கலாம். இந்துக்கள் தங்கள் கைமேலோங்குவதற்கான முயற்சி யெதுவும் செய்ய வில்லை யென்று நீங்கள் கூறமுடியுமா?" எனக் கேட்டேன்.

அதற்குக் காந்திஜீ "இங்கு மங்கும் தனிப்பட்டவர்கள் வருந்தத்தக்க அத்தகைய எண்ணங்களை உடையவர்களாயிருக்கலாம். ஆனால், காங்கிரஸ் இயக்கமோ, பொதுவாக இந்துக்களோ ஆதிக்கம் செலுத்த விரும்ப வில்லை யென்று நான் கூறமுடியும். மாகாணங்கள் பரந்த சுயாட்சியை அனுபவிக்க வேண்டும். நானோ, பலாத்காரத்துக்கும் அதிகார நோக்கத்துக்கும் நேர் விரோதி. மற்ற நாடுகளையோ அல்லது தங்கள் ஜனங்களையோ

நசுக்கும் சக்திவாய்ந்த சர்க்காரின் மீது எனக்கு நம்பிக்கையில்லை. அப்படியிருக்க, அதிகாரம் செலுத்துவதை நான் எப்படி விரும்புவேன்? இக்குற்றச்சாட்டு தலைவர்கள் மக்களிடம் தங்கள் பிடிப்பைப் பலப்படுத்திக் கொள்ளுவதற்காகக் கிளப்பிவிட்ட பூச்சாண்டியாகும்" என்றார்.

காங்கிரஸ் கட்சியைப் பற்றி அவரிடம் கேட்பதற்குப் பல கேள்விகள் இருப்பதாகச் சொன்னேன். காங்கிரஸ் ஸ்தாபனம் பெரும் வியாபாரிகள் கையிலிருக்கின்றதென்றும், பம்பாய் ஆலை முதலாளிகள் காந்திஜீ வேண்டும் பணத்தைக் கொடுப்பதாகவும், உயர்ந்த அதிகாரத்திலிருக்கும் ஆங்கிலேயர்கள் என்னிடம் சொன்னதை ஞாபகப்படுத்திக் கொண்டு "இவ் வார்த்தைகளில் உண்மையிருக்கிறதா?" எனக் கேட்டேன். அதற்கு அவர், "துரதிர்ஷ்டவசமாக, அவை உண்மைதான். தனது வேலைகளைச் செய்வதற்குக் காங்கிரஸிடம் போதுமான பணமில்லை. வருடத்துக்கு ஒவ்வொரு அங்கத்தினரிடமிருந்தும் நாலணு வசூலித்து அதிலிருந்து அவ் வேலைகளைச் செய்வதென முதலில் எண்ணினோம். ஆனால், அது நடைமுறையில் சாத்தியமாயில்லை" என்றார்.

"காங்கிரஸின் வரவு செலவில் இந்தியப் பணக்காரர்களால் பூர்த்தி செய்யப்படும் பகுதி எவ்வளவு?" எனக் கேட்டேன்.

"அநேகமாக, பூராவும்தான். உதாரணமாக இந்த ஆசிரமத்தில் நாங்கள் இப்பொழுதிருப்பதை விட மிக எளிய வாழ்க்கை நடத்திச் செலவைக் குறைக்கலாம். ஆனால், நாங்கள் அப்படிச் செய்ய வில்லை; பணக்கார நண்பர்களிடமிருந்து பணம் கிடைக்கின்றது" என விவரித்தார்.

"முதலாளிகளிடமிருந்து பணம் பெறுவதினால்

காங்கிரசின் கொள்கைகள் பாதிக்கப்படுவதில்லையா? அது ஒரு பிரதிப்பிரயோஜனத்தைச் செய்யத் தூண்டுகோலாயிருக்குமல்லவா?" என நான் கேட்டேன்.

"ஆம், அது ஒரு தூண்டாக் கடன்தான். ஆனால், உண்மையில் பணக்காரர்களுடைய எண்ணங்கள் எங்களைச் சிறிதும் பாதிக்கவில்லை. சில சமயங்களில் எங்களுடைய பூர்ண சுதந்திர கோரிக்கையைக் கண்டு அவர்கள் பயப்படுகிறார்கள்" என்றார்.

"முன்னொரு நாள் ஹிந்துஸ்தான் டைம்ஸில் ஒரு செய்தி பிரசுரமாயிருப்பதைக் கண்டேன். தொழிலாளர்களின் வாழ்க்கைச் செலவு உயர்ந்து விட்டதால் அதைச் சமாளிப்பதற்காகத் தமது பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு மீண்டும் பிர்லா கூலியை உயர்த்தியிருக்கிறார் என்று அச் செய்தி கூறிற்று. இவ்வளவு தூரம் வேறு எந்த ஆலை முதலாளியும் செய்யவில்லையென்று அப்பத்திரிகை மேலும் தொடர்ந்து கூறுகின்றது. ஹிந்துஸ்தான் டைம்ஸ் காங்கிரஸ் பத்திரிகையல்லவா?" என்றேன்.

அதற்குக் காந்திஜீ சிறிது தயக்கத்துடன், "இல்லை, அது முற்றிலும் பிர்லாவுக்குச் சொந்தம்" எனக் கூறிச் சிரித்தார். மேலும் அவர், "எனது கடைசிப் புதல்வன் அதன் ஆசிரியராயிருப்பதனால் இது எனக்குத் தெரியும். நீங்கள் சொல்லும் விஷயங்கள் உண்மைதான். ஆனால், அதற்கும் காங்கிரஸுக்கும் சம்பந்தமில்லை. ஆயினும், காங்கிரஸ் தர்ம பிரபுக்களை எதிர்பார்த்திருப்பது துரதிருஷ்டவசமே என்று நீங்கள் கூறுவது சரிதான். நான் துரதிர்ஷ்டவசம் என்ற வார்த்தையையே உபயோகித்தேன். ஏனென்றால், அது எங்கள் கொள்கையை மாறுபடுத்த வில்லை" என்றார்.

"சமூக பொருளாதாரப் பிரச்னைகளை அநேகமாக

ஒதுக்கியே தள்ளிவிட்டுக் கேவலம் தேசியத்தை மட்டும் கையாள்வதன் விளைவுகளில் ஒன்றல்லவா இது" எனக் கேட்டேன்.

"இல்லை, அப்போதைக்கப்போது, முக்கியமாக பண்டித நேருவின் செல்வாக்கினால் காங்கிரஸ் முற்போக்கான சமூக சீர்திருத்தத் திட்டங்களையும், பொருளாதாரத் திட்டம் வகுக்கும் முறைகளையும் கையாண்டு வந்திருக்கிறது. அவைகளை யெல்லாம் நான் உங்களுக்குச் சேகரித்துத் தருகின்றேன்" என்றார்.

"ஆனால், இம்மாதிரியான சமூக மாறுதல்கள் சுதந்திர காலத்துக்காகத் தான் வகுக்கப்படுகின்றன என்பது உண்மையல்லவா?" என்று நான் கேட்டேன்.

"இல்லை, 1937 - 39-ல் காங்கிரஸ் பதவி யேற்றிருந்த சமயம், அநேக சீர்திருத்தங்களைக் காங்கிரஸ் மந்திரிகள் புகுத்தினர். பிற்கால பிரிட்டிஷ் நிர்வாகம் அவைகளையெல்லாம் ரத்து செய்து விட்டது. கிராமங்களிலும், பள்ளிக்கூடங்களிலும், இதர துறைகளிலும் நாங்கள் சீர்திருத்தங்களைப் புகுத்தினோம்" என்றார்.

"பிறந்தது முதல் சாகும்வரை விவசாயி எப்பொழுதும் கிராம லேவாதேவிக்காரனிடம் கடன்பட்டிருத்தல், இந்தியாவில் இருக்கின்ற சாபக்கேடான விஷயங்களில் மிக முக்கியமானதொன்று எனக் கேள்விப்பட்டிருக்கிறேன். இதையே சைமன் கமிஷன் அறிக்கையிலும் படித்தேன். ஐரோப்பிய நாடுகளிலே சர்க்காரும் தயாள குணம் படைத்த தனிப்பட்டவர்களும் இம்மாதிரி சந்தர்ப்பங்களில், அநியாய வட்டி வாங்குபவர்களை ஒழிப்பதற்காக நில அடமான வங்கிகளை ஏற்படுத்தியிருக்கின்றனர். உங்கள் பணக்கார நண்பர்களில் சிலரும் இம்மாதிரியான வங்கிகளை வியாபார முறையிலே ஏன் ஆரம்பிக்கக் கூடாது? வருடத்துக்கு 40 முதல் 70 சத

விகிதம் வரையில் வட்டி வாங்குவதற்குப் பதிலாக 2 அல்லது 3 சதவிகிதம் வட்டி வாங்கிக்கொள்ளலாமல்லவா? இதனால் அவர்களுடைய பணமும் பத்திரமாக யிருக்கும், ஓரளவு லாபமும் அடையலாம், தேசத்துக்கு உதவி செய்ததாகவும் ஆகும்" என்றேன்.

"அது நடவாத காரியம்; சர்க்கார் சட்டத்தினாலன்றி மற்றெதனாலும் செய்ய முடியாது" எனக் காந்திஜீ உறுதியாகக் கூறினார்.

"ஏன்?" எனக் கேட்டேன்.

"ஏனெனில், விவசாயிகள் கடனைத் திருப்பித் தர மாட்டார்கள்" என்றார்.

"ஆனால், லேவாதேவிக்காரனிடம் தன் வாழ்க்கையையே அடமானமாக வைப்பதைவிட, 3 சதவிகித வட்டிக்குக் கடனாகப் பெற்ற பணத்தைத் திருப்பிக் கொடுப்பது மிக நல்லதென்று விவசாயி நிச்சயமாக உணர்வான்" என வாதித்தேன்.

"வட்டிக்குப் பணம் கொடுத்தல் புராதனமான ஏற்பாடு; கிராமங்களில் இது ஆழமாக வேரூன்றி விட்டது. சுதந்திரம் பெறுமளவிருக்கும் வரை நீங்கள் கூறியவைகள் நடைமுறைக்கு ஒவ்வாதவை" எனக் காந்திஜீ விவரித்தார்.

"சுதந்திர இந்தியாவில் என்ன ஏற்படும்? பெரும்பான்மையாக விருக்கும் விவசாயிகளின் அபிவிருத்திக்கு உங்கள் திட்டம்தான் என்ன?" என்று நான் கேட்டேன்.

"விவசாயிகள் நிலங்களை எடுத்துக் கொள்ளுவார்கள். அதை எடுத்துக் கொள்ளும்படி அவர்களுக்கு நாங்கள் சொல்ல வேண்டிய அவசியமில்லை; தாங்களாகவே நிலங்களைக் கைப்பற்றத்தான் செய்வார்கள்" எனப் பதிலளித்தார்.

"நிலச்சுவான்தார்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கப்படுமா?" எனக் கேட்டேன்.

"இல்லை, அது பொருளாதாரத் துறையில் சாத்திய மற்றது என்று சொல்லிப் புன்முறுவலுடன், கோடீஸ் வரர்களிடம் எங்களுக்குள்ள நன்றி இம்மாதிரி யான வார்த்தைகளைச் சொல்வதிலிருந்து எங்களைத் தடுக்க வில்லையே! ஒவ்வொரு கிராமமும் சுய ஆட்சி பெற்று, தனி வாழ்வு நடத்தும்" என்றார்.

"ஆனால், நிச்சயமாகத் தேசீய சர்க்கார் ஒன்று இருக்க வேண்டுமல்லவா?" என்றேன்.

"அவசியம் இல்லை" என்றார்.

"ஆனால் ரயில், தந்தி போன்றவற்றை நடத்து வதற்குத் தேசீய நிர்வாகமாவது தேவைப்படாதா?" என வற்புறுத்தினேன்.

அதற்கு அவர், "இந்தியாவில் ரயில்கள் இல்லையே என்பதற்காக நான் கண்ணீருகுக்கப் போவதில்லை" எனப் பதிலளித்தார்.

"ஆனால், இது விவசாயிக்குக் கஷ்டங்களைக் கொடுக்கும். அவனுக்கு நகரத்தில் உற்பத்தியாகும் பொருள்கள் தேவைப்படும். மேலும், தான் உற்பத்தி செய்யும் தானியங்களைத் தேசத்தின் இதர பாகங் களுக்கும், வெளிநாடுகளுக்கும் அனுப்பி அவன் விற்றாக வேண்டும். கிராமத்துக்கு நீர்ப்பாசனமும், மின்சாரமும் தேவைப்படும். எந்தத் தனிப்பட்ட கிராமமும் நீர் வீழ்ச்சி மின்சார உற்பத்தி நிலையத்தையோ, சிந்து மாகாணத்தி லுள்ள சுக்கூர் அணைக்கட்டைப் போல நீர்ப்பாசன முறையையோ ஏற்படுத்த முடியாதல்லவா?" என்றேன்.

"அது (சுக்கூர் அணைக்கட்டு) பெரும் ஏமாற்றத் தையே தந்தது. அம்மாகாணத்தையே கடனுக்குள் ஆழ்த்திவிட்டது" என்று இடைமறித்துக் கூறினார்.

"அது எனக்குத் தெரியும். ஆனால், அது பெருவாரி யான பூமியைப் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வந்திருக்

கிறது. உண்மையில், அது ஜனங்களுக்குப் பெரிய வரப் பிரசாதந்தான்" என்றேன்.

அதற்குக் காந்திஜீ தலையை அசைத்துக்கொண்டு "என்னுடைய கொள்கைகளுக்கு முரணுக மத்திய சர்க்கார் ஒன்றின் நிர்வாகம் இருக்கத்தான் இருக்கும் என்பதை நான் உணர்கிறேன். இருப்பினும், பாராளும் மன்றத்தின் பிரதிநிதிகளைப் பொதுஜன வாக்கின் மூலம் தேர்ந்தெடுக்கும் மேல் நாட்டு ஜனநாயக முறையில் எனக்கு நம்பிக்கையில்லை" என்ருர்.

நான் இதைத் தொடர்ந்து வாதிக்க ஆவல் கொண்டேன். "பின், இந்தியாவில் என்னதான் செய்ய விரும்புகின்றீர்கள்?" எனக் கேட்டேன்.

"இந்தியாவில் ஏழுலட்சம் கிராமங்களிருக்கின்றன. ஒவ்வொரு கிராமத்திலும் அதன் ஜனங்களின் சித்தப்படி நிர்வாகஸ்தாபனம் ஒன்று தோன்றும். பொது தேசீய நிர்வாகஸ்தாபனமொன்றை அமைக்கக் கிராமங்களெல்லாம் வாக்குரிமை பெறும். ஆகையால், நாற்பதுகோடி ஓட்டுகளுக்குப் பதிலாக ஏழுலட்சம் ஓட்டுகளே யிருக்கும். அதாவது, ஒவ்வொரு கிராமத்துக்கும் ஓர் ஓட்டு. கிராமங்கள் ஜில்லா நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்கும்; அவர்கள் மாகாண நிர்வாகிகளைத் தேர்ந்தெடுப்பார்கள். முறைப்படி அவர்கள் தலைவரொருவரைத் தேர்ந்தெடுப்பார்கள். இவரே முக்கிய தேசீய நிர்வாகியாக இருப்பார்" என்று காந்திஜீ விவரித்தார்.

"இது பெரும்பாலும், சோவியத் முறையைப் போலவேயிருக்கின்றதே" என்றேன்.

"அது எனக்குத் தெரியாது. ஆயினும் பரவாயில்லை" எனக் காந்திஜீ ஒப்புக் கொண்டார்.

"இப்பொழுது, காங்கிரஸைப் பற்றிய 2-வது கேள்வியை உங்களைக் கேட்க விரும்புகின்றேன்.

"காங்கிரஸ் ஒரு யதேச்சாதிகார ஸ்தாபனமெனக் குற்றஞ் சாட்டப்படுகிறது. சூஷ்டர், வின்ட் என்ற இரு பிரிட்டிஷ் ஆசிரியர்கள் எழுதிய 'இந்தியாவும் ஜனநாயகமும்' என்று புத்தகம் ஒன்று வெளி வந்துளது. அதில், காங்கிரஸின் மீது குற்றஞ் சுமத்தப்பட் டிருக்கின்றது. அதாவது, 1939-ல் காங்கிரஸ் மாகாண மந்திரிகள் ராஜீநாமா செய்தது தங்கள் இச்சைப்படியல்ல வென்றும், ஸ்தல காங்கிரஸ் சர்வாதிகாரிகளின் உத்தரவின் பேரில் தான் என்றும் அதில் கண்டிருக்கிறது" என்றேன்.

காந்திஜீ மிக அழுத்தமாக, "இது பொருளற்றது. லண்டனில் ஒவ்வொரு பிரச்னையும் பொதுமக்கள் சபையில் நிறைவேற்றப்படுகிறது, அல்லது கட்சிக் கூட்டங்களிலும் சங்கங்களிலும் தீர்மானிக்கப்படுகின்றது என நீங்கள் நினைக்கின்றீர்களா? காங்கிரஸ் அங்கத்தினர்களால், காங்கிரஸ் பதவியாளர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். காங்கிரஸில் அங்கம் வகிக்கும் மந்திரிகளோ காங்கிரஸ் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டவர்கள். பிரிட்டனில் ஜனநாயகம் எவ்வாறு வேலை செய்கிறதென்பதைப் பற்றிய சில விஷயங்களை சர். சாமுவேல் ஹோர் என்னிடம் கூறியிருக்கின்றார்" என்றார்.

"அவர் உங்களுக்குப் பிடித்தமான ராஜதந்திரி போலும்!" என வியப்புடன் கூறினேன். இது சிரிப்பை உண்டாக்கியது.

"எது எப்படி யிருப்பினும் அவரை எவரும் எப்பொழுதும் நன்குபுரிந்துகொள்ள முடியும். பிரதிநிதித்துவ ஜனநாயக முறையும் லஞ்சப்பேயினின்றும் தப்பவில்லை. டாமனிஹால் விஷயமும், சிகாகோ மேயர் விஷயமும் அறிந்த உங்களுக்கு இந்த உண்மை நன்கு தெரிந்திருக்க வேண்டும். சுதந்திர இந்திய நிர்வாகம் மற்றத் தேச

நிர்வாகங்களிலிருந்து மாறுபட்டிருக்குமென்றே நான் நினைக்கின்றேன். எங்களுக்கும் சிறப்பாக சில முறைகள் உண்டு" என்று காந்திஜீ கூறினார்.

அச்சு நாடுகளுக்குத் தப்பிச் சென்ற இந்தியத் தலைவரான சுபாஷ் சந்திரபோஸைப் பற்றி அவரிடம் சில நிமிஷங்கள் பேச விரும்புவதாகக் கூறினேன். "போஸ் விமான விபத்தில் இறந்தார் என்று வந்த செய்தியைக் கொண்டு நீங்கள் போஸின் தாய்க்கு அனுதாபத் தந்தி அனுப்பியிருப்பதாகக் கேள்விப்பட்ட பொழுது, நான் மிக்க அதிர்ச்சியடைந்தேன்" என்று நான் காந்திஜீயிடம் சொன்னேன்.

"பொய் வதந்தியை ஆதாரமாகக் கொண்டு நான் செய்ததைத் தானே குறிக்கின்றீர்கள்?" எனக் காந்திஜீ கேட்டார்.

"இல்லை, பாஸிஸ ஜெர்மனிக்குச் சென்று அதோடு கலந்து கொண்ட மனிதரின் பிரிவுக்காக நீங்கள் வருத்தம் தெரிவித்தீர்களே என்பதற்காகத்தான்" எனப் பதிலளித்தேன்.

அதற்குக் காந்திஜீ உறுதியுடன், "போஸ் தேசாபிமானிகளுள் சிறந்தவர் என நான் கருதியதால் அவ்வாறு செய்தேன். அவருடைய போக்கில் தவறுகள் இருக்கலாம், அப்படித்தான் நினைக்கிறேன். நான் அடிக்கடி போஸின் போக்கை எதிர்த்திருக்கிறேன். அவர் காங்கிரஸ் தலைவராக வருவதை இரு முறை தடுத்திருக்கின்றேன். அவருடன் என்னுடைய கொள்கைகள் அடிக்கடி மாறுபட்டிருந்த போதிலும், முடிவில் அவர் தலைவராக வந்தார். இந்தியாவுக்கு உதவிகோரி அவர் ருஷ்யாவுக்கோ அமெரிக்காவுக்கோ சென்றிருந்தால் அது மேன்மையாகயிருந்திருக்குமா?" எனக் கேட்டார்.

"ஆம், நிச்சயமாக! நீங்கள் யாரிடம் உதவிநாடிப் போகின்றீர்களென்பதில் வித்தியாசம் இருக்கத்தான் செய்கிறது" என்றேன்.

"இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு யாருடைய உதவியையும் நான் விரும்பவில்லை. தன்னைத் தானே இந்தியா காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன்" எனக் காந்திஜீ தீர்மானமாகக் கூறினார்.

"சரித்திரம் முழுமையும் புரட்டிப் பார்த்தால், ஒரு நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் இதர நாடுகளோ தனிப்பட்ட நபர்களோ கலந்துகொண் டிருக்கின்றனர் என்பதற்கு உதாரணங்களாக எண்ணிறந்தவைகளைக் காண்கின்றோம். பிரிட்டனிடமிருந்து அமெரிக்கா சுதந் திர மடைவதற்கு உதவிசெய்ய லாபேட்டு என்பவர் பிரான்ஸிலிருந்து போனார். ஸ்பானியக் குடியரசைக் காப்பதற்காக ஆயிரக்கணக்கான அமெரிக்கர்களும், அந்நிய தேசத்தவர்களும் ஸ்பெயினிலே உயிரை விட்டனர்" என்று நான் கூறினேன்.

"தனி மனிதர்கள் தானே! ஆம். ஆனால், எங்களை அடிமைப்படுத்தி யுள்ள இங்கிலாந்துடன் அமெரிக்கா நட்புக்கொண் டிருக்கின்றது. பாஸிஸத்தைத் தோல்வி யுறச் செய்த பிறகு ஜனநாயக நாடுகள் சிறந்த உலகத்தை யுண்டாக்கும் என்பதில் எனக்கு இன்னும் சந்தேகந்தானி ருக்கின்றது. பெரும்பாலும், பாஸிஸ்டு நாடுகளைப் போலவே இவைகளும் ஆகக் கூடும்" என்றார் காந்திஜீ.

"அன்று நான் கூறியபடி இந்த விஷயத்தில்தான் நாம் அபிப்ராய பேதங்கொள்கிறோம். சமூகப் பிரச்னை களை ஒதுக்கிவிட்டு இந்தியர்கள் தங்கள் சுதந்திரத்திலே மட்டும் கவனம்செலுத்துவது ஏமாற்றமும் குறைபாடு மாகும். போஸ் ஓர் இளைஞர், நாடகமேடை நடிப்பில் திறமையுடையவர். ஜெர்மனியில் அவர் பாஸிஸ வசீகரத்

துக்கு அடிமைப்பட்டு இந்தியா திரும்பி வந்து இந்தியாவைச் சுதந்திர பாஸிஸ்டு நாடாக்கினல், பிரிட்டிஷ் ஆட்சியின் கீழிருப்பதைவிட மிக மோசமான நிலைமையில் நீங்கள் இருப்பீர்களென்று நான் எண்ணுகிறேன்" எனக் கூறினேன்.

"பிரிட்டிஷ் ஆட்சியிலும் பாஸிஸத்தின் அம்சங்கள் பலமாகக் காணப்படுகின்றன. இந்தியாவில் இந்த அம்சங்களைத் தான் ஒவ்வொரு நாளும் நாங்கள் பார்த்து அனுபவிக்கின்ருேம். யுத்தத்தில் ஜயித்து உலகத்தை சீருறச் செய்யும் உரிமைச்சாஸனத்தை பிரிட்டிஷார் பெற விரும்பினுல் இந்தியாவில் தங்கள் ஆதிக்கத்தை விட்டுக் கொடுப்பதன் மூலம் பிராயச்சித்தம் தேடிக் கொள்ள வேண்டும். உங்கள் தலைவர், 'ரூஸ்வெல்ட்' எனக் காந்திஜீ தாழ்ந்த குரலில் தொடர்ந்து, நான்கு சுதந்திரங்களைப் பற்றிப் பேசுகிருர். சுயேச்சையாயிருக்கும் சுதந்திரத்தை அவர்கள் அதில் சேர்த்திருக்கிருர்கள். ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான், போன்ற நாடுகளில் ஜனநாயகத்துக்காக எங்களைப் போராடுமாறு கேட்கின்ருர்கள். நாங்களே அதை இன்னும் பெருத பொழுது, அதற்காக நாங்கள் அந்நிய நாடுகளில் எப்படிச் சண்டை போடமுடியும்?" எனக் கேட்டார்.

இச் சந்தர்ப்பத்தில் சர்வதேசியச் செய்தி இலகாவைச் சேர்ந்த சாப்ளின் என்பவரும், 'டைம் அண்டு லைப்' என்ற பத்திரிகையைச் சேர்ந்த பெல்டன் என்பவரும், அங்கு வந்தனர். அவர்கள் சீனுவில் பல ஆண்டுகள் வசித்தவர்கள். சமீபத்தில் ஜெனரல் ஸ்டில்வெல்லுடன் பர்மாவிலிருந்து சிரமப்பட்டு வெளியேறியவர்கள். சட்டை, கால்சராய், செருப்புகளுடன் குடிசையினுள் நுழைந்தார்கள். காந்திஜீயுடன் அவர்கள் பேட்டிகாண முன் கூட்டியே ஏற்பாடு செய்யப்பட் டிருந்தது. அவர்

களுடைய பேச்சைக் கேட்க விரும்பினால் நானும் அங் கிருக்கலாமெனக் காந்திஜீ என்னைப் பார்த்துக் கூறிவிட்டு, அவர்கள் பக்கம் திரும்பி, "நீங்கள் சப்பணங்கொட்டி உட்காருவீர்களா?" எனக் கேட்டார். அவர்கள் அவ் வாறே உட்கார்ந்ததும், அவர், "இவ்வளவு நேரம் அமெ ரிக்கர் ஒருவர் என்னைக் கேள்விகளைப் போட்டுச் சின்னா பின்னப்படுத்திவிட்டார். இப்பொழுது நான் உங்கள் கையிலிருக்கிறேன்" என்றார். அரை மணி நேரம் அவர் களுடன் அவர் பேசினார். பிறகு, என் குடிசைக்கு அவர் களை அழைத்துச் சென்று குளிர்ந்த நீர் வழங்கி என்னு டைய ஸ்நான அறையிலேயே அவர்களைக் குளிக்குமாறு வற்புறுத்தினேன்.

காந்திஜீயின் பிரதம காரியதரிசியான மகாதேவ தேசாய் காந்திஜீயின் வேண்டுகோளின்படி, நேற்று நான் அவரிடம் கேட்டிருந்த கேள்விகளுக்குக் காந்திஜீ யின் பதிலை எனக்குக் கொண்டுவந்தார். பதில் நீண்ட இரு வெள்ளைக் காகிதங்களிலே டைப் செய்யபட்டிருந் தது; அதில் காந்திஜீயின் கையினாலே சில திருத்தங்கள் செய்யப்பட்டிருந்தன.

காந்திஜீக்கு அனுப்பிய என் கேள்விகள் பின் காணும் கடிதத்தில் அடங்கியிருக்கின்றன.

அன்பான ஸ்ரீ காந்திஜீ,

சென்ற சில நாட்களாக நமக்குள் நடந்த சம்பாஷணைகளை ஆதாரமாகக் கொண்டு, உங்களுடைய பூர்ணமான பதிலைப் பெறுவேன் என்ற நம்பிக்கையுடன் பின் காணும் கேள்விகளை உங்கள் முன் சமர்ப்பிக்க உரிமை கொள்ளுகிறேன்.

(1) நீங்கள் பிரிட்டிஷ் சர்க்காரை உடனே வாபஸாகுமாறு கோருகின்றீர்கள். அதன் பிறகு இந்தி யர்கள் தேசீய சர்க்காரை அமைப்பார்களா? எப்பகுதி

யினர் அல்லது எக்கட்சியினர் அப்படிப்பட்ட இந்திய சர்க்காரிலே கலந்து கொள்ளுவார்கள்?

(2) ஜப்பானுக்கும், மற்ற அச்சுநாடுகளுக்கும் விரோதமாக ஐக்கிய தேசங்கள் செய்யும் ராணுவ நடவடிக்கைகளுக்கு இந்தியாவைத் தளமாக உபயோகித்துக்கொள்ள இந்திய தேசீய சர்க்கார் அனுமதிக்குமா?

(3) பாஸிஸ ஆக்கிரமிப்புக்காரர்களுக்கு விரோதமாக, இவ்விந்திய தேசீய சர்க்கார் ஐக்கிய தேசங்களுக்கு யுத்த காலத்தில் எப்படிப்பட்ட உதவிகளை அளிக்கத் தயாராயிருக்கின்றது?

(4) இந்தியாவுக்கும், நேசக் கட்சியாருக்கு மிடையே இம்மாதிரியான ஒத்துழைப்பு நேச உடன்படிக்கை ஒன்றின் மூலம் நிர்ணயம் செய்யப்பட வேண்டுமென நம்புகிறீர்களா? அல்லது பரஸ்பர உதவி ஒப்பந்தம் ஒன்று மட்டிலும் இருந்தால் போதுமா?

ஆழ்ந்த மரியாதையுடன் சமர்ப்பிக்கும், லூயி பிஷர்.

காந்திஜீயின் பதில், " முக்கியமான கேள்விகள் என்ற தலைப்புடன் பின் வருமாறு இருந்தது :

புதிய திட்டம் சம்பந்தமாக நண்பர் ஒருவர் எங்களுடன் விவாதித்தார். எங்கள் விவாதமானது இயற்கையிலேயே தொடர்ச்சியற்ற முறையில் நடை பெற்றதனால், அவருடைய கேள்விகளைத் தயாரிக்குமாறும், அதற்கு 'ஹரிஜன்' மூலம் பதிலளிப்பதாகவும் அவரைக் கேட்டுக் கொண்டேன். அதற்கு அவர் இசைந்து பின் வருவனவற்றைக் கொடுத்திருக்கிறார்.

கேள்வி. 1:—நீங்கள் பிரிட்டிஷ் சர்க்காரை உடனே வாபஸாகுமாறு கோருகின்றீர்கள். அதன் பிறகு, இந்தியர்கள் தேசீய சர்க்காரை அமைப்பார்களா? எப்பகுதியினர் அல்லது எக்கட்சியினர் அப்படிப்பட்ட இந்திய சர்க்காரிலே கலந்து கொள்வார்கள்?

பதில்:—என்னுடைய திட்டம் ஒரு சாராரையே கட்டுப்படுத்தக் கூடியது. அதாவது, இந்தியர்கள் எதைச் செய்வார்கள், எதைச் செய்ய மாட்டார்கள் என் பதைக் கவனிக்காமலே பிரிட்டிஷ் சர்க்கார் காரியத்தைச் செய்வதுதான். அவர்கள் வாபஸாவதால் தற்காலிகமான குழப்பங்கள் ஏற்படலாமெனவும் வைத்துக் கொள்வோம். ஆனல், ஒழுங்கான முறையில் அவ் வாபஸானது நடை பெறுமாயின், அநேகமாக, அதன் மூலம் இப்போதுள்ள தலைவர்களால் தங்களில் சிலரடங்கிய தற்காலிக சர்க்கார் ஒன்றை ஏற்படுத்த முடியும். மற்றொரு சம்பவமும் நிகழலாம் அது யாதெனில், தேசத்தைப் பற்றிச் சிறிதும் சிந்தியாது இந்தியாவில் தங்களைப் பற் றியே சதா சிந்தித்துக் கொண்டிருக்கும் சிலர், அதிகார வேட்டையாடி அமைதியைக் குலைக்கும் சக்திகளை ஒன்று சேர்த்து அதன் மூலம் எங்கேயாவது எப்படியாவது ஆதிக்கம் பெற முயற்சிக்கலாம். பிரிட்டிஷ் அதிகாரம் பூர்ணமாக, இறுதியாக, யோக்கியமாக வாபஸ் ஆகு மானல், விவேகமுள்ள தலைவர்கள் தங்கள் பொறுப்பை உணர்ந்து, அந்நேரத்திலாவது தங்கள் வித்தியாசங்களை மறந்து பிரிட்டன் விட்டுச் செல்லும் சாதனங்களை வைத்துக் கொண்டு, தற்காலிக சர்க்காரொன்றை ஏற்படுத்துவார்களென நான் நம்புகிறேன். சபையி லிருந்து தனி நபர்களையோ கட்சிகளையோ, சேர்த்தோ, தள்ளியோ ஒழுங்குபடுத்தும் எவ்வித அரசாங்கமு மில்லாது போய் விடுமாதலால் அச்சமயம் ஒழுங்கை நிலவச் செய்யத் தன்னடக்கமே சிறந்த வழி காட்டியாகும். அப்படி ஒருவேளை நிகழ்ந்தால் காங்கிரஸ், முஸ்லிம் லீக், சமஸ்தான பிரதிநிதிகள் ஆகியோர் நிர்வாகத்தை நடத்த அனுமதிக்கப்படுவார்கள்; தற்காலிக தேசீய சர்க்காரை அமைப்பதில் அவர்கள் ஏதோ ஒருவித முடிவுக்கு வரு வார்கள். இவைகளெல்லாம் யூகங்களே யன்றி வேறில்லை.

கேள்வி 2:—ஜப்பானுக்கும் மற்ற அச்சு நாடுகளுக்கும் விரோதமாக ஐக்கிய தேசங்கள் செய்யும் ராணுவ நடவடிக்கைகளுக்கு இந்தியாவைத் தளமாக உபயோகித்துக் கொள்ள இந்திய தேசீய சர்க்கார் அனுமதிக்குமா?

பதில்:—தேசீய சர்க்கார் அமைக்கப்பட்டதாக வைத்துக் கொண்டு, நான் எதிர்பார்ப்பவைகளை அது செய்யுமானால், அதனுடைய முதல் வேலை துராக்கிரமிப்பு அரசாங்கங்களுக்கு விரோதமாகப் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதற்கு ஐக்கிய தேசங்களுடன் ஒப்பந்தம் ஒன்று செய்துகொள்ள வேண்டியது. ஏனெனில், பாஸிஸ்ட் நாடுகளுடன் எவ்வித தொடர்பும் வைத்துக் கொள்ளலாகாது என்பது பொதுநலம் காரணமான ஒரு கொள்கை யாதலால் ஐக்கிய தேசங்களுக்கு இந்தியா உதவிபுரிவதே நேர்மையானது.

கேள்வி 3:—பாஸிஸ ஆக்கிரமிப்புக்காரர்களுக்கு விரோதமாக, இவ்விந்திய தேசீய சர்க்கார் ஐக்கிய தேசங்களுக்கு யுத்த காலத்தில் எப்படிப்பட்ட உதவிகளை அளிக்கத் தயாராயிருக்கின்றது?

பதில்:—நான் கற்பனையில் சித்திரித்திருக்கும் தேசீய சர்க்காரை யோசனை கூறி நடத்துவதில் எனக்குப் பங்கு இருக்குமேயானால், செவ்வனே வரையறுக்கப்பட்ட நிபந்தனைகளின் கீழ் இந்திய மண்ணிலே ஐக்கிய தேசங்களுக்கு இடங் கொடுப்பதைத் தவிர, வேறு எவ்வித உதவியும் இருக்காது. இயற்கையாக, பொருளாதார உதவியின் மூலமோ, படையில் சேருவதின் மூலமோ தன் சொந்த ஹோதாவிலே எந்த இந்தியனும் உதவி செய்யத் தடை கிடையாது. இன்னொன்றை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது, பிரிட்டிஷ் அதிகாரம் வாபஸானவுடன் இந்திய ராணுவம் கலைக்கப்பட்டதாக நாம் கொள்ள வேண்டும். மேலும் தேசீய சர்க்காரின் நிர்வாக

சபையிலே எனக்குச் செல்வாக்கு இருக்குமானால் அதனுடைய அதிகாரம், கௌரவம், சாதனங்கள் ஆகியவைகளை உலக சமாதானத்தை நிலைநிறுத்துவதற்காக உபயோகிக்கச் செய்வேன். ஆனால், உண்மையிலே, தேசீய சர்க்கார் அமைத்த பிறகு என்னுடைய வார்த்தை காட்டிலே போட்ட கூக்குரலை யொத்திருக்கும். தேசீய இந்தியா யுத்த வெறிகொண்டு விடலாம்.

கேள்வி 4:—இந்தியாவுக்கும், நேசக் கட்சியாருக்குமிடையே இம்மாதிரியான ஒத்துழைப்பு நேச உடன்படிக்கை ஒன்றின்மூலம் நிர்ணயம் செய்யப்பட வேண்டுமென நம்புகிறீர்களா? அல்லது பரஸ்பர உதவி ஒப்பந்தம ஒன்றுமட்டிலும் இருந்தால் போதுமா?

பதில்:—இக் கேள்விக்கு இன்னும் காலம் பக்குவப்படவில்லை யென்று நான் நினைக்கின்றேன். எப்படியிருப்பினும், இவ்விஷயம் நேச உடன்படிக்கை மூலம் நிர்ணயிக்கப்பட்டாலும் சரி, உதவி ஒப்பந்தத்தின் மூலம் நிர்ணயிக்கப்படினும் சரி, இவ் இரண்டிற்கும் எவ்வித வித்தியாசமும் இருப்பதாக நான் காணவில்லை. இனி என் அபிப்பிராயத்தைச் சுருக்கிக் கூறுகிறேன். ஒரு விஷயம் மட்டும் நிச்சயம். அதாவது, நேசக் கட்சியாருக்கு வெற்றி உறுதியாகக் கிடைக்க வேண்டுமானால், இவ்வாறு இந்தியா போன்ற ஒரு மகத்தான தேசீய இனத்தை—"தேசீய இனங்கள்," "பல்வேறு மக்கள்" என்ற பதங்கள் சரியல்ல.—இயற்கைக்கு மாறான முறையில் தலை வணங்கச் செய்வதை நிறுத்த வேண்டும். அவர்களுக்கு தர்ம நியாயத்தில் நம்பிக்கைக் குறைவு இருக்கிறது. பாஸிஸ, நாஸிஸ சக்திகளுக்கும் நேசதேசங்களுக்கு மிடையே எவ்வித வித்தியாசமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை; எல்லோரும் சுரண்டுகின்றவர்களே. தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்கின்ற வரையில்

எல்லோரும் இரக்கமற்ற முறையிலேயே போகின்றார்கள். அமெரிக்காவும், பிரிட்டனும் மிகப் பெரிய தேசங்கள் தாம். ஆனால், வலியற்ற ஆப்பிரிக்கர்கள் அல்லது ஆசிய மக்கள் ஆகியோரது நீதி மன்றத்தின் முன் அவர்களது பெருமை தூசிக்கு ஒப்பாகும். அவர்கள் செய்த தவறை திருத்திக்கொள்ளும் சக்தி அவர்களிடந்தான் இருக்கிறது. தங்கள் கைகளைக் கறை போகக் கழுவாத வரையில், அவர்களுக்கு மானிட சுதந்திரத்தைப் பற்றியும், இதர விஷயங்களைப் பற்றியும் பேசுவதற்கு உரிமையே கிடையாது. இப்பரிசுத்தமே அவர்களுடைய வெற்றிக்கு மிக மிக உறுதியளிக்கும். ஏனெனில், பல்லாயிரக்கணக்கான ஆசிய, ஆப்பிரிக்க மக்களுக்கு வெளிப்படையாகச் சொல்லிக் கொள்ளாத, ஆனால் நிச்சயமான நல்லெண்ணம் அவர்களிடம் உண்டாகும். அதன் பின்புதான் ஒரு புதிய அமைப்புக்காக அவர்கள் போராடலாம். இதுதான் உண்மை. மற்றவையெல்லாம் ஊகங்களே. என்னுடைய நல்லெண்ணத்தைச் சோதிக்கும் முறையிலேயும், என்னுடைய திட்டத்தை நன்கு விளக்கிக் காட்டவுமே நான் அவ் ஊகங்களில் இறங்கினேன்.

மோ. க. காந்தி.

(மேற்கண்ட கேள்விகளும், பதில்களும் ஜூன், 14, 1942 ஹரிஜனில் வெளியாயின.)

இன்று உணவருந்தும் போது "அப்டன் ஸிங்ளேரை உங்களுக்குத் தெரியுமா" வெனக் காந்திஜீ என்னைக் கேட்டார். ஸிங்ளேர் என்ன செய்கிறார் என்பதையறிய அவர் ஆவல் கொண்டார். ஸிங்ளேர் எழுதிய புத்தகங்களைத் தாம் அடிக்கடி பெறுவதாகவும், ஆனால், அவைகளைப் படிப்பதற்கே நேரமில்லை யெனவும்

அவர். சொன்னார். அவர்கள் ஒருவர்க்கொருவர் கடிதப் போக்கு வரத்து நடத்தி வந்தார்கள். அமெரிக்க சமுதாய சீர்திருத்தத்தில் ஸிங்ளேருக்கு நல்ல செல்வாக்கு இருக்க வேண்டுமெனத் தாம் நினைப்பதாக அவர் கூறினார்.

நான் சாப்பிடுவதைக் காந்திஜீ கவனித்தார். பிறகு, "இன்னும் நீங்கள் நான் கொடுக்கும் காய் கறிகளை மறுக்கின்றீர்களா? என அவர் கேட்டார்.

"நீங்கள் ஒரு பரம புருஷர், தலைவர், அரசியல் அறிஞர் என்ற முறையில் நான் தலை வணங்குகின்றேன்; ஆனால், உங்கள் சமையல் திறமைக்கு நான் மதிப்புக் கொடுக்க முடியாது" எனப் பதிலளித்தேன். நான் சேவாகிராமத்தில் சாப்பிட்ட ஒவ்வொரு வேளையிலும், எனக்கு இப் பசலைக் கீரையும், அவியலும் பறிமாறப் பட்டன. அவை போதும் போதுமென்று ஆய்விட்டது. என்னுடைய இரு புதல்வர்களைப் பற்றி அவர் என்னிடம் கேட்டார். இதிலிருந்து அவர் 'மனிதர்களும் அரசியலும்' என்ற என் புத்தகத்தைப் பார்த்திருக்கிறார் என முடிவு செய்தேன். சில பூனைகள் உள்ளே வந்து பெரிய சாப்பாட்டுப் பானைகளும் சட்டிகளும் வைத்திருந்த மேஜையினடியில் விளையாடின. நான் காந்திஜீயிடம், "1938-ல் லாயட் ஜார்ஜைச் சர்ட்டு (churt) என்ற இடத்தில் சந்தித்தேன். அப்பொழுது அவர் உங்களைப் பற்றிக் கூறினார்" என்றேன்.

"அப்படியா! அவர் என்ன சொன்னார்?" என்று காந்திஜீ ஆவலுடன் கேட்டார்.

"நீங்கள் சர்ட்டுக்கு வந்த பொழுது அவருடைய சோபாவிலே சப்பணங்கொட்டி உட்கார்ந்ததாகவும், உட்கார்ந்தவுடனேயே அதற்கு முன் அவர்கள் கண்டிராத கரும்பூனை ஒன்று ஜன்னல் வழியாக உள்ளே

வந்து உங்களுடைய மடியிலே உட்கார்ந்ததாகவும், அவர் என்னிடம் கூறினுர்" என்றேன்.

"அது ரொம்ப உண்மை" என்ருர் காந்திஜீ.

"நீங்கள் சென்றவுடனே பூனையும் மறைந்து விட்ட தென்றும், மீண்டும் அது அங்கு வரவில்லை யென்றும், லாயட் ஜார்ஜ் அறிவித்தார்" என்றேன்.

"ஓ! அது எனக்குத் தெரியாதே!" என்ருர் காந்திஜீ.

"மிஸ். ஸ்லேடு சர்ட்டில் தம்மைச் சந்திக்க வந்த பொழுது, அதே கருப்பூனை மீண்டும் திரும்பி வந்ததென் றும் லாயட் ஜார்ஜ் சொன்னுர்" எனத் தொடர்ந்து கூறினேன்.

"அதுவும் எனக்குத் தெரியாதே!" என்ருர் காந்திஜீ.

காந்திஜீ லாயட் ஜார்ஜைப் பற்றி உயர்வாகக் கூறினுர். லாயட் ஜார்ஜ் எனக்கு ஒரு சுருட்டு அளித் தார்; நான் புகைப்பதில்லை யென்ற காரணத்தினுல் அதை மறுத்து விட்டேன். பிறகு, அவர் சாராயம் கொடுத்தார். நான் குடிப்பதில்லாததால் அதையும் ஏற்க வில்லை. "எவ்வித கெட்ட பழக்கமும் இல்லை போலிருக் கிறது" என அவர் கேட்க, அதற்கு நான், "வெளிப்படை யாகக் காணக் கூடியவை யொன்றுமில்லை" எனப் பதில் கூறியதையும், அதற்கு லாயட் ஜார்ஜ் உற்சாகத்துடன், "நல்லது! என்னிடம் கண்டும் காணுததுமான பல கெட்ட பழக்கங்களிருக்கின்றன. அதனுல்தான், இந்த எழுபத்தைந்து வயதிலும், நான் இவ்வளவு சௌக்கியமா யிருக்கிறேன்" என்று கூறியதையும் காந்திஜீயிடம் நான் விவரமாக எடுத்துரைத்தேன். காந்திஜீ நீண்ட நேரம் சிரித்தார். லாயட் ஜார்ஜுடன் நான் உணவருந்தி விட்டு அவரும் நானும் தாழ்வாரத்தின் வழியாகக்

கூடத்தை நோக்கி நடந்தோம். அங்கே, முதல் உலக யுத்தத்தில் பிரான்ஸில், பிரிட்டிஷ் சேனாதிபதியாயிருந்த ஜெனரல் ஹேக் என்பவரின் படம் தொங்கியது. "அதைப் பார்த்து லாயட் ஜார்ஜ் 'ஹேக் பிரகாசமாயிருந்தார்' என்று கூறிப் படத்தில் அவருடைய பூட்ஸைச் சுட்டிக் காட்டி, 'இதைப் பொறுத்த வரையில்' என்றார் எனச் சொன்னேன். காந்திஜீ மீண்டும் சிரித்தார். சர்ச்சிலைப் பற்றி லாயட் ஜார்ஜ் என்ன நினைக்கிறார் என்று அவர் என்னிடம் கேட்டார். "இக் கேள்வியையே, 1941-கோடையில், லாயட் ஜார்ஜைச் சந்திக்கும் பொழுது நான் கேட்டேன். சர்ச்சிலுக்கு ஏன் தைரியமும், துணிவும் இல்லையென நான் கேட்டதற்கு, "கலிப் பொலி" என ஒரே வார்த்தையில் லாயட் ஜார்ஜ் பதிலளித்தார். "கலிப்பொலி துர்ச்சம்பவமே சர்ச்சிலின் துணிவை அழித்து விட்டது என லாயட் ஜார்ஜ் கூறினார்" என்றேன். ஒரு சமயம் காந்திஜீ லாயட் ஜார்ஜுடன் இரவு ஒரு மணி வரை பேசிக் கொண்டிருந்ததாயும் மாலையில் வெகு நேரத்திற்கு பிறகு அவர்கள் சந்தித்ததாயும் அந்த நேரந்தான் அவர்களுக்கு சாவகாசமாயிருந்ததென்றும் பேச்சு முடிவில் லாயட் ஜார்ஜ் தம் வீட்டுப் பணியாட்கள் எல்லோரையுமே மரியாதை செய்யச் செய்தது, அவருக்குப் பெரிதும் வியப்பை உண்டாக்கியது என்றும் காந்திஜீ கூறினார்.

நேற்றைய தினசரிப் பத்திரிகையைப் படித்த பிறகு இரவு 8 மணிக்கு நான் படுக்கச் சென்றேன். இங்கிருப்பவர்களில் யாருக்கும் பத்திரிகை படிக்கும் ஆவல் இல்லை. மேலும், சேவா கிராமத்தில் "ரேடியோ"வுமில்லை. நேரு போன்றவர்கள் நீங்கலாகப் பெரும்பாலான இந்தியர்கள் தங்கள் தேசத்துக்குள்ளேயே வாழ்ந்து வருகிறார்கள். யுத்தமும், வெளியுலகும் அவர்களுக்கு வெகு தூரம்.

பிரிட்டிஷ் ஆட்சி இழைத்த தீமைகளில் இது ஒன்று. வெளியுலகைப் பார்ப்பதென்றால், இங்கிலாந்துதான் அவர்கள் கண்ணுக்கு முதலில் படுகின்றது. அவர்கள் மனக் கண்ணில் இங்கிலாந்தைப் பற்றி ஒரு விதமாகச் சித்திரித்து விடுகின்றனர். இச் சித்திரம் உலகத்தையும், யுத்தத்தையும் அவர்கள் காணுதபடி மறைக்கின்றது. நான் நீண்ட நேரம் தூங்கினேன். இரவு பெரும்பாலும், குளிர்ச்சியாவும், சுகமளிக்கக் கூடியதாகவுமிருந்தது. பிறைச் சந்திரனும், வெண்ணிலவும் ஆகாயத்தில் பிரகாசித்தன.

ஜூன் 7, 1942

நேற்று மகாத்மாவின் பேரன் கனு காந்தி பிடித்த போட்டோப் படங்கள் பிலிம்கள் பழையனவாயிருந்ததினுல் சரியாக அமையவில்லை. எனவே, இன்று காலை மீண்டும் நான் க்ஷவரம் செய்து கொண்டு காந்திஜீயிடம் சென்றேன். அன்ெருரு நாள் கண்டது போலவே, அவர் மனைவி, அவருக்கு விசிறிக்கொண்டிருக்க, அவர் ஓர் ஆழமான பாத்திரத்திலிருந்த மாம்பழச்சாற்றைக் கிளறிக் கொண்டிருந்தார். நான் இரவில் நன்ருகத் தூங்கினேனு என்று அவர் கேட்டார். நான் நன்ருகத் தூங்கினேனென்றும், அவர் எவ்வாறு தூங்கிஞரென்றும் நான் அவரைக் கேட்டேன். அதற்கு அவர் வழக்கமாக 9½ முதல் 4½ மணி வரை தூங்குவதாகச் சொன்னுர்.

"இடையில் விழிப்பதில்லையா?" எனக் கேட்டேன்.

"இல்லை, இரண்டு மூன்று முறை லேசாக விழிப்பதுண்டு. ஆனுல், உடனே மீண்டும் தூங்குவதில் எனக்குச் சிரமமில்லை. மேலும், ஒவ்வொரு நாளும், பிற்பகலில் அரை மணி நேரம் தூங்குகிறேன்" என

பதிலளித்தார். இதே போன்று சர்ச்சிலும் செய்கிரு ரென்று நான் அவரிடம் கூறினேன். "ஆம், ஐரோப்பா விலே இது ஒரு வழக்கமாகிக்கொண் டிருக்கிறதென்று நான் கேள்விப்படுகிறேன். முக்கியமாக, வயது ஆக ஆக, இது மிக அவசியமாகின்றது" என்ருர்.

ரூஸ்வெல்ட் படுக்கையில் படுத்ததுமே தூங்கி விடுவ தாகக் கூறப்படுவதை நான் அவரிடம் சொன்னேன். காந்திஜீ, ரூஸ்வெல்ட்டினுடைய உடல் நிலையைப்பற்றி விசாரித்தார்; மேலும், ஸ்ரீமதி ரூஸ்வெல்ட்டைப் பற்றித் தம்மிடம் விவரமாகக் கூறும்படி கேட்டார். "அமெரிக்க அரசியலிலே அவளுக்குச் செல்வாக்கு இருக்கின்றதா?" எனவும் கேட்டார். பிறகு, * நியூ டீல் என்ற புதிய பொருளாதாரத் திட்டத்தின்படி, சமூக சீர்திருத்தச் சட் டங்கள், தொழிற் சங்க அமைப்புகள், சமூக சீர்திருத்தச் சிந்தனைகள் ஆகியவற்றின் முன்னேற்றங்களைப் பற்றி நான் விவரிக்க முயற்சித்தேன். மேலும், அமெரிக்க சர்க்கார், அந்நிய நாட்டு சர்க்கார்களுக்குப் பொருளுதவி. செய்வதைப் பற்றியும், உள்நாட்டு யுத்தத் தொழில் களுக்கு பொருளுதவி செய்வதைப் பற்றியும் வற்புறுத்திக் கூறினேன். இவைகளுடன், முதல் உலக யுத்த சமயத்தில், தனி மனிதர்கள் அந்நிய சர்க்கார்களுக்கும், அமெரிக்கத் தொழில்களுக்கும் பொருளுதவி செய்ததை ஒப்பிட்டுக் காண்பித்தேன்.

"நீக்ரோக்களைப் பற்றி என்ன கூறுகின்றீர்கள்?" எனக் காந்திஜீ கேட்டார். அமெரிக்காவில் வடக்கிலும், தெற்கிலுமுள்ள நீக்ரோக்களின் நிலைமையைப் பற்றி நான் பேசினேன். நீக்ரோக்களை நடத்தப்படும் முறையை

---

* நியூ டீல், அமெரிக்காவிலே ரூஸ்வெல்ட் கண்டு பிடித்து கடை முறையில் கொண்டு வந்த பொருளாதாரத் திட்டத்திற்கு அவரே யிட்ட பெயர்.

நான் உண்மையில் ஆதரிக்க விரும்பவில்லை என்றேன்; ஆனால் இந்தியாவில் தீண்டாதாருக்குச் செய்யப்படும் கொடுமையைக் காட்டிலும், அவ்வளவு மோசமில்லை என்றே எனக்குத் தோன்றுகின்றது என்றேன். அதற்கு அவர், "தீண்டாமையை எதிர்த்துப் பல வருடங்கள் நான் போராடியதை நீங்கள் அறியலாம்; இவ் ஆசிரமத்தில் எங்களுடன் பல தீண்டாதவர்கள் இருக்கின்றார்கள்; அவர்களாலேயே இவ்வாசிரமத்தின் மிகப் பெரும்பாலான வேலைகள் செய்யப்படுகின்றன. சேவா கிராமத்திற்கு வரும் எந்த இந்துவும், தீண்டாதவர்களால் கொடுக்கப்படும் உணவைத்தான் சாப்பிட வேண்டும்; அவர்கள் அருகில்தான் இருக்க வேண்டும்" என்று பதில் கூறினார்.

தீண்டாதவர்களிடம் பேதங் காட்டப்படுதல் சற்றுக் குறைந்திருக்கிறதா? எனக் கேட்டேன். "ஓ!, எவ்வளவோ குறைந்திருக்கிறது. இருந்தாலும் அது இன்னும் மோசமாகவே யிருக்கின்றது" எனப் பதிலுரைத்தார். அப்பொழுது குர்ஷித் அங்கு வந்து ஹிந்துஸ்தானியில் ஏதோ கூறினார். அதைக் கேட்டதும் காந்திஜீ சிரித்தார். நான் என்ன எனக் கேட்டேன். அதற்கு "உங்கள் பாதங்களை வணங்குகின்றேன்" என்று அப் பெண்மணி சொல்லியதாகக் காந்திஜீ கூறினார். வியன்னாவில், "உங்கள் கைகளை முத்தமிடுகிறேன்" என்று மக்கள் கூறுவார்கள். ஆனால் அப்படிச் செய்ய மாட்டார்கள். அது போலல்லவா இதுவுமிருக்கின்றது, என்றேன். காந்திஜீ சிரித்தார். பிறகு அவர் எழுந்து நின்றதும், இரு வாலிபர்கள் அங்கு தோன்றினர். தங்கள் மேல் சாய்ந்து அவர் நடப்பதற்குரிய முறையிலே அவர்கள் அவர் அருகில் குனிந்து வளைந்து நின்றனர். இம்மாதிரியான கௌரவத்திற்கு அங்கு எப்பொழுதும்

போட்டியிருக்கின்றது. ஒரு நாள் மாலை நாங்கள் உலாவி விட்டுத் திரும்பி வந்த சமயம், எங்களைச் சந்திப்பதற்குக் கிராமத்திலிருந்து பெண்ணொருத்தி வந்தாள். அவள் மிகத் தந்திரமாகக் காந்திஜீயின் அருகே நகர்ந்து வந்து விடவே ஏற்கெனவே அங்கிருந்த பெண் தன்னுடைய இடத்தை அவளுக்குக் கொடுக்க வேண்டித்தானிருந்தது. காலையில் உலாவப் புறப்பட்டவுடனே மீண்டும் தீண்டாமை பற்றி நான் பேச ஆரம்பித்தேன். "மிகப் பெரிய சிந்தனையாளர்கள், மற்றும் முன்னேற்ற நோக்க முடையவர்கள், உதாரணமாக வரதாச்சாரியார் (பெடரல் கோர்ட்டு நீதிபதி, ஓர் உயர் வகுப்புப் பிராமணர்) போன்றவர்கள் என்னுடன் பேசும்பொழுது தீண்டாமை நியாயமென வாதிக்க முயன்றார்கள். ஆத்மாவுக்கு புனர் ஜென்மம் உண்டு என்ற இந்துமத நம்பிக்கை இதற்குக் காரணமாயிருக்கலாம் எனத் தோன்றுகிறது" என்றேன்.

"மறு பிறப்பில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?" எனக் கேட்டேன்.

அதற்கு அவர் விரைவில், "நிச்சயமாக, உடலுடன் ஆத்மாவும் அழிகிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது; ஒருவனுடைய வீடு எரிந்து போகுமானால், அவன் தனக்கு வேறொரு வீட்டைக் கட்டிக் கொள்ளு கிறான்; ஒருவனுடைய உடல் அழிந்ததும் அவனுடைய ஆத்மா மற்றொரு உடலை அடைகிறது. உடலானது பூமியில் புதைக்கப்பட்டதும் ஆத்மா * தீர்ப்புத் தினத் திற்காகக் காத்துக்கொண்டு எங்கோ தங்கியிருப்பதாக வும் தீர்ப்புத் தினத்தன்று ஆண்டவனின் நீதி மன்றத் திற்கு அழைத்து வரப்பட்டதும் அதனுடைய குற்றங்

* இதுதான் கிறிஸ்துவர்களின் நம்பிக்கை. இறுதித் தீர்ப்புத் தினத்தை அவர்கள் டூம்ஸ் டே என்கின்றனர்.

களுக்காகத் தண்டனை பெறுவதாகவும் கூறப்படும் கொள்கையை நான் ஒப்புக்கொள்ளமுடியாது ; அது அப்படியன்று. உடனேயே அது ஒரு புதிய இடத்தைத் தேடிக் கொள்ளுகிறது" என்று பதில் அளித்தார்.

"தான் சிரஞ்சீவித்துவத்தை அடைய மனிதன் செய்யும் சாசுவத முயற்சியின் சின்னமல்லவா இது?" என்று நான் தைரியமாகச் சொன்னேன். "சாவைக் கண்டு மனிதன் அஞ்சுவதின் விளைவு அல்லவா இந்த நம்பிக்கை எல்லாம்? டால்ஸ்டாய், தம் முதுமைப் பருவம் வரையில் மதப்பற்றற்றவராகவே இருந்தார்; பிறகு சாவுக்கு அஞ்ச ஆரம்பித்தார்" என்றேன்.

காந்திஜீ மிக அழுத்தமாக, "நான் மரணத்தைக் கண்டு பயப்படவில்லை; அதைத் திருப்தியுடன் விடுதலை என எண்ணுவேன். ஆனால், அதுதான் இறுதி என்று எண்ணுவது என்னால் முடியாத காரியம். என்னிடம் ருசு இல்லை. மக்கள் இறந்தவனுடைய ஆத்மா வேறொரு உடலை அடைகிறது என்பதை திருஷ்டாந்தமாகக் காட்ட முயற்சித்திருக்கிறார்கள். ஆனால் அதை அப்படி ருசுப்பிக்க முடியுமென்று நான் நினைக்கவில்லை. ஆயினும் நான் அதை நம்புகிறேன்" என்றார்.

அவ்வளவுதான். இது வாதிப்பதற்குரிய விஷயமன்று என்று அறிந்தேன் ; இருப்பினும், என்னுடைய கொள்கையை மீண்டும் விளக்க எண்ணினேன். எனவே, நான், "நாம் எல்லோரும் அழியாமையைத் தேடுகின்றோம் என்றே நம்புகின்றேன் ; வேண்டுமானால் இந்த அழியாமையைப் பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வோர் அபிப்பிராயம் கொண்டிருக்கலாம். சிலர் தங்கள் குழந்தைகள் தங்களுடைய பிரதிபிம்பங்கள் எனக் கருதுகின்றனர். சாசுவதமான ஏதாவதொரு பணி செய்திருந்தால் அதன் மூலம் சிரஞ்சீவித்துவத்தை அடைகிறோம் என்பது வேறு சில

ருடைய நம்பிக்கை. புனர் ஜென்மம் எடுத்து மிருகங்க ளாகவோ வேறு முறையிலோ உருமாறி அழியாமையை எய்துவதாக மற்றுமொரு சாரார் கருதுகின்றனர். தங்கள் பணி எவ்வளவு காலம் நீடிக்கிறதோ அவ்வளவு காலம் வசிப்பதாகச் சிலர் நம்புகிருர்கள். மனிதனது சிரஞ்சீவித் துவம் அவனது செய்கைகளுக்கு வேறுபட்டதெனில் அது மரண பயத்தால் ஏற்பட்ட ஒரு நம்பிக்கை யென் பதும் கற்பனையில் சமாதானமடைய முயற்சிக்கும் ஒரு செய்கைதா னென்பதும் எனது நம்பிக்கை" என்றேன். அதன்மேல் காந்திஜீ, தம்முடைய கொள்கையை மிக உணர்ச்சியுடன் அழகு பொழிந்த ஆங்கில நடை யிலே வற்புறுத்திக் கூறினர். அவர் எப்பொழுதும் பிரிட் டிஷ் சர்வகலாசாலை உச்சரிப்புடனே உயர்ந்த வேகமான ஆங்கிலமே பேசுகிருர்.

இந்தியாவின் புதிய தலைமுறை, ஜாதி இந்துக்களுக் கும் தீண்டாதவர்களுக்கும் இடையேயும் இந்துக்களுக் கும் முஸ்லிம்களுக்கு மிடையேயும், எவ்வித வித்தியாச மும் பாராட்ட சிறிதும் பிரியப்படவில்லை யென்றும், அது மதத்திலே அதிக அக்கறை காட்டாதென்றும், மாண வர்கள் என்னிடம் கூறியதை நான் அவருக்குச் சொன் னேன்.

"நீங்கள் முதலில் கூறியது சரியே. ஆனல், ஹிந்து சமயம் ஒரு மதமல்ல; மதச் சடங்குகளை மாணவர்கள் செய்வதில்லை; ஆனல் ஹிந்து சமயம் என்பது உயிர். அது ஒருவாழ்க்கைமுறை. மதச்சடங்குகளை அனுஷ்டிக்காத பலர் அவற்றை அனுஷ்டிக்கும் சிலரை விடச் சிறந்த முறையில் சமய வாழ்க்கை நடத்திவருகிருர்கள்" எனக் காந்திஜீ கூறினர். மேலும், "தீண்டாமை தமக்கு ஆழ்ந்த வருத்தத்தைச் கொடுக்கிறது என்றும், இந்திய சுதந்திரமானது தீண்டாமைப் பிரச்னையைத் தீர்ப்பதை

துரிதப்படுத்துமெனத் தாம் நம்புவதாகவும்" கூறினார். இது மீண்டும் அவரை அவருக்குப் பிடித்தமான விஷயத்திற்கே கொண்டு வந்தது. "அந்த சவால், ஆம், பிரிட்டிஷார் வெளியேற வேண்டுமென நான் விட்ட அந்த சவால்தான்" என அதைக் குறித்து அவர் பேசினார். அவர்கள் போவார்களானால் புனிதத் தன்மையடைவார்கள்; புதிய உலக அமைப்பின் வேலைக்குச் சிறந்த சாதனமும் ஆகும். இல்லாவிடில் அவர்களுடைய அறிக்கைகள் எல்லாம் கபட வேஷங்களே ஆகும்" என்று பேசினார். இதற்குள் நாங்கள் காந்திஜீயின் குடிலுக்குத் திரும்பி விட்டோம்; நான் அவரிடம் விடை பெற்றேன்.

காந்திஜீயின் அறைப் பக்கத்தில் ஒரு மூலையில் வசித்த சோஷியலிஸ்டுத் தலைவரான நரேந்திர தேவும் மோட்டா இலங்கைக்காரரான அரியநாயகமும் இன்று காலை மீண்டும் விருந்தினர் விடுதிக்கு வந்தனர்; அவர்கள் அதிக நேரம் காரசாரமாக, பாஸிசம், ஏகாதிபத்தியம் ஆகிய விஷயங்களைப் பற்றிய விவாதத்தில் கலந்து கொண்டனர். அவர்கள் இந்தியாவில் பிரிட்டிஷ் பாஸிசத்தை இடைவிடாமல் அநுபவிப்பதாகவும் ஆனால் ஜெர்மன்பாஸிசத்தை அதிகமாகஅவர்கள் உணரவுமில்லை, அறியவுமில்லை யென்றும் கூறினர். உண்மை தான்; நாஜிகள் எவ்வளவு பயங்கரமானவர்கள் என்பதை அறிஞர்கள் அறிவார்கள்; பாமரமக்கள் அதைப்பற்றி ஒன்றும் அறிந்திருக்க மாட்டார்கள். பிரின்ஸ்ஆப்வெல்ஸ் ரிப்பல்ஸ் போன்ற கப்பல்கள் மூழ்கியது மக்களுக்கு பெரும் உணர்ச்சி யூட்டிவிட்டது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு பிரிட்டிஷ் கடற்படைதான் எப்பொழுதும் உண்மையான சக்தியா யிருந்து வந்தது. கீழ்க்கோடியில் பிரிட்டனுடைய ராணுவத் தோல்விகள் எல்லாம் மக்களைக் கவர்ந்தன. ஜப்பானியத்தற்கொலை விமானிகள்

பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்களுக்குள் தங்கள் விமானங்களைச் செலுத்தினரென்றும் இம்மாதிரியான காரியங்களைப் பிரிட்டிஷார் செய்யத் திறமையற்றவர்கள் என்றும் அரியநாயகம் கூறினர். பிரிட்டிஷாரிடமும் கூடத் தற்கொலை விமானிகள் இருக்கிறார்கள் என்று நான் கூறினேன். அவர்களைப்பற்றித் தாம் கேள்விப்பட்டதே யில்லையென அவர் பதில் அளித்தார். சமீபத்தில் இங்கிலீஷ்கால்வாயின் மூலமாகத் திடீரென்று பாய்ந்து தப்பியோடிய இரண்டு பெரிய ஜெர்மன் யுத்தக் கப்பல்களான "நீஷ்நௌ, ஷாங் ஹர்ஸ்ட்" (Gneisenau, Scharnhorst) ஆகியவைகளை அடித்த ராயல் விமானப்படையிலுள்ள வான்மீன் விமானிகளை (Sword-fish) நான் ஞாபகப் படுத்தினேன். ஜப்பானியர்கள் செய்ததை விட அதிகமாக இவ்விமானிகள் சாவுதரும் வேலைக்குப் போவதில் தயங்கவில்லை யென விவரித்தேன். "உலகத்தில் எல்லா ராணுவங்களிலும் வீரர்களிருக்கின்றனர். ஜனநாயக நாடுகளின் வாலிபப் போர்வீரர்கள் சீர்கெட்டு விட்டனர் என்பதற்குரிய அறிகுறி ஒன்றும் காணப்படவில்லை" யெனக் கூறினேன்.

எங்களுடைய சம்பாஷணையின் முடிவில் நான் தொகுத்துக் கூறும்முறையில், இந்திய பாஸிச எதிர்ப்பாளர்கள், அச்சு நாடுகளுக்கு விரோதமாகவும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு விரோதமாகவும் இருமுனைகளில் சண்டை செய்ய வேண்டியிருக்கிறது எனத் தெரிவித்தேன். இரண்டு முனைகள் இருப்பது ஒருபுற மிருக்கட்டும். ஒரு முனையிலேயே சண்டைசெய்ய முடியாமல் இருக்கின்றதேயென்று என் நண்பர்கள் விவாதித்தனர். "எங்களிடம் ஆயுதங்கள் இல்லை, எனவே ஜப்பானியர்கட்கு எதிராக நாங்கள் போரிடமுடியாது. பிரிட்டன் வேண்டுமென்றே எங்களை நிராயுதபாணிகளாக வைத்திருக்கின்

றது. மேலும் அது எங்களை அடக்கி ஒடுக்கியும் வைத்திருக்கிறது; எங்களுக்கு ஆயுதம் அளிக்க மறுக்கிறது; எங்களுக்குச் சுதந்திர மளிக்கவும் மறுக்கிறது. ஆகவே இப்படிப்பட்ட பிரிட்டிஷாருக்காகச் சண்டை போடுவது சிரமசாத்தியமான காரியம்" எனத் தேவ் கூறினார்.

டாக்டர் தாசின் மருமகளுக்கு ஆறு வயதுடைய பையன் ஒருவன் இருக்கிறான். அவன் படு சுட்டி; விருந்தினர் விடுதியைச் சுற்றி விளையாடுவான். அவன் ஒரு சில ஆங்கிலவார்த்தைகள் பேசுகிறான். அவனுடைய தோழர்களிடம்,அவன் எந்த மொழியில் பேசுகிறான் என அவனைக் கேட்டேன். வங்காளியில் பேசுவதாக அவன் கூறினான். அவனுக்கு ஹிந்தியும் குஜராத்தியும் கூடப் பேசத் தெரியும். ஆசிரமத்தின் சிறு குழந்தைகளில் பெரும்பாலோர் இரண்டு மூன்று பாஷைகள் பேசுகிறார்கள்.

தேவும் அரிய நாயகமும் சென்ற சிறிது நேரத்தில் ராஜா என்ற ஒருவர் என்னிருப்பிடத்திற்கு விஜயம் செய்தார். அவர் ஓர் இந்து; பிரஞ்சுமாதை மணந்திருக்கிறார். அவர் பலவருடங்கள் பிரான்ஸிலே கழித்திருக்கின்றார். அவருடைய பிரெஞ்சு பாஷை ஆங்கிலத்தைக்காட்டிலும் மிக நன்றாக யிருந்தது. அவருக்கு அழகிய ஹாலிவுட் *முக வெட்டு இருந்தது. நீண்டு உருண்ட கன்னங்கள், பிரிந்து வளைந்த புருவங்கள், ஜ்வலிக்கும் கருவிழிகள். அவர் பிரான்சு உளுத்துப் போய்விட்டது என்று பேசினார். குன்றிய தம் உற்சாகத்தை திரும்பப்பெறும் பொருட்டு ஆசிரமத்தில் பல மாதங்கள் கழித்து வருகிறார். இந்தியாவிலுள்ள முஸ்லிம்களிடையே அவர் வளர்க்கப்பட்டார். முஸ்லிம் பள்ளிக்கூடம் ஒன்றிலேயே படித்தார். இந்துக்களைவிட முஸ்லிம்கள் அதிக ஆண்மையையும், அதிக

---

* அமெரிக்காவில் பேசும் படத்துக்கு பிரசித்தமான இடம்.

பலத்தையும், அதிக புரட்சி மனப்பான்மையும் கொண்ட வர்களென்றும், இந்திய கம்யூனிஸ்ட் கட்சியில் சரிபாதி முஸ்லிம்கள் என்றும் அவர் கூறினர். இந்தியாவின் சிறந்த கவிகள் முஸ்லிம்கள்தான் என்றும் இந்துக்கள் சாத்வீகமானவர்கள் என்றும் கற்பனு சக்தி குறைந்தவர் கள் என்றும் கூறினர். இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே எவ்வித இன வித்தியாசமும் இல்லாதிருக்கும் பொழுது ஏன் இந்த மாறுபாடான விசேஷ குணபாவங் கள் எனக் கேட்டேன். அது உணவின் காரணமா கவா எனவும் கேட்டேன். வாழ்க்கையின் லட்சியத்தில் இவ்விருவர்களுக்கு முள்ள பேதமே அதற்குக் காரணம் என்ருர். "முஸ்லிம்கள் வாழ்க்கையில் உண்மையான பற்றுதலை உடையவர்கள். அது உணவின் காரணமாக அல்ல. வட இந்தியாவில் பல இந்துக்கள் மாமிசம் புசிக் கிருர்கள். முஸ்லிம்கள் பன்றிக் கறி சாப்பிடமாட்டார் கள் ; ஆனுல், மாட்டுக் கறி சாப்பிடுவார்கள். "இந்துக் கள் சிந்தனையாளர்கள் ; சிறந்த ஞாபக சக்தி யுடையவர் கள் ; நல்ல வியாபாரிகள். ஆனுல், நீங்கள் நன்ருகப் பொழுதுபோக்கவும், நன்ருகச் சாப்பிடவும், நாட்டியமாட வும், நீந்தவும் விரும்பினுல், ஒரு முஸ்லிமைத் தேடுங்கள்," என அவர் எனக்கு யோசனை கூறினர்.

சாப்பாட்டின் போது காந்திஜீ மிகக் குஷியாகக் காணப்பட்டார். அவர் சாப்பாட்டுக் கூடத்திற்கு வந்த தும் சுமார் இரண்டு மூன்று வயதுடைய இரு மோகன மான குழந்தைகளிடம் கண்ணோட்டம் செலுத்தினர். அக்குழந்தைகள் வாசற்படிக் கருகில் தரைமீது உட் கார்ந்து அமைதியாகத் தங்கள் சாப்பிட்டிற்காகக் காத்துக் கொண்டிருந்தன. காந்திஜீ உட்காரச் செல்லும்போது அங்கிருந்த ஒவ்வொருவரிடமும் சிரித்துப்பேசி அவர்களை யும் சிரிக்கவைத்தார். நாங்கள் சாப்பிட ஆரம்பித்ததும்,

அவர் என்னிடம் மிச்சிகனில் பேட்டில்கிரீக் என்ற இடத்திலுள்ள டாக்டர் கெல்லாக் என்பவரைத் தெரியுமா எனக் கேட்டார். எனக்கு கெல்லாக் உணவுக் கம்பெனியைத் தெரியுமே தவிர டாக்டர் கெல்லாக்கைத் தெரியாது என்றேன். காந்திஜீ உணவு பற்றிய விஷயங்களைக் குறித்து டாக்டர் கெல்லாக்குடன் நடத்திய கடிதப் போக்குவரத்து பற்றிக் கூறினார். "மனிதர்கள் தங்கள் நாட்டைவிட வெளிநாடுகளில்தான் அதிகப் பிரபலமடைகிறார்கள் என்பது நாம் அடிக்கடி காணும் ஒரு சம்பவமாகும். ஜெர்மனியில் லீப்சிக்(Leipzig) என்ற ஊரில் கூஹ்னி (Kuhne) என்ற பெயருடைய உணவு நிபுணர் இருந்தார். பல வருடங்களுக்கு முன்பே அவர் எழுதிய புத்தகங்கள் ஜெர்மன் பாஷையிலிருந்து இந்திய பாஷைகளிலே மொழிபெயர்க்கப்பட்டு, நூற்றுக் கணக்கான பதிப்புக்கள் வெளிவந்துவிட்டன. ஆனால், லீப்சிக்கில் கூஹ்னியைப் பார்க்குமாறு நண்பர் ஒருவரை அனுப்பிய பொழுது அவரைப் பற்றி ஒருவருக்கும் தெரியவில்லை; விசேஷசிரத்தை எடுத்துக் கொண்ட பிறகு தான் அவருடைய மகனைக் கண்டு பிடிக்க முடிந்தது. கூஹ்னி காலமாகி விட்டார்" எனக் காந்திஜீ பகர்ந்தார்.

ஆசிரமத்தில் எனக்குப் போதுமான அளவு சாப்பாடு கிடைத்ததா என்று காந்திஜீ என்னிடம் கேட்டார். அதற்கு நான் பட்டினியாய்க் கிடக்கவில்லை என்றும் ஆனால் உணவில் பல வகைகள் இல்லாமல் ஒரே மாதிரியாய்இருந்ததுதான்நான்சாப்பிடமுடியாததற்குக்காரணம் என்றும் சாப்பிடுவதில் கண்ணும் நாக்கும்தான் முக்கியம் என்றும் கூறினேன். "நான் இங்கு உண்ட எல்லா உணவும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகவே இருந்தன.

உங்கள் சமையல் திறமையை நான் பகிரங்கமாகத் தாக்கப் போகிறேன்" என்றேன்.

அச் சந்தர்ப்பத்தில் வெண்மையான கதருடையில் புன்முறுவல் பூத்த முகத்துடன் ஜவாஹர்லால் நேரு சாப் பாட்டுக் கூடத்திற்குள் நுழைந்தார். ஒவ்வொருவரும் அவரை எவ்வளவு நேசித்தார்கள் என்பது உடனடி யாகவே புலப்பட்டது. என் அருகில் அவர் தரையின் மீது உட்கார்ந்து கொண்டு இந்திய முறைப்படி கையால் உணவை எடுத்துச் சாப்பிட ஆரம்பித்தார். பாரிஸிலுள்ள நவநாகரிக ஹோட்டல் ஒன்றில் நாங்கள் இருவரும் சேர்ந்து சாப்பிட்டதை என்னால் நினைக்காமல் இருக்கமுடியவில்லை.

சாப்பாட்டுக்கு முன்பு நேரு காந்திஜீயுடன் சிறிது நேர சம்பாஷணை ஒன்றை நடத்தினார். சற்றுப் பிறகு காந்திஜீ என்னிடம் திரும்பி திங்கட்கிழமையாகிய நாளை ஜவாஹர்லாலுடன் தாம் பேசவேண்டுமென விரும்புவ தால், மௌன தினத்தை மாற்றத் தீர்மானித் திருப்ப தாகவும்,திங்கட்கிழமை பூராவும் அதை அநுசரிப்பதற்குப் பதிலாக, இன்று நண்பகல் முதல் மௌனம் ஆரம்பிக்கப் போவதாகவும் என்னிடம் கூறினார். ஆனால், அது பிற் பகலில் என்னுடைய வழக்கமான ஒரு மணி நேரப் பேட்டியை இழக்கச் செய்வதாயிருப்பதினால், மௌனம் ஆரம்பிப்பதை இன்று பிற்பகல் 2-40 வரை தள்ளிப் போடப் போவதாகவும், என்னுடன் 1½ மணியில் இருந்து 2½ மணிவரை பேசுவதாகவும் கூறினார்.

சாப்பாட்டுக்குப்பிறகு நேருவும் நானும் விருந்தினர் விடுதியில் இரு படுக்கைகளின் மீது உட்கார்ந்து கொண்டு இப்பூவுலகத்தின் பல விஷயங்களைப் பற்றி சுமார் ஒரு மணி நேரம் பேசினோம். நேருவும் என்னுடன் அங்குதான் தங்கியுள்ளார். ஒரு சந்தர்ப்பத்தில் அவர், "இந்தியா

வினிடம் வெறுக்கக் கூடியவைகளும், கௌரவிக்கக் கூடியவைகளும் இருக்கின்றன. நீங்கள் எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்" என்ருர்.

அதற்கு நான், "இல்லை, இரண்டையும் நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்" என்றேன்.

சுமார் 12½ மணிக்கு நேரு என்னை விட்டு விட்டு காந்திஜீயுடன் ஒரு மணி நேரம் சம்பாஷிக்கச் சென்ருர். என் பேட்டிக்காக நான் காந்திஜீயின் குடிலுக்கு வந்த பொழுது, நேரு அங்கு தரைமீது இருந்தார். அவர் விசாரத்துட னிருப்பதாகக் காணப்பட்டார். அவரருகில் நான் உட்கார்ந்தேன். காந்திஜீ என்னிடம் திரும்பி வழக்கம்போல், "சரி" என்று கேள்விகளை எதிர்பார்த்தார். "பிரிட்டிஷ் சட்டமும் அரசியல் வழக்கமும், பாராளும் மன்றத்தினிடமும் மன்னர் இடமும் அதிகமான அதிகாரத்தை வைத்திருக்கிறது. ஆனுல், அமெரிக்காவினுடைய அரசியல் தத்துவம் சமஷ்டிக் கொள்கையை அடிப்படையாய்க்கொண் டிருக்கின்றது" என்ற உண்மையை விவரித்து என் பேட்டியை ஆரம்பித்தேன். "இந்தியாவிலுள்ள நானுவித வேறுபாடுகளின் காரணமாக இங்கே ஒரு சமஷ்டி தேவையில்லையா? அதனுல் சுதேச மன்னர்களுக்கும், முஸ்லிம்களுக்கும் திருப்தி ஏற்படாதா?" எனக்கேட்டேன்.

அதற்கு அவர், "எம்மாதிரியான முறை எங்களுக்கு நன்ருகப் பொருந்தும் என்று சொல்லக் கூடிய நிலைமையில் நான் இல்லை. முதலில், பிரிட்டிஷார் வெளியேற வேண்டும். பின்னுல் நாங்கள் என்ன செய்வோம் என்பது யூகத்திற்குரிய விஷயமே பிரிட்டிஷார் வாபஸான க்ஷணத்திலே மதசம்பந்தமான சிறுபான்மையோரின் பிரச்னை மறைந்து விடுகிறது. பிரிட்டிஷார் வாபஸான பின் இங்கே குழப்பம் ஏற்படுமானுல், அக்குழப்பத்தி

லிருந்து முடிவாக எம்மாதிரியான முறை கிளம்புமென நான் கூறமுடியாது. எனக்கு அதிகப் பிடித்தம் எது என்று கேட்டால் சமஷ்டிதான். சபைகளுக்கோ மன்னர்களுக்கோ முழு அதிகாரம் அளிப்பதன்று என்று கூறுவேன். ஒரு விதமான சமஷ்டி முறை ஏற்படத்தான் போகிறது. சமஷ்டி வேண்டுமா வேண்டாமா என்ற பிரச்னையைப் பற்றி எனக்குக் கவலையில்லை என்ற என்னுடைய பதில் உங்களுக்குத் திருப்தியளிக்குமென நம்புகிறேன். ஒரு வேளை உங்களுடைய வார்ப்படம் போல் அமைந்த மனதுக்கு அது கேலியாகப் படலாம். பல நூற்றுண்டுகளாக நிராயுதபாணிகளாகவும்,அந்நிய ஆட்சியில் அடங்கியிருக்கும் பழக்க முடையவர்களாகவுமுள்ள கோடிக்கணக்கான மக்களை வைத்துக் கொண்டு, நான் நடத்துவதாகத் தீர்மானித்த சட்டமறுப்பு இயக்கத்திலே நாங்கள் வெற்றியடைய மாட்டோம் என்று ஒரு வேளை நீங்கள் நினைக்கிறீர்கள் போலும்" என்ருர் காந்திஜீ.

"இல்லை. நான் அவ்வாறு நினைக்கவில்லை, சரித்திரம் வெகு துரிதமாகக் போய்க்கொண் டிருக்கிறது; வெகு சீக்கிரத்தில் சீனவைப் போல உங்கள் தேசமும் சுதந்திரம் அடையும் என்றே நான் நம்புகிறேன். பல வருடங்களுக்கு முன்பே ஆரம்பித்த உங்கள் போராட்டம், வேறு எந்த விதமாகவும் முடிவதற்கில்லை" என்றேன்.

அதற்கு அவர் மிக அழுத்தமாக, "சீனவைப் போல் நாங்கள் சுதந்திரமாக இருக்க விரும்ப வில்லை. சியாங் - கே-ஷேக் இருந்த போதிலும், இப்பொழுதும் சீன உதவியற்ற நிலையிலே இருக்கிறது. வீரம் நிறைந்ததாகவும் இப் போரிலே தன் உடைமை யெல்லாவற்றையும் இழப்பதற்குத் தயாராயும் இருந்தாலும், சீன இன்னும் பூர்ண சுதந்திரமாக வில்லை. 'அமெரிக்கா விடமும் இங்கிலாந்திடமும், உங்கள் உதவியின்றி தனியாகவே நாங்கள்

எங்களுடைய சுதந்திரப் போரை நடத்துவோம்' என்று கூறும்படி சீனு ஆகவேண்டும். இதையே நான் சுதந்திரம் என்று கூறுகின்றேன் " என்றார்.

"சியாங்-கே-ஷேக்குடன் நடந்த நீண்டநேரப் பேட்டி எப்படி ?" என்று நான் அவரிடம் கேட்டேன். அதற்கு அவர், "மிக நன்ருக இருந்தது " எனப் பதில் உரைத்தார்.

நான் புன்சிரிப்புடன், "நீங்கள் அவரைப் புரிந்து கொண்டிருக்க மாட்டீர்கள் ; அவரும் உங்களைப் புரிந்து கொண்டிருக்க மாட்டார் " என்றேன்.

அதைக் காந்திஜீ ஒப்புக்கொண்டு, "அவரைத் துருவிப் பார்க்க முடியவில்லை. பாஷை வேற்றுமையி ருலும் அப்படி இருக்கலாம். நாங்கள் ஸ்ரீமதி சியாங் - கே - யின் மூலமே பேசினேம். ஆனல், அதனல் மட்டு மன்று என்றே நினைக்கிறேன் " என்ருர்.

மீண்டும் விஷயத்துக்குத் திரும்பி, "சீனு பூர்ண சுதந்திரம் அடையவில்லை யென்பது உண்மை தான். ஆனல், சுதந்திரம் ஒரே நாளில் வருவதன்று. நாம் இப் போரில் வெற்றி பெற்ருல், அதன் மூலம் சீனு சுதந்திரம் அடையும். ஓர் ஆசிய சகாப்தத்தை நெருங்கலாம். எதிர்காலத்தில் இந்தியாவும், சீனுவும் சிறந்த சரித்திர சம்பவங்களை உண்டு பண்ணலாம். இருப்பினும், பிரிட்டிஷார் இதை உணர்வதாக எவ்வித அறிகுறியும் எனக்குத் தென்படவில்லை. நீங்கள் கேட்பது போல் அவர்கள் போக மாட்டார்கள். அவர்கள் தங்களைத் தங்கள் ஆயுத பலத்திஞல் சிங்கப்பூரிலும், மலாயாவிலும் பாதுகாத்துக்கொள்ள முடியவில்லையானல், இந்தியா விலும் தங்கள் மூளையைக் கொண்டு தங்களைக் காப் பாற்றிக் கொள்ளப் போவதில்லை " என்றுரைத்தேன்.

"நான் சீனுவைப் பற்றி ஒன்றும் கோளாருகக்

கூறவில்லை என்பதை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். சீனவைக் காப்பியடிக்க விரும்ப வில்லை என்பதைத்தான் நான் அழுத்தமாகக் கூற விரும்பினேன். சீனவைப் போன்று தர்மசங்கடமான நிலைமையில் இந்தியா இருப்பதை நான் விரும்பவில்லை. ஆகவேதான், பிரிட்டிஷ்-அமெரிக்கப் போர் வீரர்கள் இங்கு இருப்பதை நான் விரும்ப வில்லை என்று சொல்லிக்கொண் டிருக்கிறேன். இதனல், ஜப்பான் ஜெர்மன், போர்வீரர்கள் இங்கு இருப்பதை நான் விரும்புவதாக அர்த்தமில்லை. ஜப்பானியர்கள், தாங்கள் இந்தியாவை ஆள விரும்ப வில்லை யென்றும், நாங்கள் சுதந்திரம் பெறுவதற்கு அவர்கள் உதவிபுரியவே நினைப்பதாகவும், ஒவ்வொரு தினமும் ஒலிபரப்புகிருர்கள். அவர்களுடைய அனு தாபத்தையோ, உதவியையோ நான் வரவேற்க மாட்டேன். அவர்கள் தயாள குணம் படைத்த தர்ம தாதாக்கள் அல்ல என்பதை நான் அறிவேன். எவ்வித அன்னிய ஆதிக்கத்திலிருந்தும் இந்தியாவிற்கு ஓய்வு வேண்டுமென நான் விரும்புகிறேன். நான் பொறுமை யிழந்து வருகின்றேன். மேலும் நான் காத்திருக்க முடியாது. சீன, பாரசீகம் ஆகிய நாடுகளைவிட எங்கள் நாட்டின் நிலைமை மிக மோசமாகயிருக்கிறது. காங்கி ரஸை நான் என்வசப்படுத்த முடியாதிருக்கலாம். காங்கிர ஸில் பதவி வகிப்பவர்கள் சந்தர்ப்பத்திற் கேற்ப நடவா திருக்கலாம். (இதைக் கூறும்போது காந்திஜீ நேருவைக் குறிப்பாகப் பார்த்தார்.) அவர்களைக் கடந்து மக்களிடம் நான் நேரடியாகப் பேசப் போகிறேன். ஆனல், எது வந்தாலும் நாங்கள் தளரமாட்டோம். உலகம் பூராவுமே அதிசயிக்கும்படி புதிய அமைப்பொன்றை நாங்கள் தோற்றுவிக்கக்கூடும். உங்களுடைய முடிவுகளை ஒரு புறம் ஒதுக்கி விட்டு சட்ட மறுப்பு இயக்கமான

என்னுடைய இப்புதிய கொள்கையைக் கூர்ந்து கவனித்து அதில் ஏதாவது தவறு இருக்குமானால் அதைக் காண முயற்சி செய்யுமாறு உங்களை நான் கேட்கின்றேன். (இவ்வார்த்தைகள் என்னை நோக்கி கூறியவையாயிருந்த போதிலும், நேருவுடன்தான் அவர் பேசுவதாக எனக்குத் தோன்றியது. இன்றைய வாதத்திலே காந்திஜீயும், நேருவும் ஒருமுகப்பட்டிருக்கவில்லை யென்பது துலக்கமாகத் தெரிந்தது.) அது நீங்கள் எங்கள் வேலைக்கு உதவியளித்ததாக இருக்கும். இன்னும் உயர்ந்த முறையிலே கூறினால், எழுத்தாளர் என்ற முறையிலே நீங்கள் உங்கள் கடமையைச் செய்தவர்களுமாவீர்கள். இந்தியா பற்றிப் பிரசுரமாகும் இலக்கியங்கள் எல்லாம் பயனற்றனவாயும் தகுதியற்றனவாயும் இருக்கின்றன. அவைகளில் பெரும்பாலானவை சுயமாக எழுதப்படவில்லை. எல்லாம் ஒரே அச்சில் வார்த்ததுபோல இருக்கிறது. அந்தப் போக்கிலிருந்து தப்பிக்க முயற்சிக்குமாறு நான் உங்களைக் கேட்கின்றேன். என் உட்கருத்து என்ன என்பதை என்னுடைய மொழிகளிலிருந்து நீங்கள் துருவிப் பார்த்து அறிய வேண்டுமென்று விரும்புகிறேன். அது கஷ்டமென்பதை நான் அறிவேன். அமெரிக்க பிரிட்டிஷ் நாகரிகத்தின் ஆயுத பலத்துடனும், பண்பாட்டுடனும், திறமையுடனும், வசீகர சக்தியுடனும் நீங்கள் இங்கே வந்தீர்கள். உங்கள் போக்குக்கு ஒவ்வாத அல்லது அப் போக்குக்குத் தேவையற்ற எதையும் கிரகித்துக் கொள்ள நீங்கள் மறுப்பதை நான் அறிவேன். ஆனால், வழக்கமான அப் போக்கினின்றும் உங்கள் மனமானது மேலோங்கவில்லையானால், சேவாகிராமத்தில் நீங்கள் கழித்த நாட்கள் வீணேயாகும்" என்றார்.

"ஆமாம்" எனக் கூறிச் சிறிது நேரம் எனக்காகக் கூறியது எது, நேருவுக்காகக் கூறியது எது, எனப் பிரிக்க

முயற்சித்தேன். பிறகு, "ஆனால், நீங்கள் பேசிவந்த புதிய அமைப்பை நான் பார்க்குமாறு உதவி செய்வீர்களா? என்னுடைய சொந்தப் புதிய அமைப்புப் பற்றியே எனக்கு எவ்வித நிச்சயமும் ஏற்படவில்லை. அப்படியிருக்க உங்களுடைய யோசனையை நான் எப்படி திடீரென்று புறக்கணிப்பது. இந்தியா உலகிற்கு நிறைய போதிக்க வேண்டியிருக்கிறதென நான் நம்புகிறேன். பிற்கால வளர்ச்சி எப்படியிருக்குமென நீங்கள் நினைக்கிறீர்கள்?" எனக் கேட்டேன்.

அதற்குக் காந்திஜீ, "இப்பொழுது மத்திய அதிகாரம் பெரிய நகரங்களாகிய புதுடில்லியிலோ, கல்கத்தாவிலோ, பம்பாயிலோ இருக்கின்றது. இந்தியாவின் ஏழு லட்ச கிராமங்களுக்கும் அதைப் பிரித்துக் கொடுப்பேன். இதன் அர்த்தம் மத்தியில் அதிகாரமேயில்லை என்பதுதான். வேறு விதமாகக் கூறினால் இங்கிலாந்தின் இம்பீரியல் பாங்கியில் இப்பொழுது சேமித்து வைக்கப் பட்டுள்ள ஏழு லட்சம் டாலர்களைத் திரும்பப் பெற்று ஏழு லட்சம் கிராமங்களுக்கும் அவைகளைப் பிரித்துக் கொடுக்க விரும்புகிறேன். இதனால், ஒவ்வொரு கிராமமும் தன்னுடைய ஒவ்வொரு டாலரைப் பெறும். அதை அக் கிராமம் இழந்து விடாது. இந்தியாவின் இம்பீரியல் பாங்கியில் சேமித்து வைக்கப்பட்டுள்ள ஏழு லட்சம் டாலர்களும், ஜப்பானிய விமானங்கள் போடும் குண்டுகளால் அழிக்கப்படக்கூடும். அப்படியின்றி அவை ஏழு லட்சம் பங்குதாரர்களிடையே பிரித்துக் கொடுக்கப்பட்டால் யாரும் அவர்களுடைய ஆஸ்தியைக் கவர முடியாது. இதனால் அவ்வேழு லட்சம் பங்குதாரர்களுக்கு மிடையே ஒத்துழைப்புத் தானாகக் கிடைக்கும். தானாகவே ஒத்துழைப்பது என்பது நாஸிஸ வழிகளால் வற்புறுத்தப்படும் ஒத்துழைப்பு அல்ல. தானாகவே ஒத்துழைக்கும் தன்மை

யானது, உண்மையான சுதந்திரத்தையும், சோவியத் ருஷ்யாவில் உள்ள புதிய அமைப்பை விட மகோன்னதமான புதிய ஏற்பாடொன்றையும் உண்டாக்கும். ருஷ்யாவிலே கொடூரமான காரியங்கள் செய்யப்படுகின்றன என்று சிலர் சொல்லுகின்றனர். ஆனால் அவை, தாழ்த்தப்பட்டவர்கள், ஏழைகளுடைய நன்மைக்காகச் செய்யப்படுவதால் அவை நல்லவையே என்றும் சொல்லுகிறார்கள். என்னைப் பொறுத்த வரையில், இரக்கமற்ற அடக்குமுறையில் எவ்வித நன்மையையும் நான் காணவில்லை. என்றாவது ஒரு நாள் இக் கொடூரச்செய்கை நாம் இதுவரை கண்டிராத அவ்வளவு மோசமான அராஜகத்தை உண்டாக்கும். இங்கே அப்படிப்பட்ட அராஜகத்திலிருந்து நிச்சயமாகத் தப்பித்துக் கொள்ளுவோம். இந்தியாவின் எதிர்கால சமூகத்தைப் பற்றிய விஷயம் என் அறிவுக்குப் பூரணமாகப் பிடிபடாதது என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால், நான் உங்களுக்கு விவரித்ததைப் போன்ற அரசியல் ஏற்பாடு ஒன்று நடைமுறையில் இருந்திருக்கின்றது. அதிலிருந்த ஏதோ சில குறைகளின் காரணமாகத்தான் பிரிட்டிஷ் மொகலாய ஆட்சிகளுக்குமுன் அது தலைபணிய நேரிட்டதென்பதில் சந்தேகமில்லை. அதன் சில அம்சங்கள் இன்னும் தப்பிப் பிழைத்திருக்கின்றன; பிரிட்டிஷ் ஆட்சியின் அக்கிரமங்கள் இருந்த போதிலும் அதனுடைய வேர்கள் பிழைத்திருந்தன என்றே நான் நினைக்கிறேன். அவ்வேர்களும் தண்டும் இந்தியர்கள் கையில் அதிகார மாற்றம் ஏற்பட்டால் தழைத்து ஓங்கும். அது எம்மாதிரியான செடியாயிருக்குமென நான் அறியேன். ஆனால், இப்பொழுது நம்மிடமுள்ள எதினும் அது மிக மிக உயர்ந்ததாகவே யிருக்கும். துரதிருஷ்டவசமாக அஹிம்சைக்கு வேண்டிய மனோபாவம் இங்கே

இப்பொழுது இல்லை. ஆனால், ஒரு புதிய அமைப்பைச் சிருஷ்டிப்பதற்குச் சென்ற 25 வருடங்களாகச் செய்த கடுமையான வேலைகள் எல்லாம் வீணாயின என்று நான் நம்பமுடியாது. புதிய அமைப்பை உருவகப்படுத்துவதில், காங்கிரஸ் கட்சிக்கு முக்கிய பங்கிருக்கும் ; முஸ்லிம் லீக்குக்கும் கூட அப் பங்கு உண்டு" என்று காந்திஜீ நீண்ட பிரசங்க மொன்று செய்தார்.

"ஏழு லட்சம் டாலர் உபமான சம்பந்தமான விஷயத்தைத் தொடர்ந்து கூறுமாறு நான் விரும்புகிறேன்" எனத் தெரிவித்து, "இங்கிலாந்து இம்பீரியல் பாங்கியி லிருந்து தங்களுக்குத் திரும்பி வந்த ஏழு லட்சம் டாலர் களைக் கொண்டு, அக் கிராமங்கள் என்ன செய்யும்?" எனக் கேட்டேன்.

"நிச்சயமாக ஒன்று நிகழும். இன்றைய தினம் பங்குதாரர்கள் எவ்வித பிரயோஜனத்தையும் அடைய வில்லை. தரகர்கள் அதை எடுத்துக்கொண்டு விடுகின் றனர். கிருஷிகர்கள் அப் பணத்துக்குச் சொந்தக்காரர் களாக இருந்தால், தங்களுக்கு நன்மையான காரியங்களில் அவர்கள் அதைச் செலவிடுவார்கள்" என்றார்.

"விவசாயி தன்னுடைய பணத்தைப் பூமிக்குள் அல்லவா புதைத்து விடுகிறான்" என்று அறிவித்தேன்.

அதற்குக் காந்திஜீ, "அவர்கள் தங்களுடைய பணங்களைப் பூமியில் புதைக்க மாட்டார்கள்; ஏனெனில் அவர்கள் உயிர் வாழ வேண்டியிருக்கிறது. அவர்கள் மீண் டும் பாங்குக்கு—தங்கள் சொந்த பாங்குக்கு—செல்வார் கள் தங்கள் சொந்த மேற்பார்வையில் தங்களுக்கு நன்மை யான காரியங்களில் அவர்கள் அதை உபயோகிப்பார்கள். அவர்கள் காற்றாலியங்கும் இயந்திரங்களைச் செய்யலாம்; மின்சாரம் உற்பத்தி செய்யலாம்; அல்லது அவர்கள் விரும்பும் எதையும் செய்யலாம். மத்திய சர்க்கார் ஒன்று

ஏற்படலாம். ஆனால் அது மக்களின் விருப்பப்படியே காரியங்களைச் செய்யும்; அவர்களுடைய எண்ணப்படி பரந்த தன்மையுடையதாயிருக்கும்" என்றார்.

"அரசாங்கம், பிறகு அதிகமான தொழில்களை ஏற்படுத்தும்; தொழில் முறையில் தேசத்தை அபிவிருத்தி செய்யும் என நான் எண்ணுகிறேன்" என்று சொன்னேன்.

"பிரிட்டிஷ் சேனையின் பாதுகாப்பு இல்லாத மத்திய சர்க்காரொன்றை நீங்கள் உங்கள் மனக்கண்ணால் பார்க்க வேண்டும். அச் சேனையின்றி அச் சர்க்கார் நடைபெறுமாயின், இதுதான் புதிய அமைப்பு. நாம் வேலைசெய்து பெறத் தகுதியுடைய லட்சியம் இது. இது சாத்தியமில்லாத ஒரு காரியமல்ல. அனுபவ சாத்தியமானதே" என்றார் காந்திஜீ.

"நான் ஒப்புக் கொள்ளுகிறேன். பத்து வருடங்களுக்கு முன்பாகயிருந்தால் இதை ஒப்புக்கொண் டிருக்க மாட்டேன்; ஆனால் எனக்கு ருஷ்யாவிலும், இதர இடங்களிலும் ஏற்பட்ட அனுபவங்களிருந்து, தனி மனிதனது சுதந்திரத்தை அசாத்தியமாகச் செய்யும், சர்வவல்லமையுடைய அரசாங்கம் ஏற்படுவதுதான் உலகத்தை எதிர் நோக்கும் பெரிய அபாயம் என்று நான் உணர்கிறேன். முதலாளித்வ பொருளாதார நிபுணர்கள், பொருளாதார விஷயங்களிலே அடிக்கடி அரசாங்கமானது தலையிடுவதை அவசியமாகச் செய்து விட்டனர் என்பது கண்கூடு. இது அரசாங்கத்திற்கு அதிக அதிகாரத்தைக் கொடுக்கிறது. இம் மாதிரியான அரசாங்கத்திற்கு தங்கு தடைகளை ஏற்படுத்துவதுதான் வருங்கால சந்ததியின் முக்கிய பிரச்னை. ஒரு கேள்வி, என்னவென்றால், சர்வ அதிகாரம் பெற்ற ஒரு சர்க்கார் இருக்கின்ற தேசத்தில், தனிநபரின் சுதந்திரத்தை நாம் பாதுகாக்க முடியுமா? என்பது தான். மற்

ளுரு கேள்வி, சர்வ தேசீய அமைப்பினுள்ளடங்கி தேசங்கள் ஒத்துழைக்குமா? அல்லது நாம் சர்வ தேசீயத்தைத் தள்ளி விட்டு, மேலும் சில யுத்தங்களில் ஈடுபடுவதா?" என்றேன்.

அதற்குக் காந்திஜீ, "இம்மாதிரி ராட்ஸச அரசாங்கங்கள் தோன்றுவதை எப்படித் தடுப்பது என்பது தான் என்னுடைய கேள்வி. இதனுல்தான் நேசக்கட்சியார்கள் பாஸிஸ நாடுகளின் தன்மையைக் கைக் கொள்வதை நான் விரும்பவில்லை. எனவே, இந்தியா சொல்வது நல்லதே என்று அவர்கள் கூறட்டும் என நான் கேட்கிறேன். 'நாம் இதில் குதித்து நீந்திப் பார்ப்போம் இந்தியாவிற்கு அதன் சுதந்திரத்தைக் கொடுப்போம்; அவசியமாஞல் இடையே இந்தியாவின் நிபந்தனைகளின்படி இந்தியாவில் தங்குவோம். மக்களிடையே தாராளமான ஒத்துழைப்பை நாம் பெற முடியுமா என்பதைப் பார்ப்போம்' என்று பிரிட்டிஷார் பரிசோதிக்கட்டும்" என்ருர்.

"நீங்கள் உங்களுடைய சுதந்திரத்தை அடையத்தான் வேண்டும் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். அதனுல், உங்களுக்கும் எங்களெல்லோருக்குமே நன்மை ஏற்படலாம் என்று நான் நம்புகிறேன். தங்கள் சாம்ராஜ்யத்தைப் பாதுகாக்கவோ, அதன் அனுதாபத்தைப் பெறவோ பிரிட்டிஷார் பிரமாதமான திறமையைக் காட்டிவிடவில்லை" என ஒப்புக் கொண்டேன்.

"அதை நீங்கள் அமெரிக்காவுக்குக் கூறுங்கள்" எனக் காந்திஜீ வற்புறுத்திஞர்.

"அதை நான் சொல்லுவேன். ஆனுல் அந்த வாசகத்திலன்று. பிரிட்டன் யுத்த தளவாடங்களை வாங்குவதற்கு நாங்கள் இப்பொழுது பொருளுதவி செய்து வருகின்ருேம். இவ்வருடம் 60,000 விமானங்கள் செய்கிருேம். ஆனுல், 1943-ல் 140. ஆயிரம் விமானங்கள் செய்வோம். இந்தியா

வில் அமெரிக்காவின் பொறுப்பு சம்பந்தப்பட்டவரையில், நெருக்கடி சற்று முன்னதாகவே ஏற்பட்டு விட்டது. (அவர்கள் சிரித்தனர்) நாங்கள் இச்சந்தர்பத்தில் லட்சத்து நாற்பதினாயிரம் விமானங்கள் தயார் செய்து, போர் முனையிலே இருபது லட்சம் வீரர்களை வைத்திருந்தோமானால், இந்தியாவைப் பற்றிய எங்களுடைய அபிப்பிராயம் லண்டனில் மிக அக்கறையுடன் கவனிக்கப்படும். ஆசியாவில் என்ன நடக்கின்றது என்பதை இன்றைய தினம் பிரிட்டிஷார் அறியவில்லை. அமெரிக்கர்களின் உதவியைக் கொண்டு நாளை அவர்கள் அறியலாம்" என அறிவித்தேன்.

"அதனால்தான் நான் விஷயத்திற்கு நேரடியாக வந்து, நம்முடைய திட்டத்தின் உயர்ந்த நியாயத்தையும் சாத்தியத்தையும் வாதித்துக்கொண்டிருக்கும் வரையில் பிரிட்டிஷார் அதைப் புரிந்துகொள்ள மாட்டார்கள், நாம் காரியத்தைச் செய்ய ஆரம்பித்த பிறகுதான் அவர்களுக்குப் புரியும் எனக் கூறுகிறேன். இதுவே பிரிட்டிஷ் சரித்திரத்தின் போக்கு. செய்கையினால் அவர்கள் உணர்ச்சி யூட்டப்படுகிறார்கள்; எனவே, நாம் இப்பொழுது செய்ய வேண்டியது செயல்தான். எப்படி யிருப்பினும், தற்சமயம் இந்திய தேசீய சர்க்கார் அமைக்கும் எண்ணத்தைப் பிரபலப்படுத்தி, அது வீண் மனோரதமல்ல என திருஷ்டாந்தமாகக் காட்டவேண்டும். என்னுடைய நோக்கத்தின் தகுதியையோ நியாயத்தையோ நிரூபிக்க, அஹிம்சா தத்துவம் அவசியமில்லாதிருந்த போதிலும், அது அஹிம்சையையே ஆதாரமாகக்கொண் டிருக்கிறது. இதே நோக்கம், நான் பலாத்காரத்தை விரும்பியிருந்தாலும் தோன்றியிருக்கும். நான் பலாத்காரத்தை விரும்பியிருந்தாலும் கூட 'வெளியேறுங்கள். உங்களுடைய ராணுவதளமாக இந்தியாவை உபயோகிக்காதீர்கள்'

என்றுதான் கூறியிருப்பேன். 'ஆனால் இன்றைய தினம் வேறு யாரும் கைப்பற்றி விடக்கூடாதே என்பதற்காக ஒரு ராணுவதளமாக உபயோகிக்க விரும்பினால், அப்படியே செய்யுங்கள்; ஆனால் கண்ணியமான முறையிலே இங்கு தங்குங்கள்; எங்களுக்கு ஒரு தீமையும் செய்யாதீர்கள்' என்று கூறுகிறேன். இன்னும் ஒரு படி மேலே போய், இந்தியா தோற்றுவிக்கும் மத்திய சர்க்கார் ராணுவ மனப்பான்மை கொண்டதாயிருப்பின், பிரிட்டிஷார் அதன் உதவியையும் பெறலாம் என்று கூடச் சொல்லுவேன்" எனப் பகர்ந்தார் காந்திஜீ.

"பிரிட்டிஷார் பலவந்தம் காரணமாக உங்களுடைய வேண்டுகோளை ஒப்புக்கொண்டால், ஏழு லட்சம் கிராமங்களின் குடியரசை நீங்கள் எப்படி அமைப்பீர்கள்?" எனக் கேட்டேன்.

அதற்குக் காந்திஜீ, "அமைப்பைப் பற்றித் தெளிவாக நான் ஒன்றும் கூற முடியாது. இன்று அதை நான் வகுத்து விட முடியாது. அவை எல்லாம் கருத்துருவத்திலேயே இருக்கின்றன. அவை பிரதிநிதிகளின் சபையால் நிர்ணயிக்கப்பட வேண்டுமே ஒழிய, சொர்ப்பன உலகில் வசிப்பவன் எனப் பலரும் கூறும் எனது மூளையிலிருந்து வெளிவரக் கூடியவையல்ல" என்றார்.

"சரி, குடிசைகளிலே நூற்பதைப் புரிந்து கொள்ள முடியாத அவ்வளவு மோசமான, மாறு அபிப்பிராயமுடையவனல்ல நான்" என்றேன்.

"ஆனால், நீங்கள் காய்கறிகளைப் பற்றி அறிந்து கொள்ளவில்லையே" என்றார் காந்திஜீ.

"இரவு உணவிற்கும், பகல் உணவிற்கும் தினசரி ஒரே மாதிரியான காய்கள் சாப்பிடுவதை நான் விரும்பவில்லை" என்றதும் அவர் சிரிக்க நாங்கள் எல்லோருமே சிரித்தோம். நான் எழுந்து விடை பெற்றேன்.

இன்று பிற்பகல் மூன்று மணி நேரம் நேருவும் நானும் விருந்ினர் விடுதியின் அறையில் உட்கார்ந்திருந்தோம். அவர் படுக்கையில் இருக்க, நான் அங்கிருந்த ஒரே நாற்காலியில் உட்கார, இருவரும் மனிதனின் சுகம், பண்பாடு, மனிதர்கள் கௌரவமான வாழ்க்கையை நடத்துவதற்கு சமூகம் எவ்வாறு திருத்தி அமைக்கப்பட வேண்டும் என்பது பற்றியும், அமெரிக்கா, ருஷ்யா, இந்தியா முதலிய விஷயங்கள் பற்றியும் விவாதித்தோம். அவர் முன்பு போல சோவியத்தினிடம் அவ்வளவு பரிவுகாட்டவில்லை. ஆனால் அவர் சீனவிடம் பரிவு மிக்கவராக இருக்கிறார். இன்றைய தினமும் கூட சீனவைப் பற்றியே காந்திஜீயிடம் பேசிக்கொண்டிருந்தார். காந்திஜீக்கும் நேருவுக்குமிடையே ஒருவர்க்கொருவர் விட்டுக் கொடுக்கும் தன்மை இருக்கின்றது. எனவே, காந்திஜீ சட்டமறுப்பு இயக்கத்தை நேரு ஒப்புக் கொள்ளும்படி செய்து விடுவார். இங்கு வந்த பொழுது நேருவுக்குச் சந்தேகங்கள் இருந்தன. ஜனதிபதி ரூஸ்வெல்ட் மீண்டும் இந்திய விஷயத்தில் தலையிட்டு, பிரிட்டிஷாரை சமரசத்திற்குத் தூண்டுவாரென அவர் எதிர்பார்த்தார். ஆனல் அவசரமான இந்தியப் பிரச்னைகள் குறித்து யுத்தகால உடன்படிக்கை ஒன்று செய்து கொள்ளப் பேச்சுவார்த்தை நடத்தப் பிரிட்டிஷார் மறுத்து விட்டதும் காந்திஜீயின் அஹிம்சை வழியின் மூலம் அவர்களைக் கட்டாயப் படுத்தும் முறையைக் கையாள்வது நேரு போன்ற இந்திய தேசிய வாதிகளுக்குத் தவிர்க்க முடியாததாகிறது.

அமெரிக்காவுக்குப் போய் ஜனதிபதி ரூஸ்வெல்ட்டைக் கண்டு பேசுமாறு நான் நேருவை வற்புறுத்தினேன். எந்தத் தேசத்தின் சுதந்திர ஆசைக்கும் சாதகமாக அமெரிக்கா சுயேச்சையாகக் காரியங்களை செய்கிறதென்

றும், இந்தியாவில் அமெரிக்காவின் பொருளாதார அக்கறை பிரிட்டனுடையதைக் காட்டிலும் மாறுபாடுடையதென்றும் நான் அவரிடம் கூறினேன்.

இந்து மதத்தைப் பற்றியும் நாங்கள் தர்க்கித்தோம். இந்து சமயத்தில் மூலாதாரக் கொள்கைகள் என்று ஒன்றும் கிடையாதென்றும், எனவே எந்த இந்துவும் தான் மதப்பற்று இல்லாதிருப்பதற்குத் தண்டனைபெறுவதற்கோ பிரஷ்டம் செய்யப்படுவதற்கோ இல்லை என்றும் நேரு கூறினார். "நீங்கள் ஒரே சமயத்தில் இந்துவாகவும், நாஸ்திகனாகவும் இருக்கலாம். காந்திஜீ இன்று காலை கூறியது போல் 'தீண்டாமையிலோ, ஜாதிப் பிரிவினையிலோ உங்களுக்கு நம்பிக்கை யில்லை என்ற காரணத்தினால் நீங்கள் இந்துவாக யிருப்பதிலிருந்து தடைப்படுத்தப் படவில்லை; இதே போன்று நீங்கள் ஏசுகிருஸ்துவினுடைய படத்தை உங்கள் சுவரிலே தொங்கவிட்டு அவருடைய கோட்பாடுகளிலே நம்பிக்கை வைத்திருந்தாலும் கூட நீங்கள் ஒரு மதப்பற்றுள்ள இந்துவாகவே இருப்பீர்கள்" என்றார்.

ஜூன் 8, 1942

நேரு என்னிடமிருந்து மூன்றடி தள்ளிப் படுக்கையில் தூங்கினார். இரவில் ஏற்பட்ட சந்தடி அவருடைய தூக்கத்தைக் கெடுத்தது. நானோ நன்றாகத் தூங்கினேன். ஆசிரமத்தில் உள்ள சில நண்பர்களுடன் உரையாடிய பிறகு நேற்று இரவு 9¼ மணிக்குத் திரும்பி வந்ததாகவும் என்னிடம் மாலையில் பேசிக்கொண்டிருக்கலாம் என எண்ணி வந்தபொழுது நான் ஆழ்ந்த நித்திரையில் இருந்ததை அவர் கண்டதாகவும் கூறினார்.

இன்று காலை 6 மணிக்குக் காந்திஜீ வழக்கம் போல் வெண்மையான உடையில் ஏழு எட்டு பேர்கள் தம்மைச்

சூழ, உலாவப் புறப்பட்டார். இன்று அவருடைய மௌன தினம். தாழ்வாரத்தில் அவர் என்னைக் கண்டார். என்னை வாழ்த்தும் முறையில் அவருடைய கைகளைத் தலைக்கு மேலே தூக்கினர். காலைநேரத்தை நான் டைப் செய்வதிலும் நேருவுடன் பேசுவதிலுமாகக் கழித்தேன்.

பிற்பகலில் அரியநாயகம் வந்தார். அவர் திவி, தார்ண்டைக் (Dewey, Dhorndike) இருவருடனும் கொலம்பியா சர்வகலாசாலையில் படித்தவர்; எடின்பரோ, கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலைகளில் பட்டம் பெற்றவர். அவர் எனக்காகச் சுத்தமான வெள்ளைக் கதர் சூட்டையும், சேவாக் கிராமத்தின் மணலும் கல்லும் என் படுக்கையறை சிலிப்பர்களைத் துளைப்போடுவதை அவர் கவனித்திருந்ததால் ஒரு ஜதை செருப்பையும் கூடக் கொண்டு வந்தார். அவர் அமெரிக்காவில் படித்ததைப் பற்றி பேசும் பொழுது எஸ்-எஸ்-பிரென்க்கேரியா (S. S. Berengaria) என்ற கப்பலில் நியூயார்க்குக்குப் போனதைப் பற்றியும், அதிலுள்ள பரிசாரகன் தான் மாநிறமாயிருந்ததன் காரணம் பற்றித் தமக்கு போஜனம் பரிமாற மறுத்ததையும் ஞாபகப்படுத்திக் கூறினர். அது அவருடைய நெஞ்சில் சுருக்கெனத் தைத்து விட்டது. அவருடைய விசேஷ பயிற்சி அடிப்படைக் கல்வியாகும். அதாவது, கிருஷிக குழந்தைகளுக்கு முக்கியமாக நூல் நூற்றல், நெசவு, விவசாயம் முதலிய தொழில்களைக் கற்றுக் கொடுத்தல். காங்கிரஸ் மந்திரிசபை மாகாணங்களில் 1937 முதல் 39 வரை பதவி யேற்ற காலத்தில் இம் முறையை ஆதரித்து ஊக்கமளித்தது எனக் கூறினர். ஆனல் பிரிட்டிஷார் பின்னர் அதை நிராகரித்துவிட்டனர். பிரிட்டிஷாரின் முறைகள் இந்தியாவின் கல்வி விஷயத்தில் தோல்வியுற்றதை தெரிவிக்கும் பிரிட்டிஷாரின் உத்தியோக பூர்வமான அறிக்கைகளிலிருந்து புள்ளிவிவரங்களை

எனக்குக் காட்டினுர். இந்தியாவிலுள்ள கல்வி முறையின் முக்கிய நோக்கம், குமாஸ்தாக்களைத் தயார் செய்வதும், பிரிட்டிஷாருடன் உழைப்பதற்காக சர்க்கார் உத்தியோகஸ்தர்களைத் தயார் செய்வதுமே ஆகும் எனத் தர்க்கித்தார். எனவே சர்க்கார் கீழ்த்தர வகுப்பினரின் கல்வியிலே சிரத்தை காட்டவில்லை என்றுர். தங்களுக்கு உபயோகப் படுவார்கள் என்றெண்ணிய மத்திய வகுப்பின் ஒரு பகுதியினருக்கு மாத்திரமே அவர்கள் கல்வியளிக்க விரும்பினர். அதன் விளைவே மத்திய வகுப்பு தேசீயம். சமீபத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் உபாத்தியாயர்களைப் பயில்விக்கும் பள்ளிக்கூடங்களின் சில கட்டிடங்களையும் எடுத்துக் கொண்டு விட்டனர்.

இதைக் கவனித்துக் கேட்டு, அரியநாயகம் சொல்வதை ஒப்புக்கொண்டு, இந்தியாவில் சமாதானம் நிலவும் காலத்தில் பிரிட்டிஷார் ஆயுதங்களுக்காகச் செலவிடுவதில் ஒரு சிறு பகுதியைக் கல்விக்காக கொடுத்தார்களேயானுல் இந்திய விவசாயிகள் இவ்வளவு தற்குறிகளாகயிருக்கமாட்டார்கள் என்று நேரு கூறினுர். போதுமான அளவு பள்ளிக்கூடங்களை அமைப்பதற்கு வேண்டிய நிதி இல்லையென்று எப்பொழுதுமே பிரிட்டிஷார் சமாதானம் சொல்லி வருகிருர்கள் என்றுர் அரியநாயகம். பிரிட்டிஷார் உத்தியோக பூர்வமாக எடுத்த ஜனசங்கியையின் கணக்கை அவர் என்னிடம் காட்டினுர். 1921-ல் இந்தியாவின் ஜனத்தொகையில் 7 சதவிகிதம் படித்தவர்கள்; 1931-ல் இவ்வெண்ணிக்கை 8 சதவிகிதத்திற்கு உயர்ந்தது. "சிறிது சிந்தித்துப் பாருங்கள். பத்து வருடங்களுக்கு ஒரு சதவிகிதம் அதிகரிப்பு" என்று அரியநாயகம் அதிக வருத்தத்துடன் ஹாஸ்யமாகக் கூறினுர். 1941-ன் விவரங்கள் நம்பமுடியாதவை என அறிவிக்கப்பட்டது.

என்னுடைய வழக்கமான தினசரிப் பேட்டிக்கு

இன்று மாலை 3 மணிக்கு என்னை வரவேற்பதற்குத் தோதாக காந்திஜீயின் மௌனம் முன்னரே முடிவுற்றது. "நாம் தீர்ப்பதற்கு மிகக்கடினமான இந்தியாவின் மிகப் பெரிய பிரச்னையைப் பற்றி இன்னும் பேசவில்லையே" என்று ஆரம்பித்தேன்.

"அது என்ன ?" என்று காந்திஜீ கேட்டார்.

"இந்தியாவின் ஜனத்தொகை ஒவ்வொரு வருடமும் ஐம்பது லட்சம் அதிகரிக்கிறது. 1931-ல் 33 கோடியே 80 லட்சம் இருந்த ஜனத்தொகை 1941-ல் 38 கோடியே 80 லட்சமாகப் பெருகிவிட்டதென்று பிரிட்டிஷாரின் உத்தியோகப் பூர்வமான புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன. மேலும் 5 கோடி வயிறுகளுக்கு உணவும், உடல்களுக்குத் துணியும் தங்குமிடமும் வேண்டும். பத்து வருடத்திலே 5 கோடி அதிகம். இதை எப்படி நீங்கள் சமாளிக்கப் போகிறீர்கள் ?" என்று கேட்டேன்.

"கர்ப்பத்தடை ஒரு காரணமாகலாம். ஆனால் நான் அதற்கு எதிரி" என்றார் காந்திஜீ.

"நான் அப்படியில்லை. ஆனால் இந்தியாவைப் போன்ற பிற்போக்குள்ள ஒரு தேசத்தில் கர்ப்பத்தடையானது எந்த விதத்திலும் பயன் தரக்கூடியதாக இருக்க முடியாது" என்றேன்.

அதற்குக் காந்திஜீ சிரித்துக்கொண்டே "அப்படியானால் ஒரு வேளை சில நல்ல கொள்ளை நோய்கள் நமக்குத் தேவை போலும்" என்றார்.

"அல்லது, உள் நாட்டுப் போர்" என்று வருத்தத்துடன் தெரிவித்தேன். "ஆனால் சோவியத் ருஷ்யாவில் பஞ்சம், தொத்து நோய், உள்நாட்டுப் போர் எல்லாம் வந்தன ; ஆயினும், அதன் ஜனத்தொகை அதிவேகமாகப் பெருகியது. 1928-ல் போல்ஷ்விக்கர்கள்

சில பொருளாதார முறைகளைக் கையாண்டனர்" என்றேன்.

"நாங்கள் தொழில் அபிவிருத்தியில் துரிதமாக முன்னேற வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்ளும்படி என்னை நீங்கள் கட்டாயப்படுத்த விரும்புகிறீர்கள். அதை ஒப்புக் கொள்ளுமாறு என்னை வற்புறுத்த முடியாது. பிரிட்டிஷ் ஆட்சியை ஒழிப்பதே எங்களுடைய முதல் பிரச்னையாகும். பிறகு பிறரது கட்டுப்பாடுகளின்றி இந்தியாவுக்குத் தேவையானதை நாங்கள் சுதந்திரமாகச் செய்யமுடியும். பிரிட்டிஷ் அரசாங்கம் எங்களைச் சில தொழிற்சாலைகளை வைத்துக் கொள்ளத் தகுதியுடையவர்கள் என அனுமதித்தது. ஆனால் சில தொழிற்சாலைகளைத் தடைப்படுத்தியும் விட்டது. பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை முடிப்பது தான் எனக்கு அதி முக்கியமான பிரச்னையாகும்" என்றார் காந்திஜீ.

அவர் பேச விரும்பியது இதுதான் என்று தெளிவாகத் தெரிந்தது. தெளிவில்லாத எதிர்காலத்தைக் குறித்து அவருக்குக் கவலையில்லை. நல்லது, வரப்போகும் உங்களுடைய ஒத்துழையாமை இயக்கத்தைப் பற்றி நீங்கள் உண்மையில் என்ன காண்கின்றீர்கள். அது எவ்வித உருவத்தை அடையும்?" எனக் கேட்டேன்.

அதற்குக் காந்திஜீ, "கிராமங்களில் விவசாயிகள் வரி செலுத்த மாட்டார்கள்; உத்தியோக முறையில் தடை இருப்பினும் அவர்கள் உப்புக் காய்ச்சுவார்கள். இது ஓர் அற்ப விஷயமாகத் தோன்றலாம். உப்பு வரி, பிரிட்டிஷ் சர்க்காருக்கு மிகச் சிறிய வருவாயாயிருக்கலாம். ஆனால், அதைச் செலுத்த மறுக்கின்ற விஷயமானது, விவசாயிகளுக்குத் தாங்கள் சுதந்திரமாகச் செய்கையில் ஈடுபட லாயக்கானவர்கள் என்று நினைக்கும்படியான ஒரு தைரி

யத்தைக் கொடுக்கிறது. அவர்களுடைய அடுத்த வேலை நிலங்களைக் கைப்பற்றுவது" என்று விவரித்தார்.

"பலாத்காரமாகவா?" எனக் கேட்டேன்.

"பலாத்காரம் ஏற்படலாம். ஆயினும் நிலச்சுவான் தார்களும் ஒத்துழைப்பார்கள்" என்றார்.

"நீங்கள் வருங்காலத்தில் பெரிதும் நம்பிக்கை யுடையவர்கள்" என்றேன்.

"நிலச்சுவான்தார்கள் தப்பித்துக்கொண்டு ஓடுவதன் மூலம் ஒத்துழைப்பார்கள்" என்றார் காந்திஜீ.

எனக்கு அருகில் உட்கார்ந்திருந்த நேரு, "1917-ல் ருஷ்யவீரர்கள் யுத்த முனையிலிருந்து ஓடி விட்டதை 'தம் பலத்தால் சமாதானத்தை ஆதரித்து வாக்களித்தனர்' என லெனின் குறிப்பிட்டதை நீங்கள் உங்களது 'மனிதர்களும்—அரசியலும்' என்ற நூலில் கூறியிருக்கின்றபடி நிலச்சுவான்தார்களும் தங்கள் நிலங்கள் பறிமுதலாவதை ஆதரித்து வாக்களிப்பார்கள், அதாவது அக்கிராமங்களினின்றும் ஓடுவதன் மூலம்' என்றார்.

"அல்லது அவர்கள்பலாத்கார முறையில் எதிர்க்கலாம்" என்றேன்.

"சில தினங்களுக்குக் குழப்பம் இருக்கலாம்; ஆனால் அதை நாம் சீக்கிரம் அடக்கிவிட முடியும்" என்றார் காந்திஜீ.

"நஷ்ட ஈடின்றி அது பறிமுதல் செய்யப்பட வேண்டுமென நினைக்கிறீர்களா?" எனக் கேட்டேன்.

"சந்தேகமில்லாமல்" என்று ஒப்புக்கொண்டார் காந்திஜீ. "நிலச் சுவான்தார்களுக்கு நஷ்ட ஈடு கொடுப்பது பொருளாதாரப்படி யாராலும் செய்ய முடியாத காரியம்" என்றார்.

"கிராமங்களைப் பொறுத்த வரையில் சரி! ஆனால்,

இந்தியா முழுதும் கிராமங்கள் அல்லவே? நகரங்களைப் பற்றி என்ன?" என்றேன்.

"நகரங்களிலுள்ள தொழிலாளர்கள் தங்களுடைய தொழிற்சாலைகளிலிருந்து வெளியேறுவார்கள். ரயில் பாதைகளில் ரயில்கள் ஓடுவது நின்றுவிடும்" எனக் காந்திஜீ விளக்கினார்.

"பொது வேலை நிறுத்தம்" என எனக்குள்ளே நான் கூறிக் கொண்டு, சிறிது பலமாக, "விவசாயிகள் உங்களை அதிகமாகப் பின்பற்றுகிறார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால், உங்களுக்கு நகரங்களிலுள்ள தொழிலாளிகளின் ஆதரவு அவ்வளவு அதிகமாக இல்லையே" என்றேன்.

"இல்லை, அவ்வளவு அதிகம் இல்லைத்தான்" என்று காந்திஜீ ஒப்புக் கொண்டார். "ஆனால் இப்பொழுது தொழிலாளர்களும் ஒத்துழைப்பார்கள். ஏனெனில், தேசத்தின் போக்கைப் பார்க்கும்போது இந்துக்கள், முஸல்மான்கள், தீண்டாதவர்கள், சீக்கியர்கள், தொழிலாளர்கள், விவசாயிகள், ஆலை முதலாளிகள், இந்திய சிவில் உத்தியோகஸ்தர்கள், ஏன்! சுதேச மன்னர்களும் கூடச் சுதந்திரத்தை விரும்புகிறார்கள். காலமாறுதலை மன்னர்கள் அறிகிறார்கள். முன்பு இருந்தது போல விஷயங்கள் போய்க்கொண்டிருக்க முடியாது. பிரிட்டிஷ் ஆதிக்கத்தை நிலைக்கச் செய்யும் ஒரு யுத்தத்திற்கு நாங்கள் உதவி செய்ய முடியாது. இந்தியா ஜனநாயகமற்ற நிலைமையில் இருக்க ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி ஆகிய தேசங்களில் எப்படி ஜனநாயகத்திற்காக நாங்கள் போராட முடியும்? நான் சீனாவைக் காக்க விரும்புகிறேன். சீனாவிற்கு எவ்வித கெடுதியும் சம்பவிப்பதை நான் விரும்பவில்லை. ஆனால், ஒத்துழைப்பதற்கு நாங்கள்

சுதந்திரம் பெற வேண்டும். அடிமைகள் பிறர் சுதந்திரத்திற்காகப் போராடுவதில்லை" என்றார்.

"முஸல்மான்களும் உங்களுடைய சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்து கொள்ளுவார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?" எனக் கேட்டேன்.

"ஆரம்பத்தில் ஒருவேளை வரமாட்டார்கள். ஆனால், இயக்கம் வெற்றிகரமாக நடப்பதைப் பார்த்ததும் அவர்களும் கலந்து கொள்ளுவார்கள்" என்றார் காந்திஜீ.

"இயக்கத்தில் தலையிடவோ, அல்லது அதை நிறுத்தவோ முஸல்மான்கள் பிரிட்டிஷாரால் உபயோகப் படுத்திக் கொள்ளப்பட மாட்டார்களா?" எனக் கேட்டேன்.

அதை ஒப்புக் கொள்ளும் முறையில் காந்திஜீ, "சந்தேக மன்னியில் முஸ்லிம் தலைவர்கள் அதற்கு முயற்சி செய்யலாம், அல்லது சர்க்காரும் முயற்சி செய்யலாம். ஆனால் கோடிக் கணக்கான முஸ்லிம்கள் சுதந்திரக் கோரிக்கையை எதிர்க்க வில்லை. எனவே சுதந்திரத்தை அளிக்கக்கூடிய எங்களுடைய முறைகளையும் அவர்கள் எதிர்க்க மாட்டார்கள். காங்கிரஸின் ஒரே லட்சியமாகிய இந்திய சுதந்திரத்திற்கு முஸ்லிம் பாமரமக்கள் அனுதாபம் காட்டுகிறார்கள். அவ்வுறுதியான பாறையின் மேல் இந்து-முஸ்லிம் ஒற்றுமை என்ற கோட்டையை எழுப்பலாம்." என்றார்.

எங்களுடைய சம்பாஷணையை மீண்டும் ஜனத் தொகை அதிகரிப்பு விஷயத்திற்குக் கொண்டுவரக் கடைசி முறையாக யத்தனித்தேன். பெருத்த முறையில் கைத் தொழில் திட்டம் கடைப் பிடிக்கப்படுமாயின், உண்மையில் அரசாங்கம்தான் அதை முன்னின்று நடத்த வேண்டும் என்பதைத்தான் அவர் கூறும்படி செய்ய முடிந்தது.

மாலையில் மகாதேவ தேசாயின் குடிசைக்குச் சென்று அவர் நூற்பதைக் கவனித்தேன். அவர் 'ஹரிஜன்' என்ற காந்திஜீயின் ஆங்கில வாரப் பத்திரிகையின் ஆசிரியர். காந்திஜீ தம் சுயசரிதம் எழுத இவர் உதவி புரிந்தார். தம் 25-வது வயதில் வக்கீல் தொழிலை விட்டதாகவும், அதுமுதல் சென்ற 25 ஆண்டுகளாகக் காந்திஜீயிடம் நெருங்கிய தொடர்பு வைத்துக்கொண்டிருப்பதாயும் அவர் கூறினார். 1939-க்குப் பிறகு மற்ற எந்த அன்னியரிடமும் நடத்திய பேச்சு வார்த்தைகளைக் காட்டிலும் காந்திஜீ என்னிடம் சம்பாஷித்தது அதி முக்கியமானது எனக் கூறினார். காந்திஜீ கூறும் ஒவ்வொரு விஷயத்தையும் அவர் ஒழுங்கான குறிப்புகள் எடுத்து வைக்கிறார்; என்னுடைய சம்பாஷணைகளைக் கூட அவர் குறித்து வைத்திருக்கிறார். நாங்கள் அங்கு உட்கார்ந்திருந்த பொழுது, நூல் நூற்றல் எவ்வளவு நிம்மதியையும், திருப்தியையும் கொடுக்கிற தென்பதை நான் அறிந்து கொள்ள முடிந்தது.

"சென்ற சில நாட்களாக நான் காந்திஜீ கூறுவதைக் கவனத்துடன் கேட்டேன்; ஒவ்வொரு பேட்டியின் முடிவிலும் அவருடைய வார்த்தைகளைக் குறித்து வைத்தேன்; பிறகு அதை மீண்டும் படித்து அதைப் பற்றி சிந்தித்துக் காந்திஜீயின் மகோன்னத செல்வாக்குக்குக் காரணத்தை அளவிட முயற்சித்தேன். அச் செல்வாக்கிற்கு முக்கிய காரணம் காந்திஜீயின் ஆர்வமே என்ற தற்காலிகமான ஒரு முடிவிற்கே வந்திருக்கிறேன்?" என்று நான் தேசாயிடம் கூறினேன்.

"அது சரியே" என்றார் தேசாய்.

"அவருடைய ஆர்வத்துக்கு அடிப்படையான காரணம் எது?" எனக் கேட்டேன்.

"மனிதனுக்குரிய ஆர்வங்களி லெல்லாம் உயர்ந்த

ஆர்வம், அது ஐம்புலனடக்கமே" என விளக்கினார் தேசாய்.

"ஆண் பெண் என்ற பால்வேற்றுமையை ஒட்டியதா" எனக் கேட்டேன்.

"ஆம், காமம், குரோதம், மோகம் அவற்றை ஒட்டியதே. தாம் தவறு செய்தால் அதை அவர் ஒப்புக் கொள்ளுவார். பலாத்காரம் தோன்றிவிட்டது என்ற காரணத்தினால் சட்டமறுப்பு இயக்க மொன்றை நிறுத்தினதால், பிறருடைய தவறுகளுக்குத் தாம் பொறுப்பு ஏற்றுக் கொண்டார். திருத்திக் கொள்ளுகிறார். காந்திஜீ பூர்ணமான கட்டுப்பாடுடையவர். இதுதான் அவரிடம் அதிகமான சக்தியையும் ஆர்வத்தையும் உற்பத்தி செய்கிறது" என்றார்.

மேலே நாட்டாரை விட இந்தியர்கள் அதிக உண்மையானவர்கள் என்ற உணர்ச்சி எனக்கு உண்டு. தம்மைக் குறித்து அவர்கள் உண்மையே பேசுகிறார்கள். தற்சோதனை புரிந்து தங்கள் குறைபாடுகளை உணரும் குணம் அவர்களிடம் இருக்கிறது.

ஜூன் 9, 1942

நாளைய தினம் ஹைதராபாத்துக்கு புறப்படுவதென நான் தீர்மானித்தேன். இது ஒரு சுதேச சமஸ்தானத் தலைநகரம். இங்கே உலகத்தின் மிகப் பெரிய பணக்காரரான நைஜாம், பிரிட்டிஷாரின் உதவியுடன் ஒருகோடி அறுபது லட்சம் ஜனங்களை ஆட்சி செய்கிறார். நான் சேவா கிராமத்தில் இன்னும் அநேக நாட்கள் தங்கலாம்; காந்திஜீயும் நேற்று அவ்விதம் தங்குமாறே என்னிடம் கேட்டுக் கொண்டார்; ஆனால் நான் இங்கு வந்தபொழுது இரண்டு மூன்று தினங்கள் தங்கும் நோக்கத்துடனேயே

வந்தேன்; எனவே இப்பொழுது நான் புறப்பட வேண்டியது தான். காலை 5½ மணிக்கு நான் க்ஷவரம் செய்து கொண்டு, காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு, காந்திஜீ மாம்பழம் உணவை சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது அங்கே போனேன். "ஒரு சமயம் நான் வங்காளத்திலே மிகக் கடுமையாக வேலை செய்து கொண்டிருந்த பொழுது, மாம்பழம் ஒன்றையே நான் உணவாகக் கொண்டேன்?" என்ருர்.

"ஓர் ஆங்கிலேயரோ, அமெரிக்கரோ கடுமையாக வேலை செய்துகொண் டிருந்தால் மாட்டுக் கறியை உண்டே காலங்கழிப்பார்" என்றேன்.

"அது தான் வித்தியாசம். காய்கறிகளில் பிரிட்டிஷாரிடம் பல வகைகள் இல்லை. எப்பொழுதுமே அவர்களுக்கு உருளைக்கிழங்கும், முட்டைக்கோசும் தான்" என்ருர் காந்திஜீ.

நாங்கள் பேசிக்கொண் டிருந்த பொழுது மகாத்மாவின் பேரன் கனு காந்தி எங்களைப் படமெடுத்தார்.

நாங்கள் நடக்க ஆரம்பித்தோம். "நீங்கள் உங்கள் பணியையும் உலகத்தையுமே பொருளாகக் கருதுவதைக் கண்டேன். உங்களையும் நீங்கள் பொருட்படுத்த வேண்டும். இது எனது வேண்டுகோள். இது ஒரு தனி மனிதரின் விஷயமன்று. அரசியல் விஷயமாகும். பெருவாரியான மக்களிடம் உங்களுக்குள்ள செல்வாக்குக்கு என்ன காரணமென நினைக்கிறீர்கள்?" எனக் கேட்டேன்.

அதற்குக் காந்திஜீ "நீங்கள் எத்தகைய உணர்ச்சியுடன் இக் கேள்வியைக் கேட்கிறீர்களென்பதை நான் அறிகிறேன். என்னுடைய செல்வாக்குக்குக் காரணம் நான் சத்தியத்தை நாடுவதிஞல் தான் என நினைக்கிறேன். அதுதான் எனது லட்சியமுமாகும்" என்ருர்.

"சத்தியத்தின் சக்தியை நான் குறைவாக மதிக்கவில்லை. ஆனால் இவ்வியாக்கியானம் போதாது என்றே எனக்குத் தோன்றுகிறது. ஹிட்லரைப் போன்ற தலைவர்கள் பல பொய்கள் கூறியதின் பேரிலேயே அதிகாரத்தை அடைந்தனர். இது, உண்மை சொல்வதின் மூலம் செல்வாக்குப் பெறமுடியாது என்ற அர்த்தத்தைக் கொடுக்கவில்லை. ஆயினும், உண்மை மட்டுமே எப்பொழுதும் இந்நாட்டிலோ, மற்ற நாடுகளிலோ யாருக்கும் பயன்படவில்லை" என்று வாதித்து, மேலும் தொடர்ந்து, "உங்களிடமோ அதிகார ஆடம்பரங்கள் இல்லை; உங்களுக்கு உதவியாக சர்க்காரோ போலீஸ் படையோ இல்லை; சடங்குகளோ கட்டுப்பாடான கூட்டமோ இல்லை. ஏனெனில் காங்கிரஸ் கட்டுப்பாடான நெருங்கிய ஒத்துழைப்புடைய ஸ்தாபனமாகத் தெரியவில்லை. அப்படியிருக்கக் கோடிக் கணக்கான மக்களை எப்படி நீங்கள் ஆட்டுவிக்கின்றீர்கள்? அவர்களுடைய சுகங்களையும், காலத்தையும், ஏன்! உயிரையும் கூடத் தியாகம் செய்யுமாறு தூண்ட உங்களால் எப்படி முடிகிறது?" எனக் கேட்டேன்.

"சத்தியம் என்பது வெறும் வார்த்தைகளால் அமைந்த விஷயம் அல்ல. அது வாழ்க்கையோடு ஒட்டியது எனக் கூறி அவர் நிறுத்தி விட்டார். அவர் நடத்தும் எளிய வாழ்வைப் பற்றி நான் சிந்திக்குமாறு அவர் கூறுவது போன்ற உணர்சி எனக்கு உண்டாயிற்று. "அது உண்மைதான். என்னிடம் அதிகமான பரிவாரங்கள் இல்லைதான். என்னுடைய கல்வியும் உயர்ந்ததல்ல. அதிகமாகப் படிப்பதுமில்லை" எனக் கூறினார்.

"நீங்கள் சுதந்திரத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்ததும் அது பல இந்தியர்களது ஹிருதயத்தில் அவர்கள் விரும்பும் இன்னிசை போல் பாய்கிறதல்லவா? பாடகன்

ஒருவன் சபையோரைத் திருப்தி செய்ய ஏதோ செய்கிருன். இந்தியர்கள் கேட்க விரும்பும் இசையை நீங்கள் பாடுகிறீர்கள். ஜனங்கள் தாங்கள் அடிக்கடி கேட்கும் தங்கட்கு விருப்பமான ஆலாபனைக்கு கைகொட்டி ஆர்ப் பரிப்பதை நான் பார்த்திருக்கிறேன். பிரசங்கத்தைக் கேட்கும் சபையோர் விஷயம் தங்கள் கொள்கைக்கு ஒத்ததாக இருப்பின் கைதட்டி ஆர்ப்பரிக்கிருர்கள். எனவே உங்கள் மக்கள் நீங்கள் எதைச் சொல்ல வேண்டும், செய்யவேண்டும் என்று விரும்புகிருர்களோ, அதையே நீங்கள் சொல்லிச் செயலில் இறங்கும் காரணத் திஞலா?" எனக் கேட்டேன்.

"ஆமாம், அது அப்படியும் இருக்கலாம். பிரிட்டிஷாரைப் பொறுத்த வரையில் நான் ராஜ விஸ்வாசம் உடையவனுகவே யிருந்தேன். பின்புதான் நான் ஒரு கலகக்காரன் ஆனேன். 1896-ம் வருடம் வரை நான் ராஜவிஸ்வாசியாகவே யிருந்தேன்" எனக் கூறிஞர்.

"ஏன்! 1914 முதல் 1918 வரையில் கூட நீங்கள் ராஜ விஸ்வாசியாக இருக்கவில்லையா?" எனக் கேட்டேன்.

"ஆம், ஒருவிதத்தில் அப்படித்தான்" என அவர் ஒப்புக் கொண்டார். "ஆனல், உண்மையில் அப்படியல்ல. 1918-லேயே இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் ஆட்சி, அந்நியர் ஆட்சியென்றும், அது முடிவுற வேண்டுமென்றும் நான் கூறியிருக்கிறேன்" என்று சொல்லிச் சிறிது நேரம் மௌனமாக யிருந்தார். நாங்கள் மேல்நோக்கி மெதுவாக நடந்துகொண் டிருந்தோம். அவர் முடிவாக, "பிரிட்டிஷார் வெளியேற வேண்டுமென்று வற்புறுத்த நான் தீர்மானித்ததற்கு ஹேதுவாயிருந்த ஒரு சம்பவத்தை உங்களுக்குக் கூறுகின்றேன். அது 1916-ல் நடந்தது. நான் லக்ஷ்மணபுரியில் காங்கிரஸ் வேலைகளைச் செய்து கொண்டு இருந்தேன். இந்தியாவிலுள்ள இதர விவசாயி

களைப் போலவே ஏழ்மையும் உலர்ந்த சரீரமும் உடைய விவசாயி ஒருவன் என்னிடம் வந்தான். 'என் பெயர் ராஜ்குமார் சுக்லா. நான் சம்பரான் ஜில்லாவைச் சேர்ந்தவன். என்னுடைய ஜில்லாவுக்கு உங்களை அழைத்துப் போக விரும்புகின்றேன்' என்று அவன் கூறினான் அவன் தன்னுடன் வசிக்கும் விவசாயிகளின் துன்பங்களை விளக்கிக் கூறினான். லக்ஷ்மணபுரியிலிருந்து நூற்றுக் கணக்கான மைல் தூரமுள்ள சம்பரான் என்ற இடத்துக்கு நான் வரவேண்டுமெனப் பிரார்த்தித்தான். அவன் அதிக அழுத்தமாக வற்புறுத்திக் கெஞ்சியதால் நான் வருவதாக உறுதியளித்தேன். ஆனால் அவன் தேதியைக் குறிப்பிடுமாறு கேட்டான். அது என்னால் செய்ய முடியாமலிருந்தது. பல வாரங்களாக ராஜ்குமார் சுக்லா இந்தியாவின் எப்பகுதியில் நான் போன போதிலும் என்னைப் பின்தொடர்ந்தான். நான் எங்கு தங்கினேனோ அங்கேயே அவனும் தங்கினான். முடிவாக 1917-முற் பகுதியில் நான் கல்கத்தாவில் இருக்க நேர்ந்தது. ராஜ்குமார் என்னைப் பின் தொடர்ந்தான். கல்கத்தாவிலிருந்து சம்பரானுக்கு ரயிலில் என்னை அழைத்துப் போவதாக வற்புறுத்தினான். சம்பரான் அவுரி பயிரிடப்படும் ஒரு ஜில்லா. ஆயிரக்கணக்கான விவசாயிகளிடம் நான் பேச வேண்டுமெனத் தீர்மானித்தேன்; ஆனால் பிரச்னையின் எதிர்வாதத்தைக் கேட்பதற்கு அப்பகுதியிலுள்ள பிரிட்டிஷ் கமிஷனரையும் நான் பார்க்கத் தீர்மானித்தேன். நான் கமிஷனரைப் பார்த்த பொழுது அவர் என்னை மிரட்டி உடனே அவ்விடத்தை விட்டுப் போகுமாறு எனக்கு யோசனை கூறினார். இந்த யோசனையை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. யானையின் பேரில் ஏறி கிராமம் ஒன்றை நோக்கிப் போனேன். ஒரு போலீஸ் தூதன் எங்களைத் தொடர்ந்து வந்து பிடித்து சம்பரானை விட்டுப்

போகுமாறு எனக்கு உத்தரவொன்றைத் தந்தான். நான் தங்கியிருந்த வீட்டுக்குப் போலீஸார் என்னை உடனழைத்துப் போக அனுமதித்தேன். அங்கே போனதும் சத்தியாக்கிரகம் செய்யத் தீர்மானித்தேன். அந்த ஜில்லாவை விட்டு நான் போகமுடியாது. ஏராளமான ஜனங்கள் அவ்வீட்டைச் சுற்றிக் கூடிவிட்டனர். அக்கூட்டத்தை ஒழுங்குபடுத்துவதிலே போலீஸாருடன் நானும் ஒத்துழைத்தேன். ஒரு விதமான நேச மனப்பான்மை எனக்கும் போலீஸுக்கு மிடையே எழுந்தது. சம்பராணில் அன்றைய தினமானது என் வாழ்க்கையிலேயே மறக்க முடியாத சுபதின மாகிவிட்டது. நான் விசாரணை செய்யப்பட்டேன். வழக்கை ஒத்திப் போடுமாறு நீதிபதியிடம் சர்க்கார் வக்கீல் வாதாடினார்; ஆனால் நான் தொடர்ந்து நடத்தக் கேட்டுக் கொண்டேன். சம்பராணை விட்டுப் போகவேண்டுமென்ற உத்தரவை மீறினேன் என்பதைப் பகிரங்கமாகக் கூற நான் விரும்பினேன். உள் நாட்டு நிலைமைகளைப் பற்றிய செய்திகளைச் சேகரிக்கவே நான் வந்ததாகவும், எனவே என்னுடைய மனசாட்சியின் கட்டளை என்ற உயர்ந்த சட்டத்திற்கு நான் கீழ்ப்படிந்து நடக்கின்றவனாகையால், பிரிட்டிஷ் சட்டத்தை மீறவேண்டி யிருந்தது என்றும், நான் அவரிடம் கூறினேன். பிரிட்டிஷாருக்கு எதிராக நான் செய்த முதல் சட்டமறுப்பு இதுவே. அமைதியான காரியமொன்றைச் செய்யப்போன இடத்தில், எந்த ஆங்கிலேயனுக்கும் நான் என்னுடைய தேசத்தின் எந்த பாகத்தையும் விட்டுப் போகுமாறு என்னிடம் கூற உரிமையில்லை, என்ற கொள்கையை நிலைநிறுத்துவதே எனது ஆசை. நான் குற்றவாளி என்று முறையிடுவதை நிறுத்துமாறு சர்க்கார் என்னைப் பன்முறை கெஞ்சிக் கேட்டது. முடிவில் நீதிபதி வழக்கை முடித்து விட்டார். சட்ட

மறுப்பு வெற்றி பெற்றது. இந்தியா சுதந்திரம் பெறுவ தற்கு ஒரு சாதனமாக இது ஆனது" என்று விவரமாகக் கூறினர்.

"இந்தியாவில் உங்கள் செல்வாக்கின் ரகசியத்தைத் துலக்கும் காரணங்களில் இது ஒன்ருயிருக்கலாம்" என்றேன்.

அவர் இடைமறித்து, "நான் மிக சாதாரணமான காரியத்தைத் தான் செய்தேன். பிரிட்டிஷார் என்னுடைய சொந்த தேசத்தில் 'இங்கு போ, அங்கு போ' என் றெல்லாம் எனக்கு உத்தரவு அளிக்கக் கூடாது என்று அறிவித்தேன்" என்ருர்.

"அது சாதாரணமானது தான். ஆனால், நீங்கள் தான் அதை முதலில் செய்தீர்கள். இது கொலம்பஸும் கோழி முட்டையும் என்ற கதையை ஒத்திருக்கிறது" என்று உரைத்தேன்.

"அது என்ன?" என்று கேட்டார்.

'*கொலம்பஸும்-முட்டையும்' என்ற கதையை நீங் கள் கேட்டதே இல்லையா?" என்று நான் காந்திஜீயைக் கேட்டேன்.

---

* கொலம்பஸ் என்ற ஸ்பானியர் அமெரிக்காவைக் கண்டு பிடித்து நாடு திரும்பியதும் அவருக்குப் பிரமாத வரவேற்பும் பரிசு களும் வழங்கப்பட்டன. ஆனால் ஒரு சாரார் கொலம்பஸ் பிரமாத மாக ஒன்றும் சாதித்துவிடவில்லை, ஏதோ குருட்டுப் பூனை விட்டத் தில் தாவினது போல் மேற்கேயே பிரயாணம் செய்து இந்தியா விற்கு வழிகண்டு பிடிக்க முயற்சித்த அவரை அமெரிக்கா குறுக் கிட்டது என்று ஏளனம் செய்தனர். உடனே ரோசம் கொண்ட கொலம்பஸ் ஒரு பொதுக் கூட்டத்தில் ஒரு கோழி முட்டை ஒன்றை எடுத்து அதை நட்டமாக யாராலாவது நிறுத்த முடியுமா எனச் சவால் விடுத்தார். ஒருவராலும் முடியவில்லை. பின்னர் அவர் முட்டையில் லேசாகத் தட்டிவிட்டு அதை நிறுத்தினர். நின்று

"இல்லை, எனக்குச் சொல்லுங்கள்" என்றார்.

நான் அவருக்கு அக்கதையைக் கூறினேன். அவர் சிரித்தார். "அது ரொம்ப சரி. என்னுடைய சொந்த தேசத்திலே எங்கு வேண்டுமாயினும் அமைதியுடன் போவதற்கு எனக்கு உரிமையுண்டு என்று கூறுவது மிகச் சாதாரண விஷயமே. ஆனால், இதற்கு முன்பு இப்படி யாரும் சொல்லியதில்லை" எனக் கூறினார்.

நாங்கள் காந்திஜீயின் வீட்டிற்குத் திரும்பி விட்டோம்.

3-மணிக்கு என் வழக்கமான பேட்டிக்காக நான் வந்தேன். நேருவுடன் ஒரு மணி நேரமாகப் பேசிக் கொண்டிருந்த காந்திஜீ, பத்து நிமிஷங்கள் காத்திருக்க வேண்டியதற்காகத் தம்மை மன்னிக்குமாறு என்னிடம் கேட்டுக் கொண்டார். அவர் கக்கூஸுக்குப் போக வேண்டுமென விளக்கினார். அவர் திரும்பி வந்ததும், நார் படுக்கையின் மீது சாய்ந்தார். அன்று மெயிலில் வந்த கடிதமொன்றை அவருடைய காரியதரிசிகளுள் ஒருவர் அவரிடம் கொடுத்தார். காந்திஜீ அதை வாங்கிப்படிக்கும் போது புன்முறுவல் பூத்தார். பின் இரண்டு பக்கங்களைப் புரட்டினார்.

அதில் பாடல்கள் உள்ள மடிக்கப்பட்ட தாள் ஒன்று இருப்பதைக் கண்டேன். அவ்வறையிலிருந்த குர்ஷித்திடம் திரும்பி அவர் சிரித்துக்கொண்டே "எங்கே எனக்காக இதைப் பாடு" என்றார். அவள் சிலவற்றை மெல்லிய குரலில் பாடினாள். மேலும் சில பாடல்

---

விட்டது. அவர் செய்த வேலையை யாரும் செய்திருக்கலாம். ஆனால் அவர் மூளைக்கு மட்டுமே அது எட்டியது. அதே போல் யாரும் ஐரோப்பாவிலிருந்து மேற்கு முகமாகப் போய் அமெரிக்காவைக் கண்டு பிடித்திருக்கலாம். ஆனால் அவருக்குத்தான் அந்த யோசனை தோன்றியது.

களைப் படித்தாள். பிறகு அக்கடிதத்தையும், பாடல்களை யும் தருமாறு நான் கேட்டேன். அவள் அவைகளை என்னி டம் கொடுத்தாள். நான் அவைகளை என்னுடன் அமெரிக் காவுக்கு எடுத்து வந்தேன். அக் கடிதத்தின் தேதி, "ஐக்கிய அமெரிக்கா, ஹாலிவுட், கலிபோர்னியா, 1535, நார்த்-ஹோபர்ட் பூல்வார், மார்ச்சு 10, 1942" என்று இருந்தது. அதன் விலாசம், "மகாத்மா காந்தி, இந்திய தேசீய காங்கிரஸ், இந்தியா" என்று இருந்தது. மரியஸ் மன்னிக் என்பவரால் கையெழுத்து இடப்பட்டிருந்தது. கடிதத்தின் வாசகம்: "எனது அன்பான மகாத்மா காந்தி, இப்பாடலை நான் ஜனநாயக ஆர்வத்திலே உங்களுக்கு அனுப்பியிருக்கின்றேன்; நீங்கள் அதே முறையில் இதைப் பெறுவீர்களென நம்புகின்றேன். உங்களைக் கொண் டாடுபவர்களில் ஒருவனாக நான் நீண்ட காலமாக இருக் கின்றேன். உங்களுடைய மிக அன்பான மரியஸ் மன்னிக்" என்று இருந்தது. பாட்டின் பல்லவி "அச்சு நாடுகளை நாம் அடிப்போம்" என்று இருந்தது. அது ஜெனரல் டக்ளஸ் - மக் - ஆர்தருக்கும், அவருடைய படைக்கும், அர்ப்பணம் செய்யப்பட்டிருந்தது. பாட்டு பின் வருமாறு:—

"எனவே கொடிய அச்சு நாட்டை அடிக்க
நம் கோடாலிகளைத் தீட்டுவோம்.
நம்மைத் துன்புறுத்தும் எதிரியை நிறுத்த
நம் நம்பிக்கை, உழைப்பு, வரிகளை உதவவேண்டும்.
ஆகவே நம் கோடாலிகளைத் தீட்டி கொடிய
அச்சு நாட்டாரை அடிப்போம்,
உலக முற்றிலும் கொடுங்கோன்மை மறையும் வரை."

சிரிப்பு ஓய்ந்ததும் காந்திஜீ என்னிடம் திரும்பி, "இப்போது சுடுங்கள்" என்றார்.

"காந்திஜீ! அது ஹிம்சை யல்லவா?" என்றேன்.

"உங்களுக்குப் பலாத்காரத்தில் ஆட்சேபணை யுண்டா?" எனக் கேட்டார்.

"ஆனால், நான் பலாத்காரத்தை ஆதரிப்பவனா, எதிர்ப்பவனா என்பதைக் குறித்து உங்களிடம் நான் எதுவுமே சொல்லவில்லையே!" என்றேன்.

"நீங்கள் எனக்குக் கூறவேண்டிய அவசிய மில்லை, உங்களைப் பார்த்து நான் தெரிந்து கொள்ளுகிறேன்" என்று சிரித்துக் கொண்டே சொன்னார்.

"உங்களுடைய ஒத்துழையாமை இயக்கம், கடந்த வருடங்களில் சில சமயம் நடந்ததைப் போல, பலாத்காரப் பாதைக்கு நழுவிவிட்டால் நீங்கள் இயக்கத்தை நிறுத்தி விடுவீர்களா? அதற்கு முன் அப்படித்தான் செய்தீர்கள் அல்லவா?" என்று நான் கேட்டேன்.

அதற்கு அவர், "இயக்கத்தை நிறுத்தும்படி எந்த சந்தர்ப்பமும் நேராதென இப்பொழுதைய எனது மனோ நிலையில் நான் கூறுவது தவருகவே இருக்கும். ஆயினும் நான் முன்பு அதிக ஜாக்கிரதையுடன் இருந்தேன். அப்பொழுது என்னுடைய சொந்தப் பயிற்சிக்கும், எனது கூட்டாளிகளின் பயிற்சிக்கும் அது அவசியமாக இருந்தது. ஆனால் நான் முன் நடந்து கொண்டதைப் போல இப்பொழுது நடந்துகொள்ள மாட்டேன்" என்றார்.

"சீக்கிரமாக நான் உங்களுடைய கிராமத்திலிருந்து போவதால், உங்களுடைய எண்ணங்களை நான் சரியாகப் புரிந்து கொண்டேனு என்று நிச்சயப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன். நீங்கள் கேட்பதற்கும் பிரிட்டிஷ் அதிகாரிகள் அளிக்கத் தயாராய் இருப்பதற்கும் இடையில் ஒரு சமரஸத்துக்கு எந்த விதமான சந்தர்ப்பமும் இருக்கின்றதா? சில மாறுதல்களையுடைய கிரிப்ஸ் திட்டத்தை நீங்கள் ஒப்புக் கொள்வீர்களா?" எனக் கேட்டேன்.

" இல்லை, கிரிப்ஸ் திட்டத்தை ஒட்டியதாக ஒன்றுமே இருக்கக் கூடாது. நான் அவர்களுடைய பூர்ணமான ஸ்திர மான வாபஸையே விரும்புகிறேன். நான் எப்போதும் சமாதானப் பிரியன்; ஏனெனில், நான் செய்வது சரியே யென்று உறுதியுடன் எப்பொழுதும் இருப்பதில்லை. ஆனால் இப்போதோ என்னிடம் விட்டுக் கொடுக்க முடியாத ஓர் எதிர்காலந்தான் மேலோங்கி நிற்கிறது. வாபஸ் ஆவதற்கும், வாபஸாகாமல் இருப்பதற்கு மிடையே, நடுவில் வேறொரு சமாதானத்திற்கும் இட மில்லை. உண்மையில் பிரிட்டிஷார் எல்லாரும் போய்விட வேண்டுமென்று நான் கூற வில்லை. பிரிட்டிஷாரிடமிருந்து இந்திய மக்களுக்கு அரசியல் அதிகாரமே மாற வேண்டு மென நான் வற்புறுத்துகிறேன் " என்றார் காந்திஜீ.

"காலவரையறை எப்படியோ? நீங்கள் உங்கள் சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பித்ததும் பிரிட்டிஷார் பணிந்து வந்தால் அரசியல் அதிகாரத்தை அவர்கள் உடன டியாக மாற்ற வேண்டுமா?" எனக் கேட்டேன்.

"பிரிட்டிஷார் அதை இரண்டு நாட்களிலோ அல்லது இரண்டு வாரங்களிலோ கொடுக்க வேண்டு மென்பதில்லை. ஆனால், அது ஸ்திரமான, பூர்ணமான அரசியல் வாபஸாக இருக்க வேண்டும்" என்றார்.

"யுத்தத்திற்குப் பிறகு பூரணமான வாபஸ் செய் கிறோம் என்று பிரிட்டிஷார் சொல்வார்களேயானால்?" எனக் கேட்டேன்.

"அது முடியாது. அப்படியானால் என் திட்டம் அதன் மதிப்பை அதிகமாக இழந்துவிடுகிறது. இப்பொழுதே அவர்கள் போவதை நான் விரும்புகிறேன். அதன் காரண மாக நான் சீனாவுக்கும் ரஷ்யாவுக்கும் உதவிசெய்யக்கூடும். இன்றைய தினம் அவைகளுக்கு எனது பூர்ண பலத்தையும் அளிக்க முடியாத நிலைமையில் நான் இருக்கிறேன். என்

னுடைய தயாள குணந்தான் இம்மாதிரியான திட்டத்தை சமர்ப்பிக்கும்படி செய்தது. தற்சமயம் இந்தியா என் கண் பார்வையிலிருந்து மறைகிறது. இந்தியாவுக்கு மட்டும் நான் சுதந்திரத்தை ஒரு போதும் விரும்பவில்லை. கிணற்றுத் தவளையின் செய்கையை நான் பின்பற்ற விரும்பவில்லை" எனக் கூறினர்.

"இம்முறையில் நீங்கள் இதற்குமுன் நினைக்க வில்லை" எனத் தெரிவித்தேன்.

அதற்கு அவர் ."இம்முழுக் கருத்தும் என்னுள் மலர்ந்து கொண்டேயிருக்கிறது. பிரிட்டிஷாரை வெளி யேறும்படி கூறிய ஆதி நோக்கமானது என்னிடமிருந்து திடீரென்று வெளிப்பட்டது. கிரிப்ஸ் திட்டத்தின் கேலிக் கூத்துத்தான் அக் கருத்தைத் தூண்டியது. அவர் சென்றதும் இக் கருத்தானது என்னை விடாமல் பற்றிக் கொண்டது" என விவரித்தார்.

"சரியாக எப்பொழுது இக்கருத்து உங்களுக்கு உதித்தது?" எனக் கேட்டேன்.

"கிரிப்ஸ் புறப்பட்டவுடனே. இந்தியாவின் பிரிட்டிஷ் நண்பரான ஹொரேஸ்-அலெக்ஸாண்டர் என்பவர் எனக்கு எழுதிய கடிதத்திற்கு நான் பதில் எழுதினேன். அதுமுதல் இக் கருத்துடையவனாகவே நான் இருக்கிறேன். பிறகு பிரசாரம் செய்ய ஆரம்பித்தேன். இறுதியாக, ஒரு தீர்மானமும் தயார் செய்தேன். கிரிப்ஸ் திட்டத்தின் தோல்விக்கு பதில் அளிப்பது அவசியம் என்பது தான் எனது முதல் உணர்ச்சி. கிரிப்ஸ் தூதில் விமோசன மளிக்கக் கூடிய அம்சம் ஒன்றுமே யில்லை என்றால் அது எவ்வளவு கொடிய விஷயம். ஆகவே நான் பிரிட்டி ஷாரைப் போகச் சொன்னால் என்ன என்ற எண்ணம் உதித்தது. நாங்கள் மிகப் பிரமாதமாக வைத்திருந்த நம் பிக்கை நசுக்கப்பட்டதினால் இவ்வெண்ணம் கிளம்பியது.

ஜவாஹர்லாலும் மற்றவர்களும் கிரிப்ஸைப் பற்றிச் சிலா கித்துப் பேசக் கேட்டோம். ஆயினும், தூது சாரமற்ற தாய் விட்டது. இந் நிலைமைக்கு எப்படிப் பரிகாரம் தேடு வது என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். பிரிட்டிஷார் இங்கிருப்பது எங்களுக்கு இடையூருக இருக்கிறது. எனது மௌன தினமாகிய திங்கட்கிழமை யில் தான் இவ்வெண்ணம் என்னுள் உதித்தது. அம் மௌனத்திலிருந்து நாலுவித எண்ணங்கள் தோன்றி என்னை ஆட்கொண்டன. மௌனமும் என்னை ஆட் கொண்டது. ருஷ்யா சீனு இந்தியாவிற்காக நான் வேலை செய்யவேண்டு மென்பதை யறிந்தேன். சீனுவிடம் என் மனம் செல்லுகிறது. சியாங்-கே-ஷேக் இடமும், அவருடைய வசீகரமான வாழ்க்கைத் துணைவியிடமும், 5-மணி நேரம் நான் பேசியதை என்னுல் மறக்க முடியாது. சீனுவுக்காகவாவது நான் இதைச் செய்தாக வேண்டும். உலகத்தின் துக்கத்தை நான் எனது எண்ணத்தில் சுமக் கிறேன்" என்று காந்திஜீ விளக்கினுர்.

"யுத்தம் முடியும் வரை ஏன் காத்திருக்கக் கூடாது?" எனக் கேட்டேன்.

"ஏனெனில், நான் இப்பொழுதே காரியம் செய்து யுத்தம் நடந்துகொண் டிருக்கும்போதே உபயோக மாயிருக்க விரும்புகிறேன்" என விடை பகன்ருர்.

"இப் போராட்டத்தை நடத்துவதற்கு எந்த ஸ்தாபனமாவது வைத்திருக்கின்றீர்களா?" என வினவி னேன்.

"ஸ்தாபனம் காங்கிரஸ் கட்சிதான். ஆனுல், அது என்னைக் கைவிடுமாயின், நான் எனது சொந்த ஸ்தாப னத்தை வைத்திருக்கின்றேன். அது நான் தான். நான் ஒரு கருத்தால் ஆட்கொள்ளப்பட்ட மனிதன். அப்படிப்

பட்டவனுக்கு ஒரு ஸ்தாபனம் கிடைக்க வில்லையானால் அவனே ஒரு ஸ்தாபனமாகிறான்" எனப் பதில் சொன்னார்.

"தேசத்தின் இப்பொழுதைய நிலையில் உங்களுக்குப் போதுமான நம்பிக்கையிருக்கின்றதா? தேசம் உங்களைப் பின்பற்றுமா? இச் சட்டமறுப்பு இயக்கத்தில் சேர்வதால் மக்கள் கடுமையான தியாகங்களைச் செய்ய வேண்டியிருக்கலாம். உங்களுடைய எண்ணத்தை யாராவது எதிர்த்திருக்கிறார்களா?" என நான் கேட்டேன்.

அதற்கு அவர், "இன்று நான் ராஜகோபாலாச்சாரியாரிடமிருந்து கடிதம் ஒன்று பெற்றேன். அவர் ஒருவர் தான் எதிர்க்கிறார். அவர் கொள்கைகளை நான் அறிவேன். ஆனால், பாகிஸ்தானை ஒழிப்பதின் பொருட்டு அவர் முஸ்லிம் லீகுடன் வேலை செய்ய விரும்புகிறபொழுது, முஸ்லிம் லீக் எவ்வாறு தம்முடன் வேலை செய்யுமென்று அவர் எதிர்பார்க்கிறார்?" என்றார் காந்திஜீ.

"ஜின்னா பாகிஸ்தானிலேயே மனநாட்டம் வைத்திருக்கிறார் என்றா நீங்கள் நினைக்கின்றீர்கள்? ஒருகால் அது பேரம் பேசும் தந்திரமாயிருக்கலாம். இந்து—முஸ்லிம் ஒற்றுமை கைகூடியதும், இதை அவர் விட்டு விடலாம்" என்றேன்.

"உங்களுக்கு நான் முன் கூறியபடி, பிரிட்டிஷார் வெளியேறினால் தான், அவர் அவ் வெண்ணத்தை விடுவார்; ஏனெனில் அதன் பிறகு பேரம் செய்வதற்கு யாரும் இருக்கமாட்டார்கள் அல்லவா?" எனக் காந்திஜீ விளக்கினார்.

"ஆகவே, நீங்கள் எப்பொழுது இயக்கத்தை ஆரம்பிக்கப்போகிறீர்கள் என்பதை முன்னதாகவே பிரிட்டிஷாருக்கு அறிவித்துவிட விரும்புகிறீர்கள் அல்லவா?" என்று வினவினேன்.

"ஆம், சந்தேகமில்லாமல்" என உறுதிப்படுத்தினார்.

"மிக முன்னதாகவே தெரிவிக்காமல் இருப்பது நல்லதுதான்" எனக் கூறிச் சிரித்தேன்.

"ஏதாவதறிந்து ஜாடையாகக் கூறுகின்றீர்களா?" எனக் கூறி அவரும் சிரித்தார்.

"அப்படி யில்லை" என்றேன்.

"போதிய காலத்திலே அதை அவர்கள் அறிவார்கள்" என அவர் உறுதியுடன் கூறினார்.

"நீங்கள் இதைச் சரித்திர நோக்குடன் கவனிப்பீர்களாயின், நீங்கள் செய்வது நவீனமானதும் குறிப்பிடத்தக்கதுமான விஷயமாகும். ஒரு சாம்ராஜ்யத்துக்கு முடிவுகட்டும் காரியத்தை அல்லவா நீங்கள் செய்கிறீர்கள்" என்றேன்.

"அதை ஒரு சிறு குழந்தை கூடச் செய்யக் கூடும். ஜனங்களின் இயற்கையறிவைத் தூண்டி அவர்களை நான் எழுப்பிவிடலாம்" என்றார்.

"உலகில் உங்கள் செய்கையின் எதிரொலி எப்படி இருக்கக்கூடுமென்று அறிய நாம் முயற்சிப்போம். சீனுருஷ்யா போன்ற உங்கள் நண்பர்களே இச்சட்ட மறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டாமென உங்களிடம் கேட்கலாம்" எனத் தெரிவித்தேன்.

"அவர்கள் என்னை வேண்டிக் கொள்ளட்டும். நான் மனமாற்றமடையலாம். ஆனால், உரிய காலத்திலே நான் அவர்களுக்கு வேண்டுகோள் விடுக்க இயலுமாயின், அவர்களை நான் மாற்றி விடலாம். இங்கே அதிகாரத்தில், உள்ளவர்களிடம் உங்களுக்குத் தொடர்பு இருக்குமாயின் இதை அவர்களிடம் கூறுங்கள். நீங்கள் அருமையாக எல்லோருக்கும் செவிசாய்க்கிறீர்கள். உங்களிடம் மோசநாசம் ஏதுமில்லை. அவர்களுடன் இதை விவாதியுங்கள். என் திட்டத்தில் ஏதாவது தவறு இருக்கு

மாயின் அவர்கள் அதை எனக்குக் காண்பிக்கட்டும்" என்றார்.

"வைஸ்ராயிடம் இதைக் கூறுவதற்கு நான் உங்களுடைய அனுமதி பெற்றவனா?" எனக் கேட்டேன்.

"ஆம், உங்களுக்கு நான் அனுமதி தருகின்றேன்" என்று உறுதியுடன் கூறி, "அவர் என்னிடம் பேசட்டும்; நான் மனமாற்றமடையலாம். நான் நியாய வாதத்தை ஒப்புக் கொள்ளுபவன். சீனாவுக்கு இன்னல் விளைவிக்கும் எக்காரியத்தையும் செய்ய நான் விரும்பமாட்டேன்" என்றார்.

"அல்லது அமெரிக்காவுக்கோ?" எனக் கேட்டேன்.

"அமெரிக்கா புண்படும் ஆயின், அது ஒவ்வொருவரையும் புண்படச் செய்யும்" என்றார்.

"உங்களுடைய மனப் போக்கைப்பற்றி ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டிடம் அறிவிப்பதை நீங்கள் விரும்புகின்றீர்களா?" எனக் கேட்டேன்.

"ஆம், நான் யாரிடமும் வேண்டுகோள் விடுக்க விரும்பவில்லை. ஆனால், என்னுடைய திட்டங்கள், கொள்கைகள், சமாதான மனப்பான்மை எல்லாவற்றையும் ரூஸ்வெல்ட் அறிந்துகொள்ள வேண்டுமென்று விரும்புகின்றேன். நியாயமான விவாதத்தால் என் மனம் திருப்பப்படவேண்டு மென்று நான் விரும்புவதாய் உங்கள் ஜனாதிபதியிடம் கூறுங்கள்" என்றார்.

"நீங்கள் இயக்கத்தை ஆரம்பிக்கும் பொழுது கடுமையான நடவடிக்கைகளை எதிர்பார்க்கின்றீர்களா?" எனக் கேட்டேன்.

"ஆம், நான் அதை எத்தினத்திலும் எதிர்பார்க்கின்றேன். அதற்கு நான் தயார். நான் கைது செய்யப்படலா மென்பது எனக்குத் தெரியும். அதற்கும் நான் தயார்" எனப் பதிலளித்தார்.

காந்திஜீயின் காரியதரிசியான மகாதேவதேசாய் பிற்பகலில் என்னைப் பார்க்க வந்தார்; காந்திஜீயினது சுய சரிதத்தின் பிரதி ஒன்றை எனக்குக் கொண்டு வந்தார். நான் போன பிறகு என்ன செய்வேன் என்பது பற்றி அவரிடம் காந்திஜீ பேசியதாகவும், காந்திஜீயுடன் நான் சம்பாஷித்த எப் பகுதியையும் வைஸ்ராய்க்கோ, ரூஸ்வெல்ட்டுக்கோ நான் தெரியப்படுத்தலாமென்று அவரும் காந்திஜீயும் இசைந்ததாகவும் அவர் என்னிடம் கூறினர். காந்திஜீ வைஸ்ராயுடன் நிலைமையை விவாதிக்க விரும்புவதாகத் தேசாய் அறிவித்தார்.

நான் புறப்பட்டுப் போனதும் இரண்டு விஷயங்கள் நடக்கும் எனக் காந்திஜீ இன்று போஜன வேளையில் கூறினர். அதாவது, "தான் கவனிப்பதற்கு ஒருவருமில்லையே யென்று குர்ஷித்பென் நீங்கள் இல்லாமையை உணர்வாள். உங்களுக்காக ஒதுக்கப்பட்ட மாலை நேரத்தில், நீங்கள் இல்லாமையை நான் உணர்வேன்" என்ருர். அதிகநாள் தங்குவதற்கு எனக்கு ஆசைதான் என்றும், ஆயினும் அவருடைய தீர்மானமான சட்டமறுப்பு இயக்கத்தை நடைமுறையில் கொண்டுவருவதற்காக வார்தாவில் கூடவிருக்கும் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்ட சமயத்தில், நான் ஒருகால் திரும்பிவரலாம் என்றும் அவரிடம் கூறினேன். "அது இரண்டு வாரத்தில் கூடலாம்" எனக் காந்திஜீ எனக்கு அறிவித்தார். "ஆனல், நீங்கள் எப்பொழுது விரும்பினலும் வாருங்கள்" என்ருர். பிறகு நான் சேவாகிராமத்தில் சுகமாகத் தூங்கினேனு எனக் கேட்டார். சென்ற பல வருடங்களில் தூங்கியதைவிட மிக நன்ருகவே இங்கே தூங்கினேன் எனப் பதில் உரைத்தேன்.

"வானவெளியில் தூங்குவது நல்லது. மிக அருமையான காரியம். ஆனல் ருஷ்யாவிலே இது முடியாது

என்று நான் நினைக்கின்றேன்" எனக் காந்திஜீ கூறினர். ருஷ்யாவின் சில பகுதிகளில் அதிக உஷ்ணமேயிருக்கு மென்று நான் அவரிடம் கூறினேன்.

"அப்படியா! ருஷ்யாவில் எப்பொழுதுமே குளிராக இருக்கு மென்று நான் எண்ணினேன்" என்று வியப் புடன் கூறினர்.

நான் விருந்தினர் விடுதியில் குர்ஷித், நேரு ஆகி யோருடன் உட்கார்ந்திருந்தேன். அவ்விருவரும் பன் முறை இந்தியச் சிறைச்சாலைகளில் இருந்திருக்கின்றனர். சிறை வாழ்வைப் பற்றிச் சொல்லுமாறு அவர்களைக் கேட்டுக்கொண்டேன். முக்கியமான தலைவர்களுக்கு நல்ல வசதிகள் கொடுக்கப்படுவ துண்டென்றும், காந்திஜீ எப்பொழுதுமே நன்கு நடத்தப்படுவார் என்றும், அவர் விரும்பும் உணவு அவருக்குக் கிடைக்கக் கூடு மென்றும், வெளியிலுள்ளோருடன் அவர் நடத்தும் கடிதப் போக்கு வரத்திலும் அதிகாரிகள் தலையிடுவ தில்லை யென்றும் அவர்கள் கூறினர். மற்றவர்களோ சுதந்திரமாயுள்ள மக்களுடன் அவ்வளவு தாராளமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ள முடியாது என்றும் சிறையிலிருக்கும் காங்கிரஸ் அங்கத்தினர்கள் தப் பித்துப்போக முயற்சித்ததேயில்லை யென்றும், ஏனெனில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் பகிரங்கமாகச் சட்ட மறுப்புச் செய்து, வேண்டுமென்றே கைது செய்யப்பட இசைகிறார்கள் என்றும் நேரு விவரித்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எதிராக நடத்தப்படும் காந்திஜீயின் சத்தியாக்கிரக இயக்கங்களில் மறைந்து வேலை செய் வதோ, இரகசிய வேலையோ இருந்ததில்லை. காங்கிரஸ், முதலில் எதிர்க்கும் எண்ணத்தைப் பகிரங்கப்படுத்திப் பின்னர் எதிர்க்கும். ஒருவேளை காங்கிரஸ் கைதி தப் பித்து ஓடினுரென்றால், அது, உடனடியாகச் சட்ட

மறுப்புச்செய்து, மீண்டும் சிறைக்கு வருவதற்காகவே இருக்கும்.

வரப்போகும் இயக்கத்தைக் குறித்துக் காந்திஜீயுடன் பூரணமாக ஒத்த மனோபாவத்துடன் இப்போது நேரு இருந்தார். ஜனாதிபதி ரூஸ்வெல்ட்டோ, சியாங்-கே-ஷேக்கோ, அல்லது வேறு யாருமோ இந்திய நிலைமையில் தலையிட்டு, ஆங்கிலோ-இந்தியர்களின் நெருக்கடியைத் தீர்ப்பார்கள் என்றும், அதனால் பிரிட்டிஷாருக்கு விரோதமாக எதிர்ப்பு ஒன்று திரட்டப்பட வேண்டியது அனாவசியம் என்றும் அவர் நம்பியிருந்ததால் காந்திஜீயைப் பின்பற்றுவதற்கு அவர் தயங்கினார். ஜனநாயக நாடுகளின் பெரிய உத்தியோகஸ்தர்கள் பலர் அச்சு நாடுகளின் எதிர்ப்பாளர்களாக ஆவதற்கு முன்பே நேரு அச்சு நாட்டு எதிர்ப்பாளராக இருந்தார். ஜனநாயக சர்க்கார்களின் சமாதானக் கொள்கைகளை அவர் எதிர்த்திருக்கிறார். ஜப்பானியர், முஸோலினி, ஹிட்லர் ஆகியோருக்கு முழுதும் விரோதமானவரென்று, அவர் பெயர் வாங்கியிருக்கிறார். அச்சு நாடுகளுக்கு விரோதமாகப் போர் செய்யும் பிரிட்டிஷாருக்கு இன்னல் விளைக்க அவர் விரும்பவில்லை. ஆனால் கீழ்த்திசைகளில் அவர்கள் அனுபவித்த பிரதிகூலங்களைப்போல இந்தியாவிலும் ராணுவ வாபஸ் ஏற்படாமல் காப்பதற்குரிய முறைகளை எடுத்துக் கொள்ளுமாறு பிரிட்டிஷாரைப் பலவந்தப்படுத்த வேண்டுமென அவர் உணர்ந்தார். தங்களுக்குக் கிடைத்த சேனை பலத்தைக் கொண்டு இந்தியாவைப் பிரிட்டிஷார் வெற்றிகரமாகக் காப்பாற்றுவார்கள் என்று அவர் நினைக்கவில்லை. எனவே இந் நாட்டைக் காக்க, இந்திய மக்களின் உதவியைப் பெறுவதற்குரிய முறைகளைக் கையாள, பிரிட்டிஷாருக்கு விருப்பம் இருக்கவேண்டும் என்றார்.

ஜூன் 10, 1942

சேவாகிராமத்தில் நான் தங்கியிருக்கும் கடைசி நாள் இதுதான். காலை 5 - மணிக்கு எழுந்தேன். நேரு அதற்கு முன்பே எழுந்து காந்திஜீயுடன் பேசுவதற்குப் போய் விட்டார். அவர் 7 மணிக்குத் திரும்பினார். அவரும், காங்கிரஸ் தலைவர் ஆஸாதும் இன்று வார்தா செல்வ தாகவும், அவர்களுடன் சில அந்தரங்கப் பேச்சுவார்த்தை கள் நடத்துவதற்குச் சீக்கிரமே காந்திஜீயும் அவர்களைப் பின் தொடர்வாரென்றும் அவர் கூறினார். நான் அவர் களுடன் வார்தா சென்று, அங்கிருந்து ஹைதராபாத்துக்கு ரயில் ஏறுவது என்று நாங்கள் ஏற்பாடு செய்து கொண்டோம். ஆசிரம வாசிகள் எனக்கு விடையளிக்க வெளித் தோன்றினர். அவர்கள் அனைவரும் மிக இனிமை யானவர்கள்; என்னிடம் மிக அருமையுடன் நடந்து கொண்டார்கள் என்பதை உணர்ந்தேன். மகாதேவ தேசாய் வந்து என்னை வேறுபக்கமாக அழைத்து, காந்திஜீ கைது செய்யப்படக்கூடுமோ என்பது பற்றி என்னிடம் பேசினார். ஜூன் மாதம் 17-ந் தேதி காந்திஜீ கைது செய்யப்படலாமென்ற தாம் கேட்ட வதந்திகளைக் கூறினார். அதற்கு நான் சந்தேகப்படுவதாகவும், காங்கிரஸ் சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்கும் தீர்மான மொன்றை இறுதியாகக் கைக்கொள்ளும் வரையில் பிரிட்டிஷார் காத்திருப்பார்களென்றும் என் எண்ணத் தைத் தெரியப் படுத்தினேன். காந்திஜீ வைஸ்ராயைப் பார்க்க விரும்புவதினால் அப்பேட்டியை நான் ஏற்பாடு செய்வேன் என்று நம்பியிருந்த தேசாய்க்கு இப்பொழுது நான் புதுடில்லிக்குப் போகவில்லை என்பது வருத்தந் தரக் கூடியதா யிருந்தது என்றார். வைஸ்ராயுடன் பேச முடிந்தால் அவர்கள் ஒருவித முடிவுக்கு வரக்கூடும் என்று காந்திஜீ நம்பியதாகத் தேசாய் கூறினார்.

ஏறக்குறைய நடுப் பகலில்—உஷ்ண நிலை 110 டிக்கிரியிருக்கலாம்—ஆஸாத், நேரு, நான் மூவரும் காரில் ஏறி உஷ்ணம் மிகுந்த, தூசி நிறைந்த ரஸ்தாவின் வழியே வார்தாவிலுள்ள காங்கிரஸ் விடுதிக்குப் பிரயாணமானோம். அது ஐந்து மைல் தூரத்திலிருக்கிறது. ஆஸாத், பெரிய உருவமும், இறுகிய உடலும், பெரிய தலையும். சிறிய நரைத்து அடர்ந்த தாடியும், தலையில் நரைத்த ஒட்டி வெட்டப்பட்ட மயிரும், உரத்த குரலுமுடையவர். இந்தியர்களிற் பெரும்பாலோரைவிட அவருடைய தோல் மென்மையானது. அவருடைய குடும்பம் நானூறு வருடங்களுக்கு முன்பு அரேபியாவிலிருந்து இந்தியாவுக்கு வந்தது. அவர் இந்தியாவிலுள்ள பிரபலமான முஸ்லிம்களுள் ஒருவர். அவர் குரானை உருது பாஷையில் மொழிபெயர்த்திருக்கிறார். இஸ்லாம் சரித்திரத்திலும், அரேபியக் கல்வியிலும் அவர் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட நிபுணராவார். எவரும் அவரை மௌலானு என்று தான் அழைப்பார்கள். இதன் அர்த்தம் முஸ்லிம் பண்டிதர், மத குரு என்பதாகும்.

நாங்கள் மூவரும் விடுதியில், குளிர்ந்த ஓர் அறையில் உணவு அருந்தினேம். எட்டு நாட்களுக்குப் பிறகு முதல் தடவையாக நான் மின்சார விசிறியினல் ஏற்படும் சுகத்தை அனுபவித்தேன். உணவுக்குப் பிறகு ஆஸாதைப் பேட்டி கண்டேன். நேரு மொழி பெயர்த்தார். ஆஸாதுக்கு ஆங்கிலம் தெரியும். ஆனல் பேசத் தயங்குகிறார். எனவே நேரு என்னுடைய கேள்விகளை மொழிபெயர்க்கவில்லை. ஆஸாதின் பதில்களைத்தான் மொழிபெயர்த்தார். கிரிப்ஸுடன் பெரும்பாலும் பேச்சு வார்த்தைகள் நடத்திய ஆஸாத், தமக்குக் கிரிப்ஸ் ஓர் ஏமாற்றமாகவே தோற்றமளித்தார் என்றார். அவர் இந்தியாவின் நண்பராகக் கிரிப்ஸ் இருப்பாரென எதிர்

பார்த்தார். ஒரு புதிய இந்திய தேசீய சர்க்கார் ஏற்படுமென்றும் அது பொறுப்புள்ள சபை ஒன்றின் மூலம் காரியத்தை நடத்துமென்றும் அதனுடைய திட்டங்களில், இங்கிலாந்து மன்னர் அந்நாட்டு அரசியலில் அதிகம் தலையிடாதது போல், வைஸ்ராய் தலையிடுவது குறைவாகவே யிருக்குமென்றும் கிரிப்ஸ் அவரிடம் தெளிவாகக் கூறினார். இவ்வெண்ணத்தின் பேரில்தான் கிரிப்ஸுடன் நடந்த பேச்சுவார்த்தைகள் ஆரம்பமாயின. இந்தியாவின் பாதுகாப்பைப் பிரிட்டிஷ் பிரதம சேனாதிபதிக்கும், இந்தியப் பாதுகாப்பு மந்திரிக்குமிடையே இருகூறுக்கும் கொள்கையை அநேகமாக அவர்கள் ஒப்புக் கொண்டனர். பிறகு திடீரென்று, ஏப்ரல் ஒன்பதாம் தேதி கிரிப்ஸ் ஆஸாதிடம், பிரிட்டிஷ் சர்க்கார் வைஸ்ராயின் விசேஷ அதிகாரத்தைக் (Veto) கைவிட மறுக்கிறதென்று கூறியதாகச் சொன்னார். அதன் பிறகே கிரிப்ஸுடன் நடத்திய பேச்சு வார்த்தை முறிந்தது. கிரிப்ஸ் முதலில் வாக்குறுதி கொடுத்து விட்டார்; பின்னர் லண்டனிலுள்ளோர் தம் வாக்குறுதியை நிறைவேற்ற விடமாட்டார்களென்று பின்னால் அறிந்தார் என்பது ஆஸாதின் துணிபு. தற்காலிகமாக இந்திய கூட்டுசர்க்கார் ஒன்றை அமைப்பதுதான் பிரிட்டனுக்கும், இந்தியாவுக்குமிடையே ஒப்பந்தம் செய்து கொள்வதற்குத் திறவு கோலாகும் என்று ஆஸாத் அறிவித்தார். இம் மந்திரி சபையில் காங்கிரஸ் பெரும்பான்மையான ஸ்தானங்களை எதிர்பார்க்காது என்றும் ஆஸாத் கூறினார்.

கிரிப்ஸ் தோல்விக்குப் பிறகு இந்திய மனோநிலை என்னவென்று அவரிடம் நான் கேட்டேன். அதற்கு அவர், "ஒரு புறம் பலவீனமும் மற்றொரு புறம் எதிர்ப்பும் காணப்படுகிறது. ஆனால், முக்கியமாக பிரிட்டிஷ் சர்க்காருடன் சமரஸமாகப் போகும் முயற்சி பயனற்றதே

என்ற ஓர் உணர்ச்சியிருக்கிறது. பிரிட்டிஷார் எதையும் விட்டுக் கொடுப்பதில்லை எனத் தீர்மானித்து விட்டனர். அநேக முஸல்மான்களும் இதே கருத்துடையவர்களாகத் தான் இருக்கிறார்கள்" என்றார்.

இந்தியாவிலுள்ள தற்கால அரசியல் நிலைமையில், எந்த முஸ்லிம் தலைவரும் சுதந்திரத்தை எதிர்ப்பதற்கு இல்லை என்று ஆஸாத் கூறினார். முஸ்லிம் லீக் பிற் போக்குச் சக்தியுடையதென்றும், பெரும்பாலும் நிலச் சுவான்தார்களின் ஆதரவிலேயே நடப்பதென்றும் அவர் கூறினார். "இந்தியாவின் முஸ்லிம்களில் 95 சத விகிதம் இந்து பரம்பரையினரே. எஞ்சியோர் முஸ்லிம் படையெடுப்பாளருடன் வந்தவர்கள். ஆனால் தம் குடும்பம் உட்பட்ட அப்படி வந்தவர்கள், எல்லாரும் பிறரோடு ஒன்று கலந்து விட்டனர். வங்காளத்தில் இந்துக்களும், முஸ்லிம்களும் வங்காளியே பேசுகிறார்கள்; உடையிலும், வாழ்க்கையிலும் ஒரே மாதிரி" என்று காந்திஜீ என்னிடம் கூறியபடியே ஆசாதும் கூறினார். "மதராஸில் எல்லோ ரும் தமிழ் பேசுகிறார்கள். கிராமங்களில் மத வேறு பாடுள்ள சமூகங்களுக்கிடையே வித்தியாசங்கள் மிகக் குறைவு. ஜின்னா பாகிஸ்தானை விரும்பவில்லை. அது இந்துக்களுக்கு விரோதமான ஒரு பேரச் சீட்டுத்தான்; இதை இங்கிலாந்து அவருக்குக் கொடுத்து உதவியிருக் கின்றது" என ஆஸாத் விளக்கினார்.

முஸ்லிம்கள் உண்மையிலேயே பிரிந்து போக விரும்பினால் இந்தியாவில் உள்ள யாரும் அவர்கள் இந்திய ஐக்கிய சர்க்காரிலேயே சேர்ந்திருக்கவேண்டு மென விரும்பமாட்டார்கள் என்று நேரு, ஆஸாத் இருவரும் எனக்கு உறுதியளித்தனர். "எப்படியிருப்பி னும், கல்யாணத்துக்கு முன் விவாக ரத்து செய்வதில் எனக்கு நம்பிக்கையில்லை. இந்துக்களும், முஸ்லிம்களும்

றொன்று சேர்ந்து வாழ முயற்சித்து அது தோல்வியுறு மானல் அதன் பிறகு பிரிவினை உண்டாக்கலாம். ஆனால் பெரும்பாலான முஸல்மான்கள் இந்தியாவின் ஒற்றுமை யில் நம்பிக்கை வைத்திருக்கின்றனர். அதை விகல்ப மின்றி நடை முறையில் பரிக்ஷித்துப்பார்க்கு முன்பாக, அவ் ஒற்றுமையைத் தகர்ப்பதை அவர்கள் விரும்ப வில்லை." என்று ஆஸாத் கூறினர்.

பிற்பகல் 3 மணிக்கு, காந்திஜீ திடீரென விடுதிக்குள் வந்தார். அவர் வந்து சேர்ந்த பொழுது நான் வாயிலின் அருகில் இருந்தேன். அவர் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. என்னையும், ஆஸாதையும், நேருவையும் வார்தாவுக்கு கொண்டு வந்த கார், காந்திஜீயையும் தேசா யையும் அழைத்து வரத் திரும்பவும் சேவாக்கிராமத்துக்கு அனுப்பப்பட்டது. வார்தாவுக்கு ¾ மைல் தூரத்தில் வந்ததும் கார் யந்திரப்பிசகால் நின்றுவிட்டது. காந்திஜீ இறங்கி, பிற்பகலில், தகிக்கும் வெயிலில் அவ்வளவு தூரம் நடந்தே வந்திருக்கிறார். வெற்றித் தோற்றத் துடன் விடுதியை யடைந்தார். இத் தொழில் யுகத்தின் இயந்திர வெற்றியை நம்பமுடியாமலிருப்பது குறித்துப் பேசினர். சில நிமிடங்களுள் ஆஸாதும், நேருவும் காந்திஜீயுடன் அந்தரங்கமாக அறையில் கூடிப் பேசினர். நான் திறந்த கதவின் வழியாக அவ்வறையி னுள் நுழைந்தேன்; ஆனால் அவர்கள் இந்துஸ்தானியில் பேசிக்கொண் டிருந்தபடியால் நான் வெளியேறினேன். பின்னர் இந்தியாவில் உள்ள அஸோஸியேடட் செய்தி ஸ்தாபனத்தின் வாலிப நிருபரான க்ரோவெர் என்பவர் பேட்டிக்காக அங்கு வந்து சேர்ந்தார். அவரிடம், காந்திஜீ இந்தியா இப்பொழுது ஒரு பிரேதமென்றும், அப்பிரேதம் யுத்தத்தை ஜயிப்பதற்கு அவ்வளவு உதவி செய்ய முடியா தென்றும் கூறினர். பிரிட்டிஷ் அரசியல்

ஆதிக்கத்திலிருந்து இந்தியா விடுபட வேண்டுமென்று அவர் விரும்பினார். அதன்பிறகு இந்தியா பலம் பெற்று எழுந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் என்றார்.

இரவு 9½ மணிக்கு நான் வார்தாவிலிருந்து புறப்பட்டேன். "நான் போய் வருகிறேன்" என்று கூறிய பொழுது காந்திஜீ உறுதியுடன் கைகுலுக்கித் தம்மை மீண்டும் வந்து பார்க்குமாறு என்னைக் கேட்டுக் கொண்டார்.

நான் இந்தியாவிலிருந்து நியூயார்க்குக்கு ஏழு தினங்களில் பறந்து சென்றேன். நான் திரும்பியவுடனே ஒரு நிருபர் என்னைப் பேட்டி கண்டார். அவர், நான் காந்திஜீக்கு ஓர் மகிழ்ச்சிக் கடிதம் எழுதினேனா எனக் கேட்டார். அப்படிச் செய்யவேண்டுமென்று எனக்குத் தோன்றியதில்லை.

### "என் விமர்சனம்"

தமது கிராமத்தை விட்டு வெளியேறிய பிறகு காந்திஜீ ஜனாதிபதி ரூஸ்வெல்டுக்கு, ஒரு கடிதம் எழுதி எனக்கு அனுப்பினார். இக்கடிதத்துடன் கையினா லெழுதிய சிறு குறிப்பொன்றையும் அனுப்பியிருந்தார். அதில் "இது உங்களுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லையெனில் இதைச் சுக்குச் சுக்காக நீங்கள் கிழித்து எறியலாம். நீங்கள் வேண்டுவது இது அல்ல; வேறொன்று என்றால் அதை நீங்கள் எனக்குக் கூறலாம்" என்று எழுதியிருந்தது. காந்திஜீக்குச் சிறிதும் கர்வமேயில்லை.

காந்திஜீ தவறு செய்தால் அதை ஒப்புக்கொள்ளுவதில் தயங்குவதேயில்லை; அதைப் பகிரங்கமாகவே ஒப்புக் கொள்ள விரும்புகிறார். 1942, மே மாதத்தில், சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் தூதின் முறிவு காரணமாகக்

காந்திஜீ, "பிரிட்டிஷார் வெளியேற வேண்டும்" என்று அறிவித்தார். அவர்கள் சேனைகள் வாபஸாக வேண்டும்; அப்படியின்றேல் தாம் சட்ட மறுப்புப் போராட்டத்தை ஆரம்பிக்கப் போவதாக அவர் சொன்னார். ஆயினும், ஜூன் மாதத்தில் இக் கோரிக்கையை மாற்றிக் கொண்டார். "நான் முன் எழுதியதில் தெளிவாக ஒரு ஓட்டை இருந்தது" என்று அவருடைய வாராந்திரப் பத்திரிகையான ஹரிஜனில் ஒரு கட்டுரையில் அவர் ஒப்புக் கொண்டார். "என்னைப் பேட்டிகாண்போர் பலருள் ஒருவர் அவ் ஓட்டையைக் கண்டு பிடித்ததும் உடனே நான் அதைப் பூர்த்தி செய்தேன். எவ்வளவு தியாகங்களைச் செய்யவேண்டி வந்தாலும் அஹிம்சைப் போரில் ஈடுபட்டவர்கள் உண்மையுடன் தான் நடந்து கொள்ளவேண்டும். எனது பலவீனத்தால் பொதுமக்கள் கஷ்டப்பட வேண்டியதிருக்கிறது. தோல்விகளைக் கொடுக்கும் சில முறையைக் கைக் கொள்ளுமாறு நேச தேசங்களைக் கேட்கும் அக்குற்றத்திற்கு நான் உடந்தையாயிருக்க மாட்டேன். திடீரென நேசத்துருப்புகள் வாபஸ் ஆவது இந்தியாவில் ஜப்பானின் ஆக்கிரமிப்புக்கும், சீனாவின் நிச்சயமான தோல்விக்கும் காரணமாகும். என் செய்கையின் காரணமாக, இம்மாதிரியான துன்பங்கள் வருவதை நான் விரும்பவே மாட்டேன். ஆகையினால் இந்தியாவுக்குச் சுதந்திர மளிக்க வேண்டுமென்னும் எனது கோரிக்கையை ஒப்புக்கொண்டாலும், இந்தியாவை ஜப்பானியர்கள் ஆக்கிரமிப்பதைத் தடுப்பதற்கு நேச தேசங்கள் இங்கு இருப்பது அவசியம் என்று கருதும் பட்சத்தில் அவை அப்படியே செய்யலாம் என்று நான் உணர்கிறேன்" என்றும் அவர் எழுதியிருக்கிறார்.

சாதாரண அரசியல் வாதி ஒருவன் தன் பதவியைத் தேடும்பொழுதோ, தன்னுடைய கொள்கையை ஒப்புக்

கொள்ளச் செய்யும் பொழுதோ நீங்கள் அவனுக்கு உதவி செய்தால் அவன் உங்களுக்கு அமைதியையும், செல்வத்தையும், குறைந்த வரிகளையும், அதிக லாபங்களையும் ஏன், உண்மையில் சந்திரனையும், நட்சத்திரங்களையும் கூட அளிப்பதாக வாக்குறுதி கொடுப்பான். காந்திஜீயின் வாழ்க்கை லட்சியம் தம் தேசத்தின் சுதந்திரமே. எனவே, அவர் தமது கோரிக்கை நிறைவேற்றப்பட்டால் இந்தியாவில் எல்லாம் நன்மையாகவே யிருக்கும் என்று இங்கிலாந்துக்கும், உலகத்தாருக்கும் உறுதிகூற வேண்டும் அதற்குப்பதிலாக அவர் கூறுவது: "பிரிட்டிஷார் வெளியேறிய பிறகு இங்கு அமைதியிருக்குமென நான் நிச்சயமாகக் கூற முடியாது. குழப்பங்கள் ஏற்படலாம். பிரிட்டிஷார் அமைதியான முறையிலே வெளியேறி இந்தியாவைக் கடவுளிடம் ஒப்புவிக்கட்டும்! இத்தகைய உண்மையற்ற வார்த்தைகளை யறிய நீங்கள் விரும்பாதிருக்கலாம். அதை அராஜகம் என்றும் கூறுங்கள். அதை விட மோசமான நிலைமை இந்தியாவுக்கு வேறொன்றும் ஏற்பட்டு விடாது. ஆனால் அராஜகம் ஏற்படாமலும் இருக்கலாம். நாங்கள் அதைத் தடுப்பதற்கு முயற்சிப்போம்" என்று கூறுகிறார். "பிரிட்டிஷார் வெளியேறினால் குழப்பங்கள் ஏற்படுமெனக் காந்திஜீ முன்னதாகவே கூறுகிறார்" என்று காந்திஜீயின் விமர்சகர்கள் கூறுவதற்கு இக்கூற்று இடமளிக்கிறது.

பிரிட்டிஷார் இந்தியர்களுக்கு அதிகாரத்தை மாற்றியதும், இந்திய சேனை கலைக்கப்பட்டு விடும் என்று காந்திஜீ உறுதியாகக் கூறுகிறார். ஆனால், "இயற்கையாக எந்த இந்தியனும் தன் சொந்த உதவியைப் பட்டாளத்தில் சேருவதின் மூலமோ, பொருளுதவுவதன் மூலமோ செய்வதற்கு எவ்வித தடையும் இருக்காது" என்று சற்று முன்னதாகக் கூறினார். மற்றொரு சமயம் (ஆகஸ்டு,

1942 ஹரிஜனில்) "இந்தியாவின் கோடிக்கணக்கான மக்களிலிருந்து எண்ணற்ற போர்வீரர்களைப் பயில்விக்க முடியாதா? உலகத்தில் உள்ள மற்றவர்களைப் போல அவர்களும் சிறந்த முறையிலே சண்டைபோட மாட்டார்களா?" என்று அவர் எழுதினர். இவைகளின் அர்த்தம்தான் என்ன? இதனுல் காந்திஜீ முன்னுக்குபின் முரணுகப்பேசுகிருர் என்று ஆய்விடுமா? அப்படியில்லை. அவர் "தாங்களாகவே வலியச் சேர்த்தவர்களைக்" கொண்ட இந்திய சேனையைக் கலைக்க விரும்புகிருர்; ஏனெனில், அவர்கள் பசியோடு இருந்தார்கள். போர் வீரர்களாய்ச் சேர்ந்தால் நன்ருய்ச் சாப்பிடலாமென எதிர் பார்த்தார்கள். அல்லது பலவந்தமாக யுத்தசேவையில் ஈடுபடுத்தப்பட்டார்கள். ஆனுல் பிறகு இந்தியா, தன்னுடைய சொந்த தேசீய சேனையைத் திரட்டலாம். காந்திஜீயின் வார்த்தைகளை விஷமமாகவும் சந்தர்ப்பத்துக்கு விரோதமாகவும் எவ்வளவு சுலபமாய்த் திரித்துக் கூறமுடியும் என்பதை இது காட்டுகிறது.

காந்திஜீ உண்மையில் தம் உள்ளத்தைத் திறந்து காட்டி, உள்ளே கருவிகள் எவ்வாறு வேலை செய்கின்றன என்பதைப் பார்க்கப் பேட்டியாளர்களை அனுமதிக்கிருர். காந்திஜீயுடன் நெருங்கி அளவளாவுவதால் உண்டாகும் இன்பத்தின் ஒரு பகுதி இதுவே. பெரும்பாலோர் பேசும் பொழுது தங்களை யாரும் எதிர்க்க முடியாதவாறு தங்களது கருத்துக்களை முடிந்த பூரணமான உருவத்திலேயே வெளியிடுவார்கள். காந்திஜீயிடம், அப்படியல்ல. தமது சிந்தனையின் ஒவ்வொரு படியையும் அவர் உடனுக்குடன் வெளியிடுகிருர். இது, எழுத்தாளர் முதலில் தன்னுடைய கதையின் முதல் கையெழுத்துப் பிரதியையும், பிறகு இரண்டாவதையும், கடைசியாக மூன்ருவதையும் வெளியிடுவதுபோல் இருக்கின்றது. வாசகர்கள் இதை எதிர்த்து,

கதையமைப்பு மாறிவிட்டதாகவும், நேசிக்கப்பட்ட கதா நாயகன் கொடியவனுக மாற்றப்பட்டு விட்டதாகவும், இன்னும் பலவாருகவும் கூறலாம். காந்திஜீ இத்தகைய எதிர்ப்புக்களைப் பொருட்படுத்த மாட்டார். அவர், "ஆமாம், என்மனதை நான் மாற்றிக்கொண்டு விட்டேன்" என்றே கூறுவார். உண்மையில் அவர் நன்ருகச் சிந்திக் கிருர் என்றே கூறவேண்டும். மனப்போக்கு முழுதையும் பதிவு செய்து விடலாம். இது சிலரைக் குழப்பத்துக் குள்ளாக்குகிறது; அவர் முன்னுக்குப்பின் முரணுகப் பேசு கிருர் என்ருே மோசக்காரர் என்ருே சொல்லுமாறு சிலரைத் தூண்டுகிறது; காந்திஜீ இவைகளை லட்சியம் செய்வதில்லை. அவர் வயது முதிர்ந்தவராய் தன்னலமும் உலகப் பற்றும் அற்றவராய் இருப்பதால் தம் செயல்கள் மாந்தர் உள்ளத்தில் தோற்றுவிக்கும் அபிப்பிராயங்களைக் குறித்துக் கவலைப்படாமலிருக்கலாம். நான் இந்தியாவில் பேட்டிகண்ட பல இந்தியர்களும் ஆங்கிலேயர்களும் தங்கள் வார்த்தைகளைப் பிரசுரப்படுத்தக் கூடாதென என்னிடம் எச்சரித்தனர். காந்திஜீயோ, அவரைப்பற்றி நான் என்ன எழுதுவேன், எப்படி எழுதுவேன் என்பது பற்றிச் சற்றும் கவலைப்படவில்லை. அவர் என்னைப் பார்த்துப் பேசவில்லை; அவர் என்னேடு பேசினுர். இந்தியாவின் முஸ்லிம் லீக் தலைவரான முகம்மதலி ஜின்ஞ வுடன் பல மணி நேரங் கழித்தேன். அவர் மிகத் திறமை வாய்ந்த அரசியல் அறிஞர்; தேர்ச்சி பெற்ற விவகார ஞானம் படைத்தவர். பழுதற்ற அரசியல் வாதி; ஆனுல் அவர் என்னைப் பார்த்தே பேசினுர். அவர், தாம் சொல்லு வதை நான் ஒப்புக் கொள்ளுமாறு செய்ய முயற்சித்தார். அவரிடம் ஒரு கேள்வி கேட்டபோது, கிராமபோனில் இசைத் தட்டை வைத்து முடுக்கி விட்டது போலவே எனக்குத் தோன்றிற்று. அவர் பதிலே முற்றிலும், அவர்

எழுதிய புத்தகங்களில் படித்தோ, அல்லது அதற்குமுன் கேட்டோ இருக்கின்றேன். ஆனால், நான் காந்திஜீயை ஒரு கேள்வி கேட்டபோது அது ஏதோ ஒரு பெரும் சிந்தனா சக்தியையும் ஆக்கத்தையும் கிளப்பி விட்டு விட்ட தாகவே தோன்றிற்று. அவருடைய உள்ளம் வேலை செய்வதைக் கண்ணால் பார்க்கவும் காதால் கேட்கவும் முடிகிறது. ஜின்னாவிடமோ இசைத்தட்டில் ஊசி உராயும் ஓசையைத்தான் நான் கேட்கமுடிந்தது. ஜின்னா, தம்முடைய முடிவுகளைத் தவிர வேறு ஒன்றையும் கொடுக்க வில்லை. ஆனால், காந்திஜீ ஒரு முடிவை நோக்கிப் போகும் பொழுதே நான் அவரைப் பின்பற்ற முடிந்தது. எனவே, ஜின்னாவைவிடக் காந்திஜீ என்னுள்ளத்தில் கிளர்ச்சி உண்டாக்கினார். காந்திஜீயிடம் சரியான முறையில் அணுகினால், புதிய புதிய சிந்தனை ஊற்றுக் களை நீங்கள் காண்பீர்கள். அவரைப் பேட்டிகாணு வது காணாத தொன்றைக் கண்டுபிடிக்கப்போகும் கப்பல் பிரயாணமாகவே இருக்கிறது. அவர் சொல்வதைக் குறித்து சில சமயங்களில் அவரே ஆச்சரியப்படுகின்றார். அவர் பேசும்பொழுது, எங்களுடன் இருந்த அவருடைய காரியதரிசிகள் அவருடைய கருத்துக்களின் புதுமையைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். இதனால்தான், காந்திஜீ யைப் பற்றியும், காந்திஜீயிடமிருந்தும் அவ்வளவு நிறைய நான் கற்றுக்கொள்ள முடிந்தது. அவர், விஷயத்தையும் அபிப்பிராயங்களையும் மட்டும் என்னிடம் கூறவில்லை. அவர் தம்மைத் தாமே எனக்குக் காட்டினார். தமக்கு விரோதமாக உபயோகிப்பதற்கு வெடிமருந்தையும் அவரே வழங்கினார் என்றும் கூறலாம். உதாரணமாக காந்திஜீ தம்முடைய வாராந்திர மௌனத்துக்கு இல்லாத குணம்சங்களைத் தாம் அதற்கு ஏற்றி இருப்ப தாக என்னிடம் சொல்ல வேண்டிய அவசியமில்லை

ஆனால் அதுதான் காந்திஜீயின் லக்ஷணம், பெருமை. வெளியார் அறியாதபடி மறைப்பதற்கு அவரிடம் ஒன்று மில்லை. தமது குற்றங்களை அவர் மறைப்பது மில்லை. இது சில அரசியல் வாதிகளுக்குக் குழப்பத்தையும் தொந்தரவையும் கொடுக்கிறது. உதாரணமாக, தமக்கு சந்தர்ப்பம் கிடைத்தால் ஜப்பானுக்குப் போய் யுத்தத்தை நிறுத்த முயற்சிப்பதாக அவர் கூறுகிறார். உடனே தொடர்ந்து, தமக்குப் போவதற்குச் சந்தர்ப்பமே கிடைக் காதென்றும் அப்படிக் கிடைத்துப் போனால் ஜப்பான் சமாதானத்துக்கு வராதென்றும் அவர் அறிவதாகக் கூறுகிறார். பின், ஏன் தாம் ஜப்பானுக்குப் போவதாகக் கூறுகிறார்? ஏனெனில், அவர் அதைச் சிந்தித்ததினால் தான். சமாதானவாதி என்ற முறையில் அவர் போர்களை நிறுத்துவதற்கு உண்மையிலேயே முற்பட விரும்புகிறார். இந்நம்பிக்கை சாத்தியமற்றதென்னும் விஷயம் அதைச் சொல்லக்கூடாதென்பதற்குக் காரணமாகாது என்பது அவரது கொள்கை.

சில சமயங்களில் சாத்தியமற்ற காலத்திற்கு ஒவ்வாத கொள்கைகளைக் குறித்துப் பேசுவதில் காந்திஜீ சந்தோஷ மடைகிறார். தற்கால நூதன இயந்திரங்களை அவர் கேலி செய்கிறார். காலப் போக்கை மாற்ற முடியாதென்பதை அவர் நன்கறிகிறார். மோட்டார் காரை அவரால் ஒழிக்க முடியாது. ஆனால் அதைப் பற்றிக் கேலி செய்யக்கூடும். சமஷ்டியரசாங்கம் அவசியமில்லையென்று அவர் உறுதி யுடன் கூறுகிறார். சமஷ்டியரசாங்கம் இல்லாமையினால் ஏற்படும் கஷ்டங்களை நீங்கள் சுட்டிக் காட்டினால், அவர் அதற்கிணங்க மாட்டார். மேலும் தொடர்ந்து நீங்கள் தர்க்கித்ததும், "என்னுடைய சொந்தக் கொள்கைகள் எப்படி இருந்த போதிலும், மத்திய அரசாங்கம் ஒன்று இருக்குமென்பது எனக்குத் தெரியும்" என்று அவர்

முடிவாகக் கூறுவார். இதுதான் காந்திஜீயின் விசேஷ குணத்தைக் குறிக்கிறது. அவர் ஒரு கொள்கையை பிரஸ்தாபிக்கிருர்; அதற்காக வாதாடுகிருர்; முடிவில் அது காரியத்தில் செய்ய முடியாதென்று ஒப்புக் கொள்ளுகிருர். அவருடைய உள்ளம் நெகிழுந்தன்மை மிக்கது; இளகியது. ஆனால் செய்கைக்கு வரும்பொழுது அவர் சர்வாதிகாரி ஆகிவிடுகிருர். தமது தர்க்க பலத்தாலும் தம்மைப் பின்பற்றும் மக்களின் பலத்தாலும் அவர் எதிர்ப்பை நசுக்குகிருர். ஆனால், அவருடைய சிந்தனையில் எவ்வித சர்வாதிகார மனப்பான்மையும் இல்லை. தான் செய்தது தவறு என்று எந்த சர்வாதிகாரியும் ஒப்புக் கொள்வதில்லை. ஆனால் காந்திஜீயால் அது முடியும். அவர் பன்முறை அப்படிச் செய்திருக்கிருர்.

காந்திஜீ பெரிதும் இந்துவின் குணமுடையவரே. இந்து மதம் சகிப்புத் தன்மையுள்ள மதம்; கடற் பஞ்சையொத்து எதையும் கிரகிக்கக் கூடியது. இந்துக்கள் கடவுள் ஒருவரே என்ற நம்பிக்கையுள்ளவர்கள். சிலர் ஏசு கிறிஸ்துவையும் நம்புகிருர்கள். இன்னும் சிலர் நாஸ்திகர்கள். கடவுட் கொள்கைகள் ஒருபுறமிருக்க இந்து மதம் வாழ்க்கையின் வழிகாட்டி என அவர்கள் உரிமை கொண்டாடுகிருர்கள். சிலர் விக்கிரங்களை ஆராதிக்கின்ருர்கள், ஒரு காலத்தில் ஆடவர்களாகவும் பெண்களாகவும் இருந்து இப்பொழுது கடவுளாக்கப் பட்டவர்களையும், மலைகளையும், நதிகளையும் சிலர் வணங்குகின்றனர். முற்றிலும் எதிரிடையான ஏகேஸ்வர வாதம், விக்கிரக ஆராதனை என்னும் முற்றிலும் எதிரான இவ்விரண்டுக்குமிடையே எவ்வித முரண்பாடும் இருப்பதாக அவர்கள் காணவில்லை. "நயாகரா நீர்வீழ்ச்சி இந்தியாவில் இருக்குமாயின் அதுவும் ஒரு கடவுளாகியிருக்கும்" என்று ஓர் இந்தியர் என்னிடம்

கூறினர். இந்து மதமென்னும் * ஒலிம்பஸ் பர்வதம் ஜன நெருக்க மதிகமுடையது. எனினும் மகாத்மா காந்திக்கென அதில் ஓர் இடம் பிரத்தியேகமாக ஒதுக்கி வைக்கப் பட்டிருக்கிறது என்று பல இந்துக்கள் நிச்சயமாக நம்பு கின்றனர்.

மக்களுக்காகத் தம்முடைய வாழ்க்கையை அர்ப்பணம் செய்து விட்டார் என்பதுதான் காந்திஜீயைப் பற்றிப் பொதுவாக இந்தியர்களின் உணர்ச்சியாகும். மக்களைப் போலவே அவர் வாழ்கிறார்; அவர்களுடைய கஷ்டங் களிலும், வறுமையிலும் அவர் பங்கு கொள்ளுகிறார். அவருக்குப் பணமும் இல்லை; சொத்தும் இல்லை. அவர் விரும்புவது ஒன்றே ஒன்று தான்—அது தான் சுதந்திர இந்தியா. இதே விஷயத்தைக் கோடிக்கணக்கான இந்தியர்களும் விரும்புவதினால் காந்திஜீயே தேசத்தின் தாகத்துக்குச் சின்னமாக விளங்குகிறார்.

இந்தியாவில் எப்பகுதியிலாயினும் இந்தியர் ஒருவர் பிரிட்டிஷாரைக் குறை கூறினால் அவர் ஏன் பிரிட்டிஷ் எதிர்ப்பாளராய் இருக்கிறார் என்பதை எனக்கு விவரிக்கு மாறு நான் வற்புறுத்துவேன். பிரிட்டிஷ் சர்க்காரில் உயர்ந்த சிவில் சர்வீஸ் உத்தியோகம் வகிக்கும் இந்திய முஸல்மானிடம், "ஏன் பெரும்பான்மையான இந்தியர்கள் பிரிட்டிஷ் எதிர்ப்பாளர்களாய் இருக்கின்றார்கள்?" என்று கேட்டேன்.

"அப்படி ஏன் நாங்கள் இருக்கக் கூடாது? இது தான் நீங்கள் கேட்டதை விடச் சரியான கேள்வியாகும். தன்னை ஆளுகின்ற அந்நிய தேசத்தை எந்த தேசமும் விரும்ப மாட்டாது" என உரத்துக் கூறினார்.

---

* ஒலிம்பஸ் மலை என்பது கிரீஸ் நாட்டிலுள்ளது. பழைய கிரேக்கப் புராணங்கள் ஒலிம்பஸ் பர்வதம் தான் தங்கள் கடவுள் களின் வாசஸ்தலம் என்று கூறுகின்றன.

வேறு யாரையும்விடக் காந்திஜீ தம்முடைய தேசத்தின் விடுதலைக்காகப் பல வருடங்கள் கஷ்டப்பட்டிருக்கிருர். ஆகையால் அவரிடம் நம்பிக்கையுள்ள பல முஸ்லிம்களும், இந்துக்களும், பார்ஸிகளும், தீண்டாதவர்களும் காந்திஜீயின் சிரத்தை மிக்க சிஷ்யர்களாய் இருக்கிருர்கள். அவர்களில் பலர் காந்திஜீயிடம் எண்ணற்ற விஷயங்களில் அபிப்பிராய பேதமுடையவர்கள். இந்து ஆட்சியை ஸ்தாபிக்க விரும்புவதாக அவரைக் குற்றம் சாட்டும் முஸ்லிம்களும் இருக்கின்ருர்கள். ஆனுல், தேசீய விமோசனத்துக்கு அவருடைய மாருத உழைப்பை யாரும் மறுக்கவில்லை. தற்காலத்தில் தேசீயத்தை விரும்புந் தன்மை சாதாரணமானதாகவும், இயற்கையானதாகவும், தாஞக வரக்கூடியதாகவும் இருக்கிறது. இந்தியாவில் இத்தூண்டுதலுக்குக் காரணமான மிகவும் சக்தி வாய்ந்த மனிதர் காந்திஜீதான்.

காந்திஜீ சேவாக்கிராமத்தில் தம் குடிசையில் உட்கார்ந்து கொண்டு, தமக்கு வரும் கடிதங்களைப் படித்துக் கொண்டும் தம்மை வந்து பார்க்கும் இந்தியர்களின் வார்த்தைகளை கேட்டுக் கொண்டும் இருப்பதின் மூலம் இந்திய பாமர மக்களின் பிரார்த்தனைகளை கேட்கவும் அவர்களுடைய உணர்ச்சிகளை அறியவும் முடியுமென்பது அவர் துணிபு. அவர்களுடைய விருப்பத்தைத் தாம் அறிகின்றபடியால் அவர்களுக்காக வேலைசெய்யும் உரிமையும் தமக்கு உண்டு என்று அவர் நம்புகிருர். இந்தியாவும் தாமும் ஒன்று என்கிருர் காந்திஜீ. இந்தியர்களின் விருப்பத்தை யறியத் தம் முழுச் சக்தியையும் செலவிட அவர் தயாராக இருக்கிருர். அதை அவர் கேட்கிருர். அதைத் தாம் சரியானபடி வியாக்கியானம் செய்வதாக அவர் உறுதி கொள்கிருர். இம்மாதிரி உறுதிதான் எப்பொழுதும் தலைவர்களுக்கு ஒரு சக்தியாகவும், வழிகாட்டும்

விளக்கமாகவும் இருக்கின்றது. காந்திஜீக்குப் பொருளாதாரம் பற்றியும் சமூக விஷயம் பற்றியும் தம்முடைய கொள்கைகளிலே சந்தேகம் ஏற்படலாம். அவர் வழிகளையும் காலவரையறைகளையும் திருத்த ஒப்புக் கொள்வார். ஆனால், முக்கிய கோரிக்கையான சுதந்திர விஷயத்திலோ அவர் விட்டுக் கொடுக்க மாட்டார். சமரசத்தை விரும்பவும் மாட்டார். பிசகாமல் நேர்வழியே செல்வார். சுதந்திரத்தைப் பெறுவதற்கே காந்திஜீ தோன்றினரென்று இந்தியர்கள் உங்களுக்குக் கூறுவார்கள். அதற்காக, இறப்பதற்கும் அவர் தயார். இந்தியர்களின் ஒழுக்கங்களிலே மிக உயர்ந்தது தியாகமும் துறவும்தான். காந்திஜீயின் நுட்பபுத்தியும், ஞானமும், உலகத்திலேயே மதப்பற்று அதிகமாயுள்ள தேசத்தில் அவருடைய அபாரமான மதப்பற்றும் மேலும் அவருடைய மேன்மையை விளக்குகின்றது. அவருடைய தேசீய சுதந்திரதாகமும் அந்த லட்சியத்தை நோக்கி அளவு கடந்த ஆர்வத்துடன் அவர் செல்லும் முறையுமே பொது ஜனங்களுக்குத் தூண்டுகோலாய் இருக்கின்றன. சுதந்திர தாகம்தான் அவரிடம் மற்றவைகளைக் காட்டிலும், ஏன்! அஹிம்சையில் அவருக்குள்ள நம்பிக்கைக்கும் மேலே, முதன்மையான இடத்தை அடைந்திருக்கிறது. அவர், நேரு, ஆஸாத், ராஜகோபாலாச்சாரி போன்றவர்கள் சாமாதான வாதிகள் அல்ல என்று தாம் அறிந்திருந்தாலும் அவர்களுடன் மிகவும் நேசமான முறையில் ஒத்துழைப்பார். ஆனால் இந்திய சுதந்திரத்தின் எதிரிகளுடன் ஒருகாலும் அவர் வேலை செய்யமாட்டார்.

சுதந்திரத்திற்காக அவர் வேலை செய்யும் முறையில், காந்திஜீக்கும், கோடிக்கணக்கான இந்தியர்களுக்கும் இடையே, இன்னிசை போன்ற ஓர் ஒற்றுமையிருக்கின்றது. பெரிய தலைவர்களுக்கு இவ்வொற்றுமை அவசியம்; இதுதான் அவர்களுடைய பெருமைக்கு மூலகாரணம்.

வின்ஸ்டன் சர்ச்சில் இஃது அவருடைய பிரசங்கங்களில் தெளிவுபடுத்தி யிருக்கின்ருர். பல சாதாரண ஆங்கிலே யர்கள் தங்கள் அண்டை அயலார்களிடத்திலும், இரவில் தங்களுக்குத் தூங்களேயும் எதைக் கொச்சையாகக் கூறு கிருர்களோ அதையே அவர் (வின்ஸ்டன் சர்ச்சில்) மிகத் திறமையாக மெருகுபடுத்திக் கூறுகிருர். உங்களைப் போலவே, ஆனல் இன்னும் சில சிறந்த முறையிலே இருக் கும் தலைவரையே நீங்கள் பின்பற்றுகிறீர்கள். அரை நிர்வாணமும் அரைப்பட்டினியும் அறிவுவறுமையும் உடைய கோடிக்கணக்கான விவசாயிகளின், தொழிலா ளர்களின் தந்தையாகவும் சகோதரராகவும் காந்திஜீ விளங்குகிருர். இவர்கள் எல்லோரும் தேசீய முயற்சி யின் மூலம் கவுரவத்தையும், செழுமையையும் அடைய விரும்புகிருர்கள். அவர் அவர்களில் ஒருவர். அன்னியர் ஆட்சியை மறுக்கின்றவர்களும், கேவலம் வெளிநாட்டு அதிகாரி ஒருவர் இங்கிருப்பதையுமே பொறுக்காதவர் களான பெரிய ஆலை முதலாளிகள், உயர்ந்த பண்பாட்டை யுடைய எண்ணற்ற இந்தியர்கள் ஆகியோரின் பிரார்த் தனைகளுக்கும் அவர் பதில் அளிக்கின்ருர்.

காந்திஜீயின் வாழ்க்கை ஒரே நோக்கத்தை யுடை யது; அவர் சுதந்திர இந்தியாவை விரும்புகிருர். அதுவும் பெரிய மனிதர்களுக்குள்ள விசேஷகுணம் தான். சர்ச்சி லினுடைய ஒரே நோக்கம், பிரிட்டன் முதன்மையான சக்தியை உடையதாக எப்பொழுதும் இருக்குமாறு காத்து வருவதுதான். லெனினுடையதோ நிலவுரிமை என்னும் சேற்றிலிருந்து ரஷ்யாவைத் தூக்கி விடுவதா கும். லிங்கனுடைய நோக்கம் ஐக்கியம். ஹிட்லa ருடையதோ உலகவெற்றி. பெரிய மனிதர்கள் எல்லோ ரும் நல்ல சிற்பத்தைப் போல் ஒரே கல்லில் (ஒட்டுப் போட்ட பாகங்கள் இல்லை) செதுக்கப்பட்டவர்கள்.

---